படிப்படியான சிறு சேமிப்புகள்
உங்கள் எதிர்கால வளமைக் கோபுரங்கள்

* * * * *

படிப்படியான பல படிவங்களின் இணைப்பே
மாபெரும் கோபுரங்களாக அமைகின்றன.

* * * * *

சிறுகச் சிறுகச் சேமிக்கும் சேமிப்புகள்
செழுமையான உங்கள் எதிர்காலத்திற்கு அடிக்கல் நாட்டி,
நாளடைவில் பெரும் தொகைகளாக வளர்ந்து
உங்கள் எதிர்கால வளமைக் கோபுரங்களாக அமைகின்றன.

* * * * *

**உங்களுக்குப் பெரும் பயன் அளிக்கும்**
**எங்கள் சேமிப்புத் திட்டங்கள் :**

அமுதசுரபி சேமிப்புத் திட்டம்
சிறுசேமிப்புப் பரிசுத் திட்டம் ரூ. 500/- வரிசை
பலநோக்குச் சேமிப்புத் திட்டம்
மாதாந்திர வட்டித் திட்டம்.

தவணைக் கணக்கு 3 வருடத்திற்கும அதற்கு மேலும் 10% வட்டி விகிதம்
மற்ற விவரங்களுக்கு எங்கள் கிளை அலுவலகங்களை அணுகுங்கள்.
உங்களைச் செல்வந்தராக்கும் செழுமைக் கோபுரம்

# பாங்க் ஆப் மதுரை லிட்.

( இந்தியாவின் பெரிய ஷெட்யூல்ட் வங்கிகளில் ஒன்று )

மத்திய அலுவலகம் :
758, அண்ணா சாலை,
சென்னை - 600 002.

பதிவு அலுவலகம் :
33, வடக்கு சித்திரை வீதி,
மதுரை - 625 001.

இராம. முத்தையா
தலைவர்

63-3

உ

சிவமயம்

ஸ்ரீ வயிரவசுவாமி துணை



நகர வயிரவன்பட்டி

## அருள்தரும் வளரொளிநாதர் - வயிரவசுவாமி திருக்கோயில்

# திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலர்


KOVILOOR AND...AR LIBRARY KOVILOOR
33548

பதிப்பாசிரியர் :

டாக்டர் சுப. அண்ணாமலை

துர்மதி ஆண்டு தைத் திங்கள் 18-ஆம் நாள்

**31—1—1982**

உ

சிவமயம்

ஸ்ரீ கற்பகவிநாயகர்துணை

## ஸ்ரீ கற்பகவிநாயகர் வாழ்த்து

மலையிருப்பான்! மடுவினிலும் குடியி ருப்பான்!
மரத்தடியில் குளக்கரையில் மகிழ்ந்தி ருப்பான்!
கலைசுரப்பான்! கற்பகமாம் பெயருக் கேற்பக்
கடைக்கணித்தே திருவளரக் கருணை செய்வான்!
தலைசிறக்கும் வாழ்வளிப்பான்! புகழ்வ ளர்ப்பான்!
தமிழமுதில் மிகமகிழ்வான்! மருதங் கூரில்
நிலையிருப்பான்! பெயர்வாழி! நினைக்கும் அன்பர்
நேயமனை சுற்றமெலாம் நீடு வாழி!

## மதுரை மீனாட்சியம்மை

கையிற் கிளியேந்தும் கன்னி! தமிழ்மதுரை
வையைத் திருநாட்டாள்! வண்டமிழ்க்கே — செய்ய
முறுவலுடன் முன்னொருநாள் முத்தாரம் தந்தாள்!
திருவடியாம் பெற்ற திரு.

கவிஞர்
இராகவன்முத்து,
B.Sc., Dip. Geog., CAIIB

உ

சிவமயம்

## ஸ்ரீ வயிரவர் வாழ்த்து

கறையணி கண்டத் தம்மான்
　　கருத்தினில் தோன்றி னானை
மறையணி பூணு வானை
　　மழுவொடு சூலத் தானைக்
குறையணி அகந்தை யாளர்
　　குணத்தினை அடக்கு வானை
சிறையறு வடுகன் தாளைச்
　　சிந்தையில் வழுத்து வோமே!

அறமெனும் வடிவி னானை
　　அறியாமை பாசம் என்னும்
பிறவியின் தளைகள் நீங்கப்
　　பிறங்கிடும் நேமி பாசம்
அறிவொலி தமருகத்தால்
　　ஆர்த்திங்கே அருளு வானை
நிறைபொருள் வடுக மூர்த்தி
　　நெறிகழல் வழுத்து வோமே!

— ரெ. முத்துக்கணேசன்

அருள்மிகு வயிரவசுவாமி — மூலவர்



அருள்தரும் அண்ணல் வளரொளிநாதர்



அருள்தரும் அண்ணல் வயிரவர் உற்சவத் திருமேனி

உ

**SRI CHANDRAMOULEESWARAYA NAMAHA**

HIS HOLINESS

SRI KANCHI KAMAKOTI PEETADHIPATI

JAGADGURU SRI SANKARACHARYA SWAMI MUTT

KANCHEEPURAM-631 502.

Camp : கோட்டயம்

ஸ்வஸ்தி. ஸ்ரீ நகரவைரவன்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா தைத்திங்கள் 18உ (31—1—1982) ஞாயிற்றுக்கிழமை சிறப்புற நிகழவிருக்கின்றது என்பதை அறிய நாம் மிகவும் ஸந்தோஷமடைகிறோம். அவ்வமயம் சிறப்பு மலர் ஒன்றையும் வெளியிடுவது பற்றியும் ஸந்தோஷம். பல வருடங்களுக்கு ஒருமுறை நடக்கும் குடமுழுக்குவிழா மக்களுக்குப் பெரும் புண்ணியமான கண்காட்சியாகும். ஷை குடமுழுக்குவிழா நல்லவிதமாக நடைபெற்று ஸ்ரீ பைரவர் அருள்கிடைத்து நகர ஜனங்கள் க்ஷேமம் அடையுமாறு நாம் ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்மிருதி

**PRIVATE SECRETARY**

To His Holiness Sri Jagadguru
Shankaracharya, Dakshinamnaya
SRI SARADA PEETHAM
SRINGERI-577 139 (Karnataka)

Rel. No. 10382

Camp. THENKARAI

Date: 22—12—1981

நீங்கள் அனுப்பிய திருக்குட நன்னீராட்டு விழாப் பத்திரிகை கிடைத்து. ஸ்ரீஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பாத கமலங்களில் உங்கள் நமஸ்காரங்களுடன் ஸமர்ப்பிக்கப்பட்டது

மேற்படி திருக்குட நன்னீராட்டு விழா நிர்விக்னமாகவும், சிறப்பாகவும் நடந்து அதில் பங்கு கொள்ளும் ஆஸ்திக மஹாஜனங்கள் எல்லோரும் க்ஷேமமாகவும் ச்ரேயஸ்ஸுடனும் வாழ அனுக்ரஹித்தளித்த மந்திராக்ஷதையும் ஸ்ரீ சாரதா சந்த்ர மௌளீஸ்வரர் பிரஸாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறோம்.

இப்படிக்கு,

(Sd) xxxxxxxxxx

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை

ஜெகத்குரு
ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ
**திருச்சி மஹா சுவாமிகள்**
"ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம
மஹாசமஸ்தானம்"
கெஞ்சேனஹள்ளி
பெங்களூர்-560 039



Jagathguru
SHRI SHRI SHRI
**THIRUCHI MAHA SWAMIGAL**
"Sri Kailash Ashram
Mahasamasthana"
KENCHENAHALLY
Bangalore-560 039

துன்மதி ஹு ஐப்பசி மீ 11வ, 27—10—81வ, ஸ்ரீ பேரன்பு நிறைந்த வயிரவன் கோயில் நகரத்தாாகளுக்கு ஜெகத்குருவின் ஆசீர்வாதம் கொண்டு சிவபுரிசுவாமி யெழுதியதிப்பவும். நகர வயிரவன்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர்க்குழுவினர் அனுப்பிய லெட்டரும் வந்து சேர்ந்தது.

ஸ்ரீ ல ஸ்ரீ ஜெகத்குரு மஹாஸ்வாமிகள் அவர்களும் ஸ்ரீ வயிரவன்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா, நிகழும் துன்மதி ஹு தைமீ 18வ, 31—1—82வ ஞாயிற்றுக்கிழமை நடை பெற இருப்பதறிந்து மிகவும் மகிழ்ச்சியுற்றுர்கள். விழா சிறப்புடன் நடைபெறவும், பூரண ஆசீர்வாதம் அளித்திருக்கிறுர்கள்.

செட்டிநாட்டில் ஸ்ரீ வயிரவன் கோயில் மிகுந்த புள்ளிகள் கொண்ட பெரிய, பழமை வாய்ந்த, பாடல்பெற்ற கோயில் என்றும், ஷை கோயிலில் உள்ள சிற்ப வேலைப்பாடுகள் போல இந்தியாவிலேயே வேறு எங்கும் காண இயலாதுஎன்றும் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணியின் சிகரமாக வயிரவன் கோயில் அமைந்துள்ளது என்றும், திருப்பத்தூரில் உள்ள வயிரவருக்கும், இலுப்பக்குடியில் உள்ள வயிரவருக்கும் மையத்தில் அமைந்துள்ள படியால் அது இருதயஸ்தானமாக விளங்குகிறது என்றும், பூர்வகாலத்தில் இந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வயிரவர் காபாலிகர்களால் பிரதிஷ்டை செய்யப் பட்டவர் என்றும் ஸ்ரீ ல ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்கள் வயிரவன் கோயில் பற்றிய சிறப்புக்களை எடுத்துரைத்தார்கள்.

செட்டிநாட்டில் முதன்முதலாக ஸ்ரீ ல ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களை வரவேற்று, தெரிசனம் செய்து, உபசரித்தவர்கள் வயிரவன் கோயில் நகரத்தார்கள் தான் என்றும், அவர்களில் பெரும்பாலோர் அருளும், பொருளும் நிரம்பப் பெற்றவர்களாக தொன்று தொட்டு இருந்து வருகிறுர்கள் என்றும், அவர்கள் தர்மசிந்தனையுடைய பண்பாளர்கள் என்றும். கோயில் திருப்பணிகளில் சிறந்து விளங்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களில் குறிப்பிடத்தக்கவர்கள் என்றும் வயிரவன்கோயில் நகரத்தார்களின் சிறப்புக்களை ஸ்ரீ ல ஸ்ரீ மஹாஸ்வாமிகள் விளக்கிக் கூறி அவர்கள் வாழையடி வாழைபோல் வளமும், நலமும் பெற்று வையத்தில் வாழ்வாங்கு வாழ்வார்கள் என்றும் அவர்களுக்கு எல்லாப் பிறவிகளிலும் இறையருள் தொடர்ந்து வந்து உறுதுணையாக இருக்கும் என்றும் ஆசீர்வதித் திருக்கிறுர்கள்.

பலவித வண்ணம் கொண்டு கொத்துக் கொத்தாக மலர்கள் இருந்தாலும் மணம் இல்லையெனில் பயனில்லை. செல்வம் மிகுதி உடையவர்கள் மணம் இல்லாத மலர்களைப் போலில்லாமல் வயிரவன் கோயில் நகரத்தார்களைப் போல தெய்வப் பணிகட்கும், ஏழை எளியவர்கட்கும், உதவி செய்து உவகை பெற்று பயனுடையவர்களாக விளங்கவேண்டும்.

விழா மலருக்கு பதிப்பாசிரியராக தமிழில் மிகுந்த புலமை பெற்று தமிழ்த் தொண்டு செய்துவருகின்ற பேரன்பு நிறைந்த சுப. அண்ணாமலை அவர்களை நியமித்திருப்பது சாலப் பொருத்தமாகும்.

ஸ்ரீ வயிரவன் கோயில் நகரத்தார்களுக்கும், விழாக் குழுவினருக்கும், மலர்க் குழுவினருக்கும் ஸ்ரீ ல ஸ்ரீ ஜெகத்குரு மஹாஸ்வாமிகள் அவர்களுடைய பூரண ஆசீர்வாதம் எப்பொழுதும் இருந்து கொண்டேயிருக்கிறது.

திருக்குடநன்னீராட்டுவிழாவும், மலர்வெளியீடும் சிறப்புடன் அமைய ஸ்ரீ அம்பாள் திருவருளைச் சிந்தித்து அர்ச்சனை செய்து அக்ஷதை பிரசாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறது. எல்லாரும் அணிந்து கொள்ளவும்.

வேணும்
சத்குருநாதன்துணை
ஸ்ரீ சிவபுரிசுவாமி

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்
26-ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்



தருமபுரம்
மாயூரம் (அஞ்சல்) 609 001

31—10—81

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

நாட்டுக்கோட்டை நகரத்தார் சிவவழிபாட்டில் உறைப்பும் சிவப் பணிகளில் பேரீடுபாடும் கொண்டவர்கள். தமிழகத்துப் பாடல்பெற்ற தலங்களுள் மிகப்பலவற்றைப் பத்தொன்பது,இருபதாம் நூற்றாண்டுகளில் இவ்வினத்துப் பெருஞ்செல்வர்கள் பெரும் பொருட்செலவில் அரிய கருங்கல் திருப்பணிகளாகச்செய்து வழங்கியிரா விட்டால் இக்கோயில்களில் பல பெரிதும் சிதைந்து போயிருக்கும்.

இத்தகு நகரத்தார் போற்றிவழிபடும் இவர்களது இனக்கோயில்கள் ஒன்பதனுள் ஒன்றாகிய ஸ்ரீ வயிரவன் கோயில் திருப்பணி நிறைவேறிக் குடமுழுக்கு விழா நிகழவிருப்பது பெரிதும் மகிழ்ச்சியூட்டுவதாகும். இவ்விழாவையொட்டி வெளிவரவிருக்கும் விழா மலர் சமயப் பண்பாட்டு வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும்வண்ணம் அமைந்து சிறக்கவும், இம்முயற்சியில் ஈடுபட்டிருக்கும் பேரன்பர்களுக்கு நலம்பல பெருகவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ
சிவமயம்
ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

## இருபத்தெண் சீர்க் கழிநெடிலாசிரியச் சந்த விருத்தம்

கருநா டகத்தின் மிகவே யுயர்ந்த கவின்பெங்க ளூரி னொருபா
லருளே வழங்க உருவாய் விளங்கும் அனைராஜ ராஜேஸ் வரியாள்
திருவாய் நிறைந்து கனிவா யமர்ந்த திருக்கோயில் செய்த உரவோர்
உருவார் கயிலைப் பெயரால் வழங்கும் உயராஸ்ர மத்தின் தலைவர்

பெருகா ரருளி னணைவோ ரிடர்கள் பிணியான யாவும் விலக்கும்
பெரியோர் திருச்சி நகரில் வதிந்த பெருங்கார ணத்திற் பெயர்கொள்
தவமா முனிவர் தகவாய் மொழிந்த தருணஞ்செய் ஆணை வழியே
சிவமே பெருக்கும் செயல்சேர் மரபின் திகழொன்ப தூரில் வளமார்

கருவாய் வளர்ந்து சுடராய் நிறைந்த கறைக்கண்டன் அம்மை வடிவாள்
வடுகன் எனச்சொல் பெயரால் வழங்கும் வல்லாளன் நின்ற தலத்தைத்
திருவார் குலத்தின் முதலாய் வணங்கும் திகழ்செல்வர் செம்மைப் பணிகள்
பலவே நிறைத்துப் பழுதே யகற்றிப் பான்மையே வினைகள் புரிய

வருபேர் வடுகன் வளர்பீ டமதில் வைத்திடற் கொருபேர் யந்த்ரம்
உருவா யியற்றி யொருமண் டலத்திற் குயர்வான மந்த்ரம் செபித்துத்
தருமா முனிவர் தாமே யதனைத் தாபித்து வைத்த தகவோர்
இருதா மரையாம் எழிலார் பதங்க ளென்றென்று நின்று வாழி

— வணங்கி ஏத்தும் அடியேன்

சுப. அண்ணாமலை



ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி சுவாமிகள்

கோவிலூர் ஆதீனகர்த்தர்

## தவத்திரு இராமனாத ஞான தேசிக சுவாமிகள்



சொல்லரிய ஒளிவீசும் கருணைக் கண்கள்;
துறவுக்கும் தூய்மையினை அளிக்கும் தோற்றம்;
வெல்லரிய புலனைந்தும் வென்ற நெஞ்சம்;
வேதாந்தப் பொருளெல்லாம் விரிக்கும் சொற்கள்
நெல்லையெனும் தாய்மடியில் திகழும் பிள்ளை;
நினைவாலே ஆலயத்தை நிறுத்தும் பார்வை;
செல்வழிக்குக் கதியாகும் இராம னாத
தேசிகரின் தோற்றமது சிவத்தின் தோற்றம.

உ

# கோவிலூர் ஆதீனம்

தொலைபேசி எண்
காரைக்குடி 646

கோவிலூர். B. O.
மாநகிரி வழி.
முகவை மாவட்டம்

26—10—1981

தேவி பராசக்தியின் திருவருள் நினைந்து எழுதுவது,
உங்கள் 19—10 81. கடிதம் சேர்ந்தது. மிக்க மகிழ்ச்சி.

''காசி முதல் சேது வரை கனகத் தருமமிட்டு
நேசமுடன் ஈசர் பதம் நிதம் பணியும் நகரத்தார்''

என்றுசிறப்பிக்கப் பெறும். பூபால கனக மகுட தனவைசியர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார், பாண்டிய அரசரின் கோரிக்கைக்கிணங்கி சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்னர் சோழ தேசம் விட்டுப் பாண்டிநாடு வந்த காலத்தில் முதன்முதலாக அமைத்துக்கொண்டது ஏழுவழி நகரக்கோயில்களேயாகும்.

''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்''

என்னும் முதுமொழிக் கிணங்க, நகரத்தார்கள் தங்கும் ஊர்களிலெல்லாம் தங்களுக்கெனத் தனியாக திருக்கோயில்கள் அமைத்துக் கொள்வது மரபு. எனினும் நாட்டுக்கோட்டை நகரத்தார் அனைவரும் தொன்றுதொட்டு வழிவழியாக வரும் ஏழு கோயில் (இப்பொழுது ஒன்பது கோயில்) பிரிவினைச் சார்ந்தவர்களேயாவர்.

கோயில்களையே தமது தொன்மை மரபு வழியாகக் கொண்ட நாட்டுக்கோட்டை நகரத்தார், திருத்தலங்களைத் தேடிச்சென்று திருப்பணி செய்து என்றும் அழியாப் புகழ் தேடிக்கொண்டதில் வியப்பில்லை.

பழம்பெரும் தொன்மை வாய்ந்த ஏழுகோவில் நகரப் பிரிவில் ஒன்றான வயிரவன் கோயில் சிறப்பான வகையில் புதுப்பிக்கப் பெற்றும், கண்கவர் வண்ணம் தீட்டியும் நாளிது, துன்மதி ஆண்டு தைத்திங்கள் கஅ (31—01—1982)ம் நாள் ஞாயிறன்று திருக்குட புனித நீராட்டு விழா நடைபெறவும் அதன் தொடர்பாக சிறப்பு மலர் ஒன்று வெளிவரவும் ஏற்பாடு செய்து வருவது அறிய மிக்க மகிழ்ச்சி. அருள்மிகு வயிரவ மூர்த்தியின் பேரருளால் விழா சிறப்புடன் நிறைவெய்தவும் சிறப்புமலர், அருள்மணமும் நகரத்தார் புகழ்மணமும் கொண்டு பொலிவுடன் மலரவும் எல்லாம் வல்ல தேவி பராசக்தியின் திருவருளைத் தியானிக்கின்றோம்,

ஓம் பராசக்தி

(இராமநாத ஞான தேசிகர்)

HIS HOLINESS

**Sri-la-Sri Arunagirinatha Sri Gnanasambanda Desika Paramachariya Swamigal**

292nd GURU MAHA SANNIDHANAM

&

AADHEENA KARTHAR

MADURAI AADHEENAM


70, South Avani Moola Street,

MADURAI-625 001.

(s. INDIA)


Date 21—10—81

## ஆசிச் செய்தி

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

நகரத்தார்கள் நாட்டு வளத்திற்கும் கோயில் வளத்திற்கும் உழைப்பையும், அதனல் வரும் ஊதியத்தின் பெரும் பகுதியையும் நல்கி வரும் நன்மக்கள் தமிழ்நாட்டில் உள்ள திருத்தலங்கள் பல புத்தொளி வீசிடக் காரணம் அவர்கள் வாரி வழங்கும் நவ நிதியம்தான். அத்துடன் அவர்களது நல்லுள்ளமும் எடுத்த நற்காரியம் வெற்றிபெற உடன் நிற்கும். இது நகரத்தார் பண்பு நலன்களின் தனிச் சிறப்பு. அவர்களது உயர்வான எண்ணங்களுக்குத் தக்கவாறு எண்ணற்ற கோபுரங்கள் தமிழகத்தில் திருப்பணி கண்டுள்ளன. அது வகையில் அருள்மிகு வயிரவன் கோயில் திருப்பணிகள் நிறைவடையச் செய்து திருக்குட நன்னீராட்டு விழாவை நகரத்தார்கள் கொண்டாட இருப்பது குறித்து மகிழ்ச்சி. நம்மீது தாங்களும், அடியவர்களும் கொண்ட பக்தியால் குருவருள் சித்திக்கின்றது. அத்துடனே திருவருளும் விழாவினை யாதொரு விக்கினமுமின்றி நடத்திட முன்னிற்குமாக.

விழாச் சிறப்பு மலரில் பக்திமணம் தோய்ந்திட்டு அதனல் அடியவர்கள் வாழ்வில் அருள்வளமும் பொருள் வளமும் பெருகிநிற்க வேணுமாய் எல்லாம்வல்ல அங்கயற்கண்ணி பங்கனைப் பிரார்த்திக்கிருேம்.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்.

ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர்

உ
சிவ சிவ



ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம்.

திருப்பனந்தாள்-612 504
(தஞ்சை ஜில்லா)

தேதி: 25—10—1981

# வாழ்த்துரை

முகவை மாவட்டத்துள், திருப்புத்தூருக்கு அருகில், நகரக் கோயில்கள் ஒன்பதனுள் ஒன்ருக அமைந்துள்ள ஸ்ரீவயிரவன் திருக்கோயிலில் திருக்குட நன்னீராட்டு விழாவும், அவ்விழாத் தொடர்பாக சிறப்புமலர் வெளியீடும் நிகழ வுள்ளது அறிய மகிழ்ச்சி.

முன்னோர் அமைத்துத்தந்த தேவ குலங்களின் சீர்பேணி, சிறப்பொடு பூசனை செல்ல வழிவகுத்து அவற்றின் மேன்மைக்குப் பாடுபட வேண்டும்; அதை விடுத்துப் புதுப்புது ஆலயங்களை எழுப்பிச் சென்று பழமைக்கலைக்கூறுகள் நிரம்பிய ஆலயங்களை — அவற்றின் சிறப்பைப் பேணுநிருத்தல் நன்ருகாது எனும் கருத்துடையோம் நாம் அவ்வாற்ருன் நகரத்தார் ஆற்றியுள்ள நற்பணி களின் கூட்டுறவாகத் திகழ்கின்ற திருக்கோயிலின் திருவார்ந்த கோலத்தையும், கலைக்கருவூலங்களின் மிகுதியையும் புதுப்பிக்கும் வகையில் திருக்குட நன்னீராட்டு விழாக்காண்பது அரியதொரு தெய்வீக அருட்பணியாகும்,

நுண்மாண் நுழைபுலமும், தமிழிலக்கியப் பயில்வும், தன்னலமில்லாத் தகைமையும் மிக்கு ஆன்மீகப் பணியில் அளப்பரும் ஆர்வம் கொண்டு தொண்டாற்றும் உளப்பாங்கும் உடைய முனைவர் சுப. அண்ணாமலை அவர் களின் நல்லுழைப்பின் — மேற்பார்வையின் — வழி விழாமலர் ஆத்திக தமிழிலக்கிய அன்பர்களின் அறிவுத்திறத்தைப் பிரதிபலிக்கும் ஆடியாய், மண மிகு பொன்மலராய் மிளிரக் செந்திற் கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்து கின்ருேம்.

சுபம்.

DR. RAJAH
SIR MUTHIAH CHETTIAR
OF CHETTINAD

CHETTINAD HOUSE
RAJAH ANNAMALAIPURAM
MADRAS-28.

7—11—81.

நகர வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டுவிழா 31—1—1982இல் நடைபெறவிருப்பதும் அதுபோது சிறப்பு மலர் ஒன்று வெளியிட தீர்மானித்திருப்பதும் மகிழ்ச்சிக்குரியதாகும். அம்மலரில் பல பெரியோர்கள், அறிஞர் பெரு மக்களின் செய்திகளும் நகர வயிரவன் கோயிலைப்பற்றிய சிறப்பு செய்திகளும் இடம் பெறுவது சாலப்பொருத்தமாகும். திருக்குட நன்னீராட்டு விழாவும் சிறப்புற நடைபெறவேணுமாயும் மலர் வெளியிட தாங்கள் எடுத்துக் கொண்டுள்ள பெரு முயற்சி வெற்றி பெற வேணுமாயும் பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

மு. அ. முத்தையா செட்டியார்

L. ALAGUSUNDARAM CHETTIAR

Office : Pasumalai Madurai-625 004
Resi : 5, Vallabhai Road, Madurai 625 002

6—11—81

அன்புடையீர்,

வணக்கம். சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கத் தெய்வப் பணி செய்யும் செட்டிமார் நாட்டில், நகரக் கோயில்களில் ஒன்ருகிய வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாவை யொட்டிச் சிறப்பு மலர் வெளியிட இருப்பது பற்றி மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். பண்டிதமணி, கவிமணி, ரசிகமணி என்று போற்றப் பட்ட மும்மணிகளில் முதல் மணியாகத் திகழும் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்களைப் பெற்றெடுக்கும் பெருமை பெற்றவர்கள் வயிரவன் கோயில் நகரத்தார்கள். பிள்ளையார்பட்டிக்குப் பக்கத்தில் அமைந்து, பெருமையாலும் தகுதியாலும் உயர்ந்து, வயிரவர் அருளால் இச்சமயம் திருக்குட நன்னீராட்டு விழா நடத்தப்பெறும் வயிரவன் கோயிலையும், அதன் பெருமைக்குக் காரணமாகிய நகரத்தார்களையும் நினைத்து மகிழ்கிறேன்.

திருக்குட நன்னீராட்டு விழா மலர், நகரத்தார் தமிழ்த் தொண்டுக்கும் சைவத் தொண்டுக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ வாழ்த்துகிறேன்.

தங்கள் அன்புள்ள,

லெ. அழகுசுந்தரம் செட்டியார்



V. N. சிதம்பரம் செட்டியார்
தலைவர், அறங்காவலர் குழு,
அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்
மதுரை.

அன்புடையீர்,

வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாத் தொடர்பாகச் சிறப்புமலர் வெளியிடுவது பெரிதும் பாராட்டற்குரியது. மலர் தமிழ்மணமும் தெய்வமணமும் ஒருங்கே கமழ்ந்து விளங்குவதாக. திருக்குட, நன்னீராட்டு விழாவில் பட்டி மன்றத்தில் பங்கு கொண்டு மகிழ்ந்தேன். இவ்விழாவில் சாதி மத வேறுபாடு இன்றி வந்திருந்தோர் அனைவருக்கும் தங்குதடையின்றி உணவு வழங்கியதைப் பாராட்டுகின்றேன். விழாவில் யாகசாலை முதலியன சாத்திர முறைப்படி சிறப்பாக நடைபெற்றது கண்டு பெருமகிழ்வுற்றேன்.

அன்புள்ள
வி. என். சிதம்பரம்

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

''தருமபுர ஆதின வித்துவான், திருவண்ணுமலை ஆதின விரிவுரையரசு,
மதுரை ஆதினச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி,
பெரும் புலவர், பாலகவி'' வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார்

**தத்புருஷ தேசிகர்,**

பாலருவாயர் நிலையம், சம்பந்தர் தெரு,
தேவகோட்டை,
26—10—81

மகுட தனவைசியர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், சோழ நாட்டிலிருந்து சௌந்தர பாண்டிய மன்னனின் விருப்பப்படி இந்த நாட்டிற்கு வந்து குடியேறியபொழுது முழு உரிமையுடன் அம்மன்னன் இவர்களுக்கு அளித்த சிவாலயங்கள் ஒன்பது நகரக் கோவில்கள் என வழங்கப்பெறும். இவ்வொன்பது சிவாலயங்களுள் ''வயிரவன்பட்டி'' வடிவுடையம்மையுடனுய வளரொளி நாதர் திருக்கோயிலும் ஒன்று. இத்திருக்கோயிலில் வயிரவமூர்த்தி தனிச்சிறப்புடன் விளங்குகிருர். ஊர், வயிரவமூர்த்தி பெயரில் அமைந் திருப்பது நினைவு கூர்தற்குரியது. வயிரவன்பட்டிக் கோவிலை, இக்கோயில் உரிமையாளர் களாகிய நகரத்தார்கள் பெற்றது கி.பி. 714ம் ஆண்டில் என்று தெரிகிறது.

விரித்தபல் கதிர்கொள் குலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பைரவ ணுகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு ஒண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னுரே.

என்று அப்பரடிகளால் போற்றப் பெற்ற வயிரவ மூர்த்தி, நித்திய சாந்நித்தியராயிருந்து பேரருள் புரியும் இத்திருக்கோயில் திருப்பணியைப் பல லெட்சங்கள் செலவு செய்து நிறை வேற்றியும், அப்போதைக்கப் போது குடமுழுக்கு விழாக்களை முறைப்படி செய்தும், நித்திய நைமித்திக பூசைகளையும் விழாக்களையும் சிவாகம விதி வழுவாது செய்வித்தும், இக் கோயில் உரிமையாளர்களாகிய நகரத்தார்கள் சிவபுண்ணியச் சீலர்களாக விளங்கிக் கொண்டிருக்கின்றுர்கள்.

தொன்றுதொட்டு முன்னேர்கள் கடைப்பிடித்துச் செய்து வந்த முறையில், இப் போது இத்திருக் கோயிலைப் புதுப்பித்து துன்மதி தை-18ல் குடமுழுக்குச் செய்ய இருப்பது மகிழ்ந்து போற்றுதற்குரியது. இக்குட முழுக்கு விழாவின் நினைவாக நம் அன்புருவாகிய டாக்டர் சுப. அண்ணுமலை அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு மலர் ஒன்று வெளியிட இருப்பதறிந்து பெரிதும் மகிழ்ச்சி அடைகிருேம்

இதனை இதனல் இவன்முடிக்கும் என்ருய்ந்
ததனை அவன்கண் விடல்''

என்னும் பொதுமறைக்கேற்ப, மலர் வெளியீட்டாசிரியத் தகுதி முழுவதும் உடைய அண்ணுமலை அவர்களின் உழைப்பில் பூக்கும் மலர், நறுமண மிகுந்து பயன் தருமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

குடமுழுக்கு விழா இனிது நிகழவும், விழாமலர் மலர்ந்து மணம் பரப்பவும், பிள்ளையார் வகுப்பு, தெய்வ நாயகர் வகுப்பு, பெரிய வகுப்பு என்னும் பிரிவினராக விளங்கும் வயிரவன் கோயில் நகரத்தார்கள் வளம் பல பெற்று வாழவும், ஆலவாய் அண்ணல் திருவருளைச் சிந்திக்கின்ருேம்.

நலமே தழைக.

தொலைபேசி : 76011



கலைமகள்

55/56, மு. க. அம்மன் கோயில் தெரு,
சென்னை-600 004.

22—10—81

உ
முருகன் துணை

# வாழ்த்து

பாண்டிநன் ஞட்டில் திருப்புத்தூர்க் கருகில்
பத்தர்கள் பணிந்துநல் வாழ்வில்
தூண்டிய விளக்காய்த் திகழ்தரும் கோயில்
துகளறு நகரத்தார் போற்றி
ஈண்டிய நகர வயிரவன் கோயில்
எழுந்தருள் கடவுளுக் கினிதே
மாண்புறு குடநீ ராட்டுநல் விழாவை
வயக்குதற் கெண்ணிய தறிந்தேன்

நூறுநற் பரிமே தத்தினைக் கண்டு
நுவலரும் பயன்பெறல் போலத்
தேறுமோர் கோயிற் குடமுழுக் கதனைத்
தெரிசிப்போர் நலம்பெற்று வாழ்வார்
ஆறுமைம் புலன்சேர் ஞானியர் போற்றும்
அழகிய வயிரவ மூர்த்தி
ஏறிய அருளால் யாவரும் இனிதே
இன்புற்று வாழிய வாழி.

கி.வா. ஜகந்நாதன்

யு. சுப்ரமணியன், இ. ஆ. ப.
ஆணையாளர்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

சென்னை-600034.

21—11—1981

# வாழ்த்துச் செய்தி

முகவை மாவட்டத்தில், தேவாரப் பாடல்பெற்ற சிவத்தலங்களுள் ஒன்றாக, திருப்புத்தூருக்கு அண்மையில் அமைந்ததும், நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்குரிய ஒன்பது கோயில்களுள் ஒன்றாகத் திகழ்வதுமான வயிரவன்பட்டி அருள்மிகு வயிரவன் கோயிலுக்குத் திருக்குடநன்னீராட்டு விழா, நிகழும் துன்மதி ஆண்டு தைத்திங்கள் 18ஆம் தேதி (31—1—1982) ஞாயிற்றுக்கிழமை, சிறப்புற நிகழ இருப்பது அறிந்து மிகவும் மகிழ்கின்றேன்.

நாட்டுக்கோட்டை நகரத்துப் பெருமக்கள் தமிழிலும், சைவத்திலும் அளவற்ற அன்பும் ஈடுபாடும் கொண்டவர்கள்; சிறந்த பண்பாடு மிக்கவர்கள்; தமிழகத்திலுள்ள பல பெருங் கோயில்களுக்கு, ஏராளமாகப் பொருட்செலவு செய்து, திருப்பணிகள் புரிந்து சிறந்த தொண்டுகள் ஆற்றியுள்ளவர்கள்; அறச்செயல்கள் புரிவதில் அன்பும் ஆர்வமும் மிகுந்தவர்கள்!

இத்தகைய பற்பல நற்பண்புகள் பொருந்திய, நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் கோயில்களில் ஒன்றாகிய நகர வயிரவன்கோயிலின் திருக்குட நன்னீராட்டு விழா மிகவும் சிறப்புடன் நிகழும் என்பதில் ஐயமில்லை. தமிழ் மக்கள் அனைவரும் சாதி பேதமின்றி எல்லாக் காரியங்களிலும் ஈடுபட்டு, இந்து சமயத்தை வளர்ப்போமாக!

எல்லாம் வல்ல இறைவனின் திருவருளால் திருக்குட நன்னீராட்டு விழா மிகவும் சிறப்புற இனிது நிகழவும், அதுபோது வெளியிடப்பெற இருக்கும் சிறப்புமலர் நன்கினிது மலர்ந்து, பயன்தரும் முறையில் நறுமணம் கமழ்ந்து இன்சுவைத்தேன் பிலிற்றவும், என்னுடைய மனமார்ந்த அன்புநிறைந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். விழா இனிது நிகழ்க! இறையருள் பெருகுக!

யு. சுப்ரமணியன்
ஆணையர்

# நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்

### மரகத விநாயகர் துதி

மாவாழு மேழுவழி மாநகரத் தார்க்கென்றுங்
கோவாழு செல்வக் குலதெய்வ — மாவாழ்
மரகதவி நாயகனை மாமலரால் வாழ்த்த
வரநல வாழ்வு வரும்.

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் கீழத் தெருவில் ஏழுவழியில் ஐந்நூற்றிரண்டு குடும்பங்களாய் வாழ்ந்து வந்தார்கள் அப்பொழுது சோழநாட்டை ராஜ பூஷண சோழராஜன் என்பவர் அரசாண்டு வந்தார். காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த காலத்தில் நகரத்தார் கடல் வாணிபம் கீழ்த்திசை நாடுகளுடன் (அதாவது மலாயா (தற்போது மலேஷியா & சிங்கப்பூர்) தாய்லாந்து இந்தோனேஷியா இந்தோசைனு கம்போடியா (காம்போஜம்) நடத்தி வந்தார்கள். பஞ்சு வியாபாரம், பட்டாடை, பருத்தியாடைகள், இரத்தின வியாபாரமும் உப்பு வியாபாரமும் செய்து வந்தார்கள். உப்பளங்கள் இவர்கள் வசமே இருந்தன. சோழ அரசர்கள் முடி சூட்டிக் கொள்ளும் போது அவர்களுக்கு முடிசூட்டி வைப்பது நகரத்தார்களே. இதைப் பொறுத்தும் இரத்தின வியாபாரத்தை ஏகபோகமாக இவர்களே செய்து வந்ததாலும் இவர்களுக்கு இரத்தின தன மகுட பூபால வைசியர்கள் என்று பெயர் வழங்கலாயிற்று.

இவ்விதம் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்து வரும் நாளில் பாண்டிய தேசாதிபதி சௌந்தரபாண்டியராஜன் சோழ தேசத்திற்கு வந்து வியாபார வைசியர்கள் சில குடும்பத்தைத் தன் தேசத்துக்குத் தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். அதற்கு ராஜபூஷண சோழனும், "அவ்வாறே தருகிறோம்,'' எனப் பாண்டிய அரசனுக்குச் சம்மதம் கொடுத்து, பின் வைசியர்களை அழைத்து, ''பாண்டிய நாட்டிற்கு உங்களிற் சில குடும்பத்தாரைப் தருவதாக வாக்களித்திருக்கிறேன்; அது போலப் போய் இருங்கள்'' என்று சொல்ல அதற்கு வைசியர்கள் ''நாங்கள் சில குடும்பங்கள் போய் இருக்க முடியாது. நாங்கள் போவதாயிருந்தால் நாங்கள் எல்லாக் குடும்பங்களுமே போய் இருக்கிறோம்.'' என்று சொல்ல அதற்கு அரசனும், நான் பாண்டிய மன்னனுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். வாக்குத் தவற முடியாது. தாங்கள் சில குடும்பத்தார்கள் போய் இருக்க முடியாது என்று சொல்லுவதால் எல்லாக் குடும்பத்தாருமே போய் இருந்து சுகஜீவியாய் இருந்து வாழ்ந்து வாருங்கள், என அனுமதி கொடுத்தார். அதன்பின் கீழத்தெரு ஐந்நூற்றிரண்டு குடும்பத்தினரும் சவுந்தரபாண்டிய அரசனுடன் சாலிவாகன சகாப்தம் 629 க்கு கலியுக வருஷம் 3808 க்கு பிலவங்க ஸ்ரீ வைகாசி 21வ சுக்கிர வாரம் அஸ்த நக்ஷத்திரம் கூடியசுபதினத்தில்பாண்டிய நாட்டிலுள்ள உள்ள ஓங்காரக்குடி என்னும் ஊர் வந்து சேர்ந்தார்கள். அப்போது சவுந்தர பாண்டியராஜன் வைசியர்களை நோக்கி, ''கடலுக்கு மேற்கு- வைகைக்கு வடக்கு- பிரான்மலைக்கும்கிழக்கு வெள்ளாற்றிற்குத் தெற்கு இந்நான்கெல்கைக்கு உட்பட்ட நாட்டில் இருந்து வாருங்கள், என்று சொல்ல, இவர்கள், ''சோபகாந்திபுரமாகிய இளையாற்றக்குடி நகரமும் அவ்வூர் கோயிலும், க்ஷேத்திர சுவாத்தியங்களும் விட்டுத்தர வேண்டும்'' என்று பாண்டிய அரசனிடம் கேட்க அரசனும் அது போல

விட்டு மரியாதையும் செய்து சுகஜீவிகளா யிருக்கும்படி கட்டளையிட்டுப் பின் மதுரை மாநகரம் சேர்ந்தான்.

இளையாற்றக்குடி நகரமும் நாட்டுக்கு நடு மண்டலமாதலால் இளையாற்றக்குடி நகரத்தாராகிய ஏழுவழி நகரத்தாருக்கு மட்டும் ''நாட்டுக்கோட்டை நகரத்தார்'' என்று பெயர் வந்தது.

ஒரு வழி இளையாற்றக்குடி நாட்டுக் கோட்டை நகரத்தார் ஒருமித்து இளையாற் றக்குடியில் வாழும் நாளில் பின்பு தங்களுக் குள் ஒற்றுமைப்படாமல் சிலர் தவிர மற்றையோரெல்லாரும் எண் வகையான கூட்டத்தாராகித் தங்கள் தங்களுக்கு வெவ் வேறு கோயில்கள் விட்டுக் கொடுக்க வேண்டும் என்று பாண்டிய அரசனைக் கேட்டுக் கொள்ள அரசனும் சாலிவாகன சகாப்தம் 634ல் கலியுக ஹு 3813ல் ஓர் வகைக் கூட்டத்தாருக்குக் கேரள சிங்கவள நாட்டில் திரிபுவனச் சக்கரவர்த்தி பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய அதிவீரபாண்டியபுரமென்னும் மாத்தூர்க் கோவிலும் மற்றொரு வகைக் கூட்டத் தாருக்கு வளவேந்திரராஜன் பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய வைரவன் படிக் கோயிலும் சாலி வாகன சகாப்தம் 636 கலியுக ஹு 3815ல் மற்றொரு கூட்டத் தாருக்குக் காருண்ய பாண்டிய ராஜன் பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய சொர்ணபுரம் என்கிற இரணியூர்க்கோயி லும், மற்றொரு கூட்டத்தாருக்கு நேம நாட்டில் நந்திராஜன் பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய நந்திபுரமென்னும் பிள்ளை யார்பட்டிக் கோயிலும் மற்றொரு கூட்டத் தாருக்கு நேமநாட்டில் நேமராஜன் பிர திஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய மதுந்தி புரம் என்னும் நேமங்கோயிலும் மற்றொரு கூட்டத்திற்குத் திரிபுவன சக்கரவர்த்தி பிரதிஷ்டை செய்த க்ஷேத்திரமாகிய அதி வீரபாண்டியபுர மென்றும், பிரமபுரம் என்றும் வழங்கப்படுகிற இலுப்பக்குடி கோயிலும் சாலிவாகன சகாப்தம் 640 கலியுக ஹு 3819ல் மற்றொரு கூட்டத் தாருக்கு மெதவிகாபுரமாகிய சூரைக்குடிக் கோயிலும் மற்றொரு கூட்டத்தாருக்கு கெந்தகாபுரமாகிய வேலங்குடிக்கோயிலும் அவைகளுக்குத் தனித்தனியே க்ஷேத்திர சுவாத்தியங்களும் விட்டுக் கொடுத்தான்.

மேற்குறித்தபடி அரசனிடத்திற்கு வந்திருந்தவர்கள் இளையாற்றக்குடிக் கோயிலையும் அதற்குரிய க்ஷேத்திரசுவாத் தியங்களையும் தங்களுக்கு வைத்துக்கொண் டார்கள்.

மேற்குறித்த ஒன்பது ஊர்களும் அந்தந்தப் பகுதிகளைச் சார்ந்த பக்கத்து ஊர்கள் பலவும் தாம் தற்போது 96 ஊர் என்று பெயரால் வழங்குகின்றன

மேற்குறித்தவர்கள் பாண்டிய நாட்டிலே யே வர்த்தகம் (Trade) செய்துவந்தார்கள். சோழ நாட்டில் இருந்த போது கடல் வாணிபம் செய்துவந்தது போல பாண்டிய நாட்டில் அவ்விதம் செய்து வரத் துறை முகவசதிகள் குறைவாயிருந்ததால் இன்றைக்குச் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் மலாயா, பர்மா, இந்தோசைனு கம்போடியா (கம்போஜம்) இந்தோனே ஷியா தாய்லாந்து இலங்கை முதலான நாடுகளில் வர்த்தக நிமித்தம் சென்று வர்த்தகம் செய்து வந்தவர்கள் அந்நாடு களில் உள்ள காலப் போக்கினுல் வர்த்த கத்துடன் லேவாதேவித்தொழிலும் செய்து வரத் தொடங்கினுர்கள்.

## வைரவன் கோயில்

இதைக் கேரள சிங்க வளநாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டியபுரம் என்றும் கூறுவர். இங்கு ஸ்வாமி பெயர் வளரொளிநாதர். அம்மன்பெயர்வடிவுடை யம்மன். இத்தலத்தில் சிறப்புடன்வழங்கப் படும் மூர்த்தி வைரவஸ்வாமியாவார். ஸ்தல விருக்ஷம் அழிஞ்சி மரம். தீர்த்தம் பைரவ தீர்த்தம்.

இந்தக் கோயில் திருப்பணியும் வயிரவன் கோயில் நகரத்தார்களால் 1864ம் வருடம் திருப்பணி வேலை ஆரம் பித்து கருங்கல் திருப்பணியாகவும் மிகச் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடனும் திருப் பணியைச் செய்து முடித்து மஹாகும்பா பிஷேகமும் செய்விக்கப் பெற்றது.

2—2—1959ம் தேதி கும்பாபிஷேகத திற்கு முன்னால் மூன்று கும்பாபிஷேகங் கள் நடைபெற்றிருக்கின்றன.

வைரவன் கோயில் நகரத்தார்களில் மூன்று பிரிவுகள் உள்ளன.

அவை 1. சிறுகுளத்தூருடையார். இதில் 3 உட்பிரிவுகள்.

அவையாவன :-

1) பெரியவகுப்பு

2) தெய்யனார் வகுப்பு (தெய்வ நாயகர் வகுப்பு)

3) பிள்ளையார் வகுப்பு

2) கழனிவாசலுடையார்

3) மருதேந்திரபுர முடையார். இம் மூன்று பிரிவினரும் சகோதரர்களாகை யால் ஒருவருக்கொருவர் திருமணம் செய்து கொள்ளுவதில்லை. இக்கோயிலுக்கு வி நடராசக்கவிராயரால் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்என்னும் பிரபந்தம் இயற்றப் பெற்று 1894ம் வருஷத்தில் அச்சாகியிருக் கிறது.

இக்கோயிலில் சிற்ப வேலைப்பாடுகள் அதிகம். சண்டிகேசுவரர் எழுந்தருளியுள்ள தனிக் கோயில் ஒரே கல்லினால் ஆனது சுமார் 20டன் எடையுள்ள கல்லைத் தற் சமயம் உள்ள குன்றக்குடி திருப்பத்தூர் நெடுஞ்சாலைக்குத் தென்புறமுள்ள மலை யிலிருந்து ஒரே கல்லாக வெட்டி எடுத்து வந்து குடைந்து அதில் சண்டிகேசுவரரை எழுந்தருளச் செய்திருக்கிறார்கள். அந்தக் கல் எடுக்கப்பட்ட இடத்தில் ஏற்பட்ட பள்ளத்துக்குசண்டிகேஸ்வரர்மலைப்பள்ளம் என்று பெயர்.

இக்கோயிலில் மேலும் ஒருசிறப்பு சண்டி கேசுவரர் சந்நிதிக்குக் கீழ்புறம் வளரொளி நாதரின் திருமாளிகை வடக்குச் சுவரில் ஸ்ரீராமபிரான் ஆஞ்சநேயருக்கு முன்பாகக் கைகூப்பி நின்ற கோலத்தில் காட்சியளிக் கிறார். ஆஞ்சநேயர் சஞ்சீவி மலையைக் கொண்டு வந்து ஸ்ரீ ராமபிரான் தம் உயிருக்கு மேல் அன்பு வைத்திருந்த இலக்குவனையும் மற்ற படைவீரர்களையும் உயிர்ப்பித்தமைக்கு நன்றி, வணக்கம் சொல்லுவதாக வால்மீகி ராமாயணத்தில் சொல்லப் பட்டிருப்பதைச் சிற்பி இங்கு வடித்திருக்கிறார். இது காணற்கரியதோர் காட்சியாகும். □

இந்தக் கோயிலின் குடமுழுக்கு விழாத் தொடர்பாக வெளியிடும்
சிறப்பு மலருக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.





# கருணை மாரி-தாய்

திருமதி சோலை நாகப்பன், உ. சிறுவயல்.

கருணைக்கு மாரியென விளங்கும் தாயே !
கருமாரி ஆனவளே எங்கள் தாயே !
அருளுக்கோர் தெய்வமென ஆன தாயே !
அகிலத்தைக் காப்பாற்றும் சக்தி நீயே !
வேற்காட்டில் கருமாரி என்று வந்தாய்
வேண்டாத தீமைகளைக் கொன்று வந்தாய்
பாற்கடலின் வண்ணத்தை உண்டு வந்தாய்
பாசத்தை எங்களிடம் கொண்டு வந்தாய்
தீராத வினைகளையும் தீர்த்து வைத்தாய்
தேசமுத்து மாரியென வேர்த்து வைத்தாய்
ஆராத காதலினால் ஈர்த்து வைத்தாய்
அன்பிற்கே அருளெல்லாம் சேர்த்து வைத்தாய்
நாட்டினுள்ளே சுற்றிவரும் வறுமைப் பேயை
நாடாமல் காத்திடுவாய் அருமைச் சேயை
பூட்டியுள்ள இதயத்தின் கெட்ட நோயைப்
போக்கி வைத்து அருளுடைமை காட்டு தாயே !

## பூஜை முதலியவைகளின் பலன்

பூஜையினால் விஸ்தாரமான ராஜ்யத்தையும்
அக்னிகார்யத்தினால் ஐஸ்வர்யத்தையும்
ஜபத்தினால் பாபத்தினின்று விடுதலையும்
தியானத்தினால் ஞானத்தையும்
தேகம்முடியும் வரை சிவபூஜை செய்வதனால்
யாகம் செய்தவனாகவும் சிவபெருமானின்
திருவடியை அடைந்தவனாகவும் ஆகிறான்.



திருக்குளத்துடன் திருக்கோயில்



# வயிரவன் கோயில் வரலாறு



டாக்டர் சுப. அண்ணாமலை

பாண்டி நாட்டுத் திருத்தலங்கள் பதினுன்கில் ஒன்ருகச் சிறப்புறும் திருப்புத்தூருக்கு (இராமநாதபுரம் மாவட்டம்) அருகில், குன்றக்குடிச் சாலையில் 4 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள நகர வயிரவன் கோயிலில் ஞாயிற்றுக்கிழமை காலை 8-00 மணி முதல் 8-30 மணிக்குள் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெறுகிறது.

நகர வயிரவன் கோயில் சிற்ப அழகிற்குப் பெயர் பெற்ற கோயிலாகும். இங்குள்ள கலையழகு வாய்ந்த தட்சிணமூர்த்தி மண்டபமும், ஒரே கல்லால் ஆன சண்டீசர் திருக்கோயிலும், குதிரைவீரர் சிலைகளும், சஞ்சீவிமலை கொண்டுவந்து தன்னுயிர்காத்த அனுமனை இராமபிரான் வழிபடும் அரிய சிற்பமும், வயிரவரின் கருவறைப் புறச்சுவரில் அமைந்துள்ள அழகிய சிற்பங்களும் குறிப்பிடத்தக்கவை.

இவ் வயிரவன் கோயில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஒன்பது குல மரபுக் கோயில்களுள் ஒன்ருகும். மற்ற குல மரபுக் கோயில்கள், இளையாற்றக்குடி, மாற்றூர் இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம், இலுப்பைக்குடி, சூரைக்குடி, வேலங்குடி என்பவையாகும். இவை அனைத்தும் இராமநாதபுர மாவட்டத்தில் உள்ளவை. நகரத்தார்கள் இவ்வொன்பது கோயில்களிலும் உறையும் சிவபெருமானைத் தங்கள் குல முதல்வனுக உடையவர்கள். அதற்கேற்ப, தங்கள் வீட்டுத் திருமணத்தைத் தமக்குரிய கோயிலில் பதிவு செய்து, அங்கிருந்து மாலை பெற்றே நடத்திக்கொள்வர். இவ்வழக்கத்தால், ஒவ்வொரு கோயிலையும் சேர்ந்த மணமகன் இன்னுரென்பதும், மணமகள் இன்னுரென்பதும், அக்கோயில் பதிவேட்டில் பதிவாகி வருகின்றன.

வயிரவன் கோயில், நகரத்தார்களுக்கு, வளவேந்திர ராசன் என்ற பாண்டிய மன்னனுல், செப்புப் பட்டயம் செய்து, உரிமையாகக்கலியுகம் 3813-ஆம் ஆண்டில் (கி பி. 712) வழங்கப்பெற்றது. இதைப் பெற்ற நகரத்தார் பிரிவினர் ''கேரள சிங்கவள நாடாகிய வீரபாண்டிய புரத்தின் ஏழகப் பெருந்திரு வணிகர்'' என்று தம்மை அழைத்துக் கொண்டு, குன்றக்குடியைச் சுற்றியுள்ள பல ஊர்களில் குடியேறி, வயிரவன் கோயில் இறைவன் வளரொளி நாதரையும், வடிவுடையம்மையையும், வயிரவமூர்த்தியையும் வழிபட்டு வரத் தொடங்கினர். இக்கோயிலில் அவ்வப் போது பழுது பார்த்தும், திருப்பணி செய்தும், குட நீராட்டுச் செய்து வந்துள்ளனர். இக் கோயிலில் முதன் முதலாகக் கல் திருப்பணிசெய்ய இரத்தாட்சி ஆண்டு ஆவணித் திங்கள் 6-ஆம் நாள் சனிக்கிழமை (கி. பி. 1864) தச்சு செய்தனர். கண்டனூர் அ. நா. குடும்பத்தைச் சேர்ந்த நா. அ. வெ. ராம. இராமசாமி செட்டியார் இக் கோயிற் கட்டிடங்கள் உருவாகுவதற்கு உறுதுணையாக இருந்து 40 ஆண்டுக் காலம் இவ்வூரிலேயே தங்கி, கோயில்

திருப்பணியை நிறைவு செய்தார் என்று அறியப்படுகிறது. இத்திருப்பணி நிறைவேறிய பின், ஜெய ஆண்டு சித்திரைத் திங்கள் 16-ஆம் நாள் (27—4—1894) திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

பின்னர் 1919, 1928, 1959 ஆகிய ஆண்டுகளில் திருக்குட நன்னீராட்டு விழாக்கள் நடைபெற்றன. இவற்றுள் 1959 ஆம் ஆண்டு குடநீராட்டு விழா (12—2—1959) விளம்பி ஆண்டு தைத் திங்கள் 30-ஆம் நாள் நடைபெற்றது.

இங்கு எழுந்தருளியுள்ள வடிவுடையம்மை உடனுகிய வளரொளி நாதர், ததீசி முனிவர், சந்திரன், இந்திரன், சுக்கிரன் முதலியவர்களால் வழிபடப்பட்டதையும், அசுரர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்களின் குறைதீர்க்க, சிவபெருமான் வயிரவக்கோலம் பூண்டதையும், இத்தலத்தின் பிற சிறப்புக்களையும் சேந்தன்குடி வி. நடராசக் கவிராயர் இயற்றிய வயிரவன் கோயில் புராணம் தெரிவிக்கிறது. இப்புலவரே, வடிவுடையம்மை மீது ஒரு பிள்ளைத் தமிழும் பாடியுள்ளார்.

இத்தலத்தில் வயிரவ மூர்த்தி சிறப்புடன் வழிபடப் பெறுகிறுர். இவருக்கு இங்கு மூலவர் திருவடிவமும், உற்சவர் திருவடிவமும் உள்ளன. மூலவருக்குத் தனிக் கருவறை உள்ளது. இவருக்கு ஐப்பசி மாதத்தில் திருவிழா நடைபெற்று வந்துள்ளது.

திருப்புத்தூரிலும், அதைச் சுற்றி ஏழு ஊர்களிலும் வயிரவருக்குக் கோயில்கள் அமைந்துள்ளமையும், மக்கள் அங்கு வயிரவரைச் சிறப்பாக வழிபடுகின்றமையும் குறிப்பிடத்தக்கவை. தஞ்சை மாவட்டத்துச் சீர்காழியில் உள்ள சட்டையப்பரும் வயிரவரே ஆவார்.

## வைரவர் வரலாறு

வைரவர் சிவமூர்த்தங்களுள் ஒருவர். இவர் நீல நிறம் உடைவர். திருவடிகளில் சிலம்பும், மார்பில் தலைமாலையும் அணிந்தவர். முக்கண்கள் உடையவர் கைகளில் சூலம், மழு, பாசம், உடுக்கை ஆகியவற்றை ஏந்தியவர் கோரப்பற்களும் செஞ்சடையும் உடைவர்.

வைரவருடைய வரலாற்றைச் சிவபுராணமும் ஸ்காந்தமும் பேசுகின்றன. பிரமாண்டபுராணம் வயிரவருடையபுகழை எடுத்தியம்புகின்றது. சிவபுராணம் வித்யேஸ்வர சம்ஹிதை எட்டாவது அத்தியாயத்தில் ஒரு சுலோகம் பின்வருமாறு கூறுகிறது: ''சிவபிரான் பிரமனுடைய அகந்தையை அடக்குவதற்காக, தனது புருவமத்தியிலிருந்து ஒரு மனித வடிவத்தைப் படைத்தார். இவரே வைரவர்.''

வைரவர் சிவபெருமானை வணங்கி, 'என்ன செய்ய வேண்டும்' என்று கேட்டார். அப்பொழுது சிவபெருமான், 'குழந்தாய்! உலகின் முதல் கடவுளாகிய இவரை, விரைவில் கூர்மையான கத்தியினுல் பூஜிப்பாயாக' என்று கூறினுர் உடனே வைரவர் பிரமனுடையஐந்தாவது தலையை வெட்டினுர். மற்ற தலைகளையும் அவர் வெட்ட முற்பட்ட போது, மஹாவிஷ்ணு அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப்பிரமனை மன்னிக்கும்படி வேண்டினுர்.

பிரமனும் மஹாவிஷ்ணுவும் திருவண்ணுமலையில் ஜோதிப் பிழம்பாக நின்ற சிவபெருமானின் அடிமுடி தேடிய பொழுது, பிரமன் 'சிவனது முடியைக் காணுமலே' கண்டதாகப் பொய் கூறியதால், பிரமனுக்குப் பூசை இல்லாமல் போகும்படி சாபம் கொடுத்தார்.

அசுரர்கள் இழைத்த கொடுமையைப் பொறுக்க முடியாத தேவர்களுக்காகக் காசி நகரில், பிரகதாரணன் என்ற முனிவன் செய்த உருத்திர யாகத்தில் வயிரவக் கடவுள் தோன்றினுர். பாலகனுகத் தோன்றினுர். வடு என்றுல் பாலகன். ஆதலால் அவருக்கு வடுகன், வடுகநாதன் என்று பெயர். அப்போது அவரது தோற்றம் எவ்வாறு இருந்தது என்பதைத் திருப்புத்தூர்ப் புராணம் கூறு

கிறது. ''ஒரு கையில் தண்டமும் மறு கையில் பிரமனுடைய தலையோடும் அழகு செய்ய, காலில் சிலம்பு விளங்க, முத்து மாலையும், தலைமாலையும் மார்பில் ஆட, மந்திர பூடணனாய், வடுவாகி, பரம யோகியாய் நின்றான்''

''கரம் இரண்டினும் தண்டமும் கபாலமும் கவின,
தரளமாலை, மஞ்சீரம், அங்கதம் முதல் தயங்க
பொருவில் மந்திர பூடணனாய் வடுவாகிப்
பரம யோகியாய் நின்றனன் ஆண்டொரு பகவன்''

என்பது திருப்புத்தூர்ப் புராணப் பாடல் இவ்வாறு உருத்திர யாகத்தில் எழுந்த வைரவர், அசுரர்களைக் கொன்று, சூலத்தில் அவர்களின் உடலைக் கோத்து, குருதியைக் குடித்தார். நான்கு வேதங்களையும் நாய் வாகனமாக்கி, அது தன்னைச் சுமக்கச் செய்தார். யாவரும் காண நடனம் செய்து, அச்சம் உண்டாக்கும் ஆரவாரத்தை எழுப்பினார். பீ என்றால் அச்சம். ரவம் என்றால் ஆரவாரம், பேரொலி. அதனை எழுப்பியதால், பைரவர் என்று அவருக்குப் பெயர் உண்டாயிற்று. வைரவர் எல்லாத் தலங்களிலும் வாழ்ந்து அங்கே நன்முறையில் பாலனம், அதாவது ஆட்சி செய்வதால், க்ஷேத்திரபாலன் என்று பெயர் பெற்றார்.

வைரவர் தமது அம்சத்தால் எட்டு வைரவர்களைப் படைத்தார். அவர்கள் 1) சிதாங்க வைரவன் 2) ருரு வைரவன் 3) சண்ட வைரவன் 4) குரோத வைரவன் 5) உன்மத்த வைரவன் 6) காபால வைரவன் 7) பீடண வைரவன் 8) சங்கார வைரவன்.

வயிரவன் கோயில் புராணத்தில் உள்ள வயிரவக் கடவுள் வாழ்த்து, பிரமனின் கபாலத்தையும் திருமாலின் தோலாகிய சட்டையையும் அணிந்தவர் வைரவர் என்று கூறுகிறது.

வயிரவன் கோயில் புராணத்தில் வயிரவர் வரலாறு விரிவாகக் கூறப்படுகிறது. சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் முதலிய அசுரர்கள் இழைத்த கொடுமையைத்தாங்காமல் தேவர்கள்முறையிட, சிவபெருமான் அந்தணனாய்த் தோன்றி, புராதனவனம் என்றும் கோலவனம் என்றும் அழிஞ்சில் வனம் என்றும் பெயர் பெற்ற இடத்திற்குச் சென்றால் உங்கள் துன்பம் தீரும்' என்று கூறினான். தேவர்கள் தம் அரசன் ஆகிய தேவேந்திரனுடன் புறப்பட்டுப் புராதன வனத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கு வளரொளிநாதரும் வடிவுடையம்மையும் கோயில்கொண்டு எழுந்தருளியிருப்பதைப் பார்த்தனர். முன்பு திருமாலும் பிரமனும் தாமே பிரமம் எனக் கூறிப் போர் புரிந்த போது, அவர்களுக்கு நடுவில் சோதியுருவில் தோன்றிய சிவபெருமானே பின்பு ஒரு மலையாகிக் குளிர்ந்தார். அதைக் கண்டு தேவர்கள் அகந்தைவிட்டு அவனைப் பணிந்தனர். அவனுக்கு உலகத்தார் வளரொளி என்று பெயர் சூட்டினர். அவரே இங்குக் கோயில் கொண்டிருக்கிறார் என்று அறிந்து இந்திரனும் தேவர்களும் வணங்கினர். அவர்களின் துன்பம் தீர்க்க, வளரொளிநாதர் வயிரவக் கோலம் கொண்டார்.

''கிளர் முடி அண்ட கோளம் கெழும நாற்புயமும் எண் திக்கு
அளவினைக் காட்ட மேனி அனந்த சூரியரிற் சீர்ப்ப
தளர்வுறு சுரர்பால் வைத்த தண்ணிய கருணையாலே
வளர்ஒளி நாமத் தீசன் வயிரவக் கோலம் கொண்டான்''

பைரவருக்குத் திருப்புத்தூர் சிரசுத்தானம். வயிரவன் கோயில் இருதய ஸ்தானம், இலுப்பைக்குடி பாதஸ்தானம்.

வயிரவன் கோயிலில் தலவிருட்சம் ஏறழிஞ்சில் மரம். இந்த மரத்திலிருந்து பழம் உதிர்ந்தால், மீண்டும் கிளையில் ஒட்டிக் கொள்ளும்.

வயிரவர் உள்ள கோயிலில்ஒவ்வொரு நாளும் கடைசிப் பூஜை வயிரவருக்கு நடைபெறும். வயிரவன் கோயிலில் மற்றொரு சிறப்பு உண்டு. இங்கு உள்ள நெல்லி மரங்களின் காயைத் தின்று

இங்குள்ள ஊருணித் தண்ணீரைப் பருகினல் நாய்க்கடி விஷ ர் உடனே இறங்கி விடும் காயை வேறு இடத்திற்கு எடுத்துச் சென்ருல் இந்தப் பலன் கிடைக் காது.

வயிரவன் கோயில் நகரத்தார் மூன்று பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். 1) சிறு குளத் தூருடையார் 2) கழனி வாசல் உடையார் 3) மருதேந்திரபுரமுடையார்; இவர்களில் சிறுகுளத்தூருடையார் மூன்று பிரிவுகளை உடையவர். 1) பெரிய வகுப்பு 2) பிள்ளை யார் வகுப்பு 3) தெய்யனுர் வகுப்ப. இப் பிரிவுகளைச் சேர்ந்து இப்பொழுது 4000 புள்ளிகளுக்கு மேல் உள்ளார்கள்.

வயிரவன் கோயிலை நிர்வகிக்கும் அமைப்பு, 1980-ஆம் ஆண்டு. குடியாட்சி முறையில் சீர்திருத்தி அமைக்கப்பட்டது. இதன்படி வயிரவன் கோயில் நகரத்தார் புள்ளிகள் அனைவரையும் பேரவை உறுப் பினராகக் கொண்ட வயிரவன் கோயில் நகரத்தார் சங்கம் அமைக்கப்பட்டது. ஒவ் வொரு ஊரிலும் உள்ள வயிரவன் கோயில் நகரத்தார்கள் தேர்ந்தெடுத்தனுப்பிய பிரதிநிதிகளைக் கொண்ட செயற்குழு அமைக்கப்பெற்று, அதிலிருந்து 15 உறுப் பினர்களைக் கொண்ட நிர்வாகக்குழு அமைக்கப் பெற்றது. செயற்குழு நிர் வாகக் குழுக்களின் ஆட்சிக்காலம் இரண் டாண்டுகள் என்று வரையறுக்கப் பெற்றது.

வயிரவன் கோயில் நகரத்தார்களின் பெரு முயற்சியால், இக்கோயிலில் இராஜ கோபுரம், சுவாமி, அம்மை, வயிரவர் விமானங்கள், மற்ற பரிவார தெய்வங் களின் விமானங்கள் ஆகியவையும் பிரகாரங்களும் ஏறத்தாழ இரண்டு லட்ச ரூபாய் செலவில் பழுது பார்க்கப் பெற்று 31—1—82 அன்று திருக்குடநன்னீராட்டு விழா நடை பெறுகிறது. 28—1—1982 முதல் யாகசாலை வழிபாடுகள் நடைபெறு கின்றன. ★



உ

சிவமயம்

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

# அருள் தரும் அன்னை வடிவுடையம்பாள் உடனுகிய அருள்மிகு வளரொளிநாதர் வயிரவ சுவாமி

# திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா

---

## திருவளரும் வயிரவனுர் திருக்குடநீராட்டுக்கு வருகவெனப் பக்தர்களை மகிழ்ந்தழைக்கும் பத்திரிகை













### விநாயகர் வணக்கம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே

— திருஞானசம்பந்தர் தேவாரம்.

### வடிவுடையம்மை வணக்கம்

எழுதா மரையின் மின்னுரும்
எழுதா மறையும் இனிதேத்தித்
தொழுதா யனந்த உயிரகத்தும்
தூய்தா யரிய மந்தணமாய்
முழுதாய் மனுவாய் மூதுலகாய்
முதிரும் சுவைப்பாற் கரந்துறையும்
இழுதாய் எவையும் கலந்தவடி
வுடையாள் இணைத்தாள் இறைஞ்சிடுவாம்

— வயிரவன் கோயிற் புராணம்.

## வளரொளிநாதர் வணக்கம்

சீர்மலியும் பொருண்மலியும் சிற்பரனுர் அருள்மலியும்
வார்மலியும் தனத்தாயாம் வடிவுடையாள் ஒருபாகன்
கார்மலியும் கண்டத்தெம் கண்ணுதலான் வளரொளிப்பேர்த்
தார்மலியும் பரசிவன்தாள் தலைமலிய வணங்கிடுவாம்.

நிலத்திடை ஐந்தாய் நின்ற நிராமய மூர்த்தி போற்றி
சலத்தினில் நான்காய் வெய்ய தழல்வயின் மூன்ருய் வங்கூழ்
வலத்திரண் டாகி யொன்ருய் வானகத் தமர்ந்தாய் போற்றி
மலப்பிணி எமக்கு வீட்டும் வளரொளி நாத போற்றி.

— வயிரவன் கோயிற் புராணம்.

## வயிரவர் வணக்கம்

படைக்கும் பரிசும் படியளக்கும்
பண்பும் பதுமப் பண்ணவற்குந்
தொடைப்பைந் துளவத் திருமாற்கும்
சுதந்த ரத்த தொழிலன்மை
முடைப்புன் தலைவெண் கலன்கரிய
முழுக்கஞ் சுகமென் றிவ்வுணர்த்த
மடைத்தண் புனல்போல் அருள்வழங்கும்
வடுக நாதன் வழித்துணையே.

— வயிரவன் கோயிற் புராணம்.

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கத் தெய்வம் பரவும் சிறப்புடைப் பெரியீர் !

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய பரம்பொருள் உலகம் உய்ய அருளுருவத் திருமேனி கொண்டிலங்கும் திருத்தலங்களில் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றினுலும் சிறப்புடையது. அன்பாண்டு மீளா அருள்புரிவான் திருநாடாம் தென்பாண்டி நாட்டில் கேரள சிங்க வளநாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டியபுரம் எனப்படும் வயிரவன்பட்டி என்ற திருத்தலமாகும். இத்தலத்தில் உள்ள திருக்கோயில், வளவேந்திர ராசனுல் உருவாக்கப் பெற்று சாலிவாகன சகாப்தம் 634 கலியுகம் 3813 ஆம் ஆண்டில் (கி பி 712 இல்) பாண்டிய மன்னனுல் கொடுக்கப் பெற்று, வயிரவன்கோயில் நகரத்தார்களால் சிறப்பாகத் திருப்பணி செய்யப் பெற்று விளங்குகிறது. இங்கு எழுந்தருளியுள்ள வடிவுடையம்மை உடனுகிய வளரொளி நாதர் ததீசி முனிவர், சந்திரன் இந்திரன், சுக்கிரன் முதலியர்களால். வழிபடப்பட்டதையும், தேவர் குறை தீர்க்க வயிரவக்கோலம் பூண்டதையும் சேந்தன்குடி, வி. நடராசக் கவிராயர் எழுதிய தலபுராணம் தெரிவிக்கிறது.

'விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பைரவ னுகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னுரே'.

என்று அப்பர்பெருமான் பாடிய வயிரவமூர்த்தி இத்தலத்தில் சிறப்புடன் வழிபடப் பெறுகிருர் ஒரே கல்லால் ஆன சண்டீசர் திருக்கோயிலும், சஞ்சீவிமலை கொண்டு வந்து தன்னுயிர் காத்த அனுமனை இராமபிரான் வழிபடும் கலையழகு வாய்ந்த சிற்பமும் இத்தலத்திற்குரிய பிற சிறப்புக்களாகும்.

இத்தகைய திருக்கோயிலின் கோபுரங்களும், தளவரிசைகளும், கருவறைகளும் திருப்பணி செய்யப்பெற்று ஏழகப்பெருந்திருவான வயிரவன்கோயில் நகரத்தார்களின் பெருமுயற்சியால், நாளது துர்மதி ஆண்டு தைத்திங்கள் 18-ஆம் நாள் (31—1—1982 ஞாயிற்றுக்கிழமை, சுக்ல சஷ்டி திதியும் ரேவதி நட்சத்திரமும், அமிருதயோகமும் கூடிய நன்னாளில், காலை 8–09 மணிக்கு மேல் 8-30 மணியளவில் கும்ப லக்கினத்தில் அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் எனப்படும் திருச்குடப் புனித நன்னீராட்டு விழா நடைபெற விருக்கிறது.

பக்தகோடிகள் அனைவரும் வந்து தெரிசித்துப் பேரின்பப் பெருவாழ்வு பெற வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

| தேதி | கிழமை | காலை நிகழ்ச்சிகள் | மாலை நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|
| புதன் | தை 14வ 27—1—1982 | 11-12 அனுக்ஞை விக்னேஸ்வர பூஜை, தனபூஜை, | வாஸ்து சாந்தி |
| வியாழன் | தை 15வ 28—1—1982 | 12- 1 கடஸ்தாபனம் யாகசாலை பூஜைகள் | யாகசாலை பூஜை |
| வெள்ளி | தை 16வ 29—1—1982 | ,, | யாகசாலை பூஜை |
| சனி | தை 17வ 30—1—1982 | ,, | ,, |
| ஞாயிறு | தை 18வ 31—1—1982 | காலை மணி8-09ச்குமேல் 8-30 மணிக்குள் கும்ப லக்கினத்தில் திருக்குட நீராட்டு விழா | மகாபிஷேகம் |

யாகசாலை வழிபாடுகளில் வேதபாராயணம், திருமுறைப் பாராயணம் ஆகியவை நிகழும், சமயச் சொற்பொழிவு, கவியரங்கம், பட்டிமண்டபம், இன்னிசை முதலிய நிகழ்ச்சிகளும் தனி நிகழ்ச்சி நிரலில் குறிப்பிட்டவாறு நடைபெறும்.

வாழி வயிரவன் கோயில் வளர்புகழ்; வாழி வண்மை வணிகர் பெருங்குலம் ;
வாழி மாதுமை மன்னன் அடியவர்; வாழி வைதிக சைவ மரபெலாம் !

வயிரவன்பட்டி
துன்மதி ஹூ கார்த்திகை மீ 21வ
6—12—1981

இங்ஙனம்,
ஏழகப் பெருந்திருவான வயிரவன் கோயில் நகரத்தார்.

குறிப்பு : கும்பாபிடேக தினத்தன்று இரவு பஞ்சமூர்த்திகள், வயிரவ சுவாமி திருவீதியுலா நடைபெறும்.

உ
சிவமயம்
ஸ்ரீ வயிரவசுவாமி துணை

அருள்தரும் அன்னை வடிவுடையம்பாள் உடனுகிய
அருள்மிகும் வளரொளிநாதர் வயிரவ சுவாமி

# திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா

**நகர வயிரவன் கோவில்**

## துர்மதி ஆண்டு தை மீ 18உ ஞாயிற்றுக்கிழமை

**(31-1-1982)**

இராமநாதபுரம் மாவட்டம்
திருப்புத்தூர் அருகில் 7 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள

## நகர வயிரவன் பட்டியில்

காலை 8 மணி அளவில் ''திருக்குட நன்னீராட்டு''
விழா நடைபெறும்.

அன்று இரவு பஞ்சமூர்த்திகள், வயிரவசுவாமி திருவுலாவும், 29—1—82 முதல் இன்னிசை, கவியரங்கம், பட்டிமண்டபம், வில்லுப்பாட்டு, சமயச் சொற்பொழிவுகள் ஆகியவையும் நடைபெறும்.

**அனைவரும் வருக! வருக!!**



பிரதான சாலையில் அமைத்த வளைவு




யாகசாலையின் நுழைவாயில் வளைவு



மத்திய அமைச்சர் திரு R. V. சுவாமினாதன் குடும்பத்தினருடன்



திருக்குளமும், திருக்கோவிலும்



கடங்கள் புறப்படுதல்



அருள்தரு அண்ணல் வயிரவசுவாமி கோபுரம்
திருக்குட நன்னீராட்டு நிகழ்கிறது.



இராஜகோபுரம் யாகசாலை



உற்சவர் யாகசாலை



நந்திகேஸ்வரர் யாகசாலை



மகாலெட்சுமி யாகசாலை



நவக்ரக யாகசாலை



ஸ்தல விருக்ஷம்



ஸ்ரீ கருப்பர் யாகசாலை



சண்டீஸ்வரர் யாகசாலை



அருள்தரு வயிரவர் யாகசாலை



அருள்மிகு வளரொளிநாதர் யாகசாலை



அருளதரும் அன்னை வடிவுடையம்பாள் யாகசாலை



தெட்சிணாமூர்த்தி யாகசாலை



விநாயகர் யாகசாலை



சுப்ரமணியர் யாகசாலை



அறுபத்து மூவர் யாகசாலை



நால்வர் யாகசாலை



திருச்சி சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ கோவிலூர் ஆதீனம்
யாகசாலைக்கு வருகை புரிதல்



புதுக்கோட்டை
ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்



ராஜாசர் முத்தையா செட்டியாருக்கு
பொன்னுடை அணிவித்தல்



ராஜாசர் முத்தையா செட்டியாருக்கு
வரவேற்பு

யாகசாலை மேற்பார்வையாளர்கள்



திரு அ.ராம.அ.லெ அ.முவீ.
முத்துவீரப்பசெட்டியார்
தேவகோட்டை



திரு பழ. சோம.
கைலாசம் செட்டியார்
தேவகோட்டை



திரு சிக. பழ. சு. பழ.
நாச்சியப்ப செட்டியார்
தேவகோட்டை



திரு இளை.
சுப்பையா செட்டியார்
தேவகோட்டை



தேவகோட்டை திரு மு. க.
பெரி. மு. வீரப்ப செட்டியார்



தேவகோட்டை திரு
V. RM. ராமனாதன் செட்டியார்



டாக்டர் SP. அண்ணாமலை
பதிப்பாசிரியர்-மலர்க்குழு



கண. தியாகராஜன்
செட்டியார்




பட்டிமண்டபத்தின் தலைவர்
குன்றக்குடி அடிகளார்




முரு. பழ. இரத்தினம் செட்டியார்
சொற்பொழிவு



சர்வசாதகம் திரு
K.S. வைத்யனாத
சிவாச்சாரியார்



கும்பாபிஷேகத் தலைவருக்கும்
தேவகோட்டை திரு மு. கு.
முத்தையா செட்டியாருக்கும்
கோவில் மரியாதை




இசை நிகழ்ச்சியில் நடனம்




கவியரங்கம்



கலா நிகழ்ச்சியில் ஆடவர் பகுதி



யாகசாலையில் மகளிர் பகுதி



செயலர்
திரு இராம. இராமனுதன் செட்டியார்
தலைவர்
திரு ப வ. ராம. குழந்தையன் செட்டியார்
உபதலைவர்
திரு இராம. ரெங்கநாதன் செட்டியார்
செய லர்
திரு A. திருநாவுக்கரசு செட்டியார்



துணைச் செயலர்
காரைக்குடி திரு அ.
திருநாவுக்கரசு செட்டியார்



செயலர்
நடராஜபுரம் திரு
இராம. இராமனுதன்



கடங்கள் எழுந்தருளல் தலைவர் குழந்தையன் செட்டியார் துணைவியாருடன்



திரு RM. சுப்ரமணியன்
நடராசபுரம்
மலர்க் குழு உறுப்பினர்



ராம. லெ. ராம. லெ.
லெட்சுமணன் செட்டியார்
மலர்க்குழு உறுப்பினர்
தேவகோட்டை



திருக்குட நீராட்டிற்கு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி சுவாமிகளும்
கோவிலூர் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞானதேசிக சுவாமிகளும் வருகை புரிதல்



தலைவர்
இராயபுரம் திரு பவ. ராம
குழந்தையன் செட்டியார்



உப தலைவர்
கருங்குளம் திரு இராம.
ரெங்கநாதன் செட்டியார்



டாகனேரி திரு அரு. கிருஷ்ணன் செட்டியார்
தர்ம பரிபாலன சபைத் தலைவர்



ஆவி, நா. நாகப்ப செட்டியார்
பாகனேரி
கலை நிகழ்ச்சிகள் அமைப்பாளர்

உ

சிவமயம்

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

# திருக்குட நன்னீராட்டு விழா

ராம.லெ.ராம.லெ. லெட்சுமணன் செட்டியார்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் கோயில்கள் ஒன்பதனுள் ஒன்றும், இராம நாதபுரம்மாவட்டம் திருப்புத்தூருக்கு நான்கு கல் தொலைவில் குன்றக்குடிச் சாலையில் அமைந்தது மாகிய நகர வயிரவன்கோயி லில் துர்மதி ஆண்டு தைத்திங்கள் 18ம் நாள் (31-1-1982) ஞாயிற்றுக்கிழமை காலை 8.10மணிக்கு திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ந்தேறியது இக்குட நீராட்டு இத்திருக் கோயிலில் நிகழும் ஐந்தாவது குட நீராட்டாகும் இன்றைக்கு118ஆண்டுகளுக்கு முன்பு இரத்தாட்சி ஆண்டு ஆவணித் திங்கள் 6ம் நாள் சனிக் கிழமை (கி.பி. 1864)ஏழகப் பெருந்திருவான வயிரவன் கோயில் நகரத் தார்கள் திருப்பணி செய்வதற்குக் கால் கோள் (தச்சு) செய்திருக்கிறார்கள் திருப் பணி 30 ஆண்டுகள் நடந்துமுதலாவது திருக் குட நன்னீராட்டு விழா ஜெய ஆண்டு சித்திரைத் திங்கள் 16ம் நாள்(27-4-1894)ல் நிகழ்த்தது என்றும், பின்னர் இரண்டாவது திருக்குடநீராட்டு குரோதி ஆண்டு ஆவணித் திங்களில் (1904) நிகழ்ந்ததென்றும் மூன்ரு வது திருக்குட நீராட்டு பராபவ ஆண்டு தைத்திங்கள் 19 ம் நாள் (1928) அன்றும், நான்காவது திருக்குட நீராட்டு விளம்பி ஆண்டு தைத்திங்கள் 30ம் நாள் வியாழக் கிழமை (12 2. 1959) அன்றும் நிகழ்ந்தன என்றும் தெரியவருகிறது.

வயிரவன் கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்

19. 9. 1979 அன்று நடந்த கோயில் வாசல் கூட்டத்தில் ஏற்பட ஒருமனமான முடிவின்படி முன்னைய நிருவாகத்தினரிட மிருந்து நிருவாகம் மாற்றப்பட்டது.வயிரவன் கோயில் நாட்டுக்கோட்டை நகரத்தார்சங்கம் 7.2. 1980 அன்று நிறுவப்பட்டது. வயிரவன் கோவில் நகரத்தார்கள் நிரந்தரமாக வசித்து வரும் ஒவ்வோர் ஊரிலிருந்தும் மொத்தம் 73 செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுத்து அனுப்பப்பெற்றுர்கள். அவர்களிலிருந்து 15 பேர் கொண்ட உபகுழு தேர்ந்தெடுக்கப் பெற்று, அக்குழுவினர் நிருவாகத்தைக் கவனித்து வருகின்றனர்.

இச்சங்கத்தின் தலைவராக இராயபுரம் திரு ப.வ. ராம. குழந்தையன் செட்டியாரும் துணைத்தலைவர்களாக கருங்குளம் திரு இராம ரெங்கநாதன் செட்டியாரும், வலையபட்டி, திரு சா. பழநியப்ப செட்டியாரும் செயலாளர் களாக நடராசபுரம் திரு இராம. இராம நாதன் செட்டியாரும், காரைக்குடி திரு A. திருநாவுக்கரசு செட்டியாரும் தேர்ந் தெடுக்கப் பெற்றனர். மேற்கண்ட உபகுழு வினருடன் மற்றும் 16 பேர் கொண்ட கும்பாபிஷேகக் குழு அமைக்கப் பெற்றது. இந்தக் குழுவினை இந்து அறநிலைய ஆட்சித் துறையினர் அன்புடன் நியமித்தும் திருத் பணிக்கு இசைவு அளித்தனர்.

அனைத்து ஊர் நகரத்தார்களுக்கும் கும்பாபிஷேக வேலைகள் பகிர்ந்தளிக்கப் பெற்றன.

திருப்பணி: வயிரவன் கோயில் தரும பரிபாலனசபைத்தலைவரும் வயிரவன்கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்க உபகுழு உறுப்பினருமான பாகனேரி திரு அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் வயிரவன் கோயிலில் பழுதுபார்த்துத் திருப்பணி செய்யும் பொறு ப்பை ஏற்றுத்தமது முதுமையையும் பாராமல் அங்கேயே இருந்து நிறைவு செய்தார்கள். கல்லுப்பட்டி பொறியியல் வல்லுனர் திரு.SP. இராமசாமி மேற்பார்வையில்வேலைகள் நடை பெற்றன. கோவில் மேல் தளம் புதுப்பிக்கப் பெற்றும், அனைத்துக் கோபுரங்கள், விமானங் களின் சுதைச்சிற்பங்கள் வல்லுநரைக் கொண்டு திருத்தப் பெற்றும் ஐந்து வண்ணம் தீட்டப்பெற்றும், சுவாமி, அம்பிகை

வயிரவர் விமானக் கலசங்கள் தங்கத் தகட்டால் வேயப்பெற்றும் கோவிலின் உள் தளங்கள் செப்பனிடப்பெற்றும் திருக்குளம் முழுவதும் செப்பனிடப் பெற்றும் திருப்பணி நிறைவுற்றது, கண்டனூர் திரு.வயி. ராம. ந ராம. வயிரவன் செட்டியார் கோவிலிலேயே இருந்து திருப்பணி வேலைகள் அனைத்தையும் மேற்பார்வை செய்தார்கள். அவர்களின் இன் சொல்லும் இன்முகமும் அனைத்து அலுவலர் களையும் ஊக்குவித்துஇயக்கின. அவர்களுடன் கீழ்ச்சிவல்பட்டி திரு. அழகப்ப செட்டியாரும் இருந்து உதவினார்கள்.

இவற்றுடன் உற்சவத் திருமேனிகள் அனைத்திற்கும் இருப்புக் கம்பிகளாலான பாதுகாப்பு அறைகள் அமைக்கப் பெற்றன. அனைத்து வாகனங்களும் புதுப்பித்து வண்ணம் தீட்டப்பெற்றன.

தலைவர் திரு. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் தமது பல அலுவல்களுக் கிடையிலும் வயிரவன் கோவில் வேலை களுக்கு முதன்மையளித்து ஜெகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி சுவாமிகளின் அருளுரை களைச் சிரமேற்கொண்டு அடிக்கடி கோவிலுக்கு வந்திருந்து அலுவல்களனைத் தையும் செவ்வனே நிறைவேற்றினார்கள். அவர்களின் பாப்பிநைச்சேரி வெஸ்டர்ன் இண்டியா காட்டன்ஸ் நிர்வாக இயக்குனர் திரு. ராமசாமி செட்டியார் பலவகையாலும் அனைத்து உதவிகளையும் நல்கினார்கள்.

உபதலைவர் திரு இராம. ரெங்கநாதன் செட்டியார் அல்லும் பகலும் வயிரவன் கோவிலின் சிந்தனையாகவேயிருந்து விடா முயற்சியுடன் செயற்பட்டுத் தமது செல் வாக்குகளனைத்தையும் பயன்படுத்தித் திருப் பணி, குடமுழுக்கு விழா, சுவாமிபுறப்பாடு, சிறப்புமலருக்கு விளம்பரம் முதலான வைக்குத் தனித்தனியே நன்கொடையாளார் கள் மூலம் பெருநிதியும்திரட்டஉதவினார்கள்.

செயலாளர்களில் ஒருவரான திரு. இராம .இராமநாதன் செட்டியார்.திருப்பணி நன்கொடை வசூலில் கலந்து கொண்டும் ஊர்திகளைக் கொடுத்தும் உதவினார்கள்.

மற்றொரு செயலரான திரு. A. திருநாவுக்கரசு செட்டியார் முழுப்பொறுப்பையும்ஏற்று அடிக்கடி கோவிலுக்கு வந்தும் தமது உதவியாளர்களையனுப்பியும் நிதி வசூல்களில் கலந்து கொண்டும் பணப் பொறுப்புக்களனைத்தையும் திறமையாக நிர் வகித்தும் அவ்வப்பொழுது தேவையான அனைத்து உதவிகளையும் எல்லா வகையிலும் அளித்தும் மிகச் சீரியவகையில் செயலாற்றி னார்கள்.

நிதிகள் திரட்ட அனைத்து ஊர் நகரத்தார்களும் பெரிதும் உதவினார்கள். தேவ கோட்டையில் அனைவரிடமும் இடையருது முயன்று நிதி திரட்டிக் கொடுத்தும் அப்போதைக்கப்போது ஆலோசனைகள் கூறியும் திரு. முக. பெரி. மு. வீரப்ப செட்டியார் பெரிதும் உதவினார்கள்.

கும்பாபிஷேக யாக சாலையை அமைத்து மேற்பார்வையிட்டு நடத்தும் பொறுப்பை ஏற்கும்படி தேவகோட்டை திரு. அ. ராம. அ. லெ, அ. மு.வீ. முத்துவீரப்ப செட்டியார் திரு. பழ. சோம. கைலாசநாதன் செட்டியார் திரு.சிக. பழ. சு. பழ. நாச்சியப்பசெட்டியார் திரு. இளை. சுப்பையா செட்டியார் ஆகியோரைக் கேட்டுக் கொண்டதற் கிணங்க அவர்களும் இசைந்து, யாகசாலைப் பொறுப்பையும் அஷ்டபந்தன மருந்து உருண்டை கள் தயாரித்துச் சாத்துவதையும் யந்திர ஸ்தாபனம் செய்வதையும் ஏற்றுச் சிறப்புற நடத்தினார்கள். பிராமண போஜன மேற்பார்வையைத் தேவகோட்டை முக. பெரி. மு. முத்தையா செட்டியார் ஏற்றுத் திறம்பட நடத்தினார்கள். பாகனேரி திரு. RM முத்துப் பழனியப்ப செட்டியாரும் திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியாரும் திருமுறைப்பாராயணத்திற்குத் தம் செலவில் ஏற்பாடு செய்து சிறப்பாக நடத்திக் கொடுத்தார்கள். மதுரை அன்பர்களிருவர் யாகசாலைக்கும் கோவிலுக் கும் வேண்டிய மலர்களும் சந்தனக் கட்டைகளும் தாராளமாகக் கொடுத்து உதவி னார்கள். வயிரவன் கோயிலில் பிறந்த பெண் மக்களும் பிறபெருமக்களும் புதிய யாக சாலைக் கலசங்கள் 201 க்கு நிதி உதவி வழங்கியமை குறிப்பிட்டுப்பாராட்டத்தக்கது.

நாட்டரசன் கோட்டை திரு.கண்ணப்பா ஸ்ரீனிவாசன் கோயில் நிலங்களின் மேற்பார்வை செய்ததுடன் யாகசாலே, சாப்பாட்டுக் கொட்டகை, கலா நிகழ்ச்சிக் கொட்டகை ஆகியுவைகளின் தளங்களேயும் பிரதான சாலேயை இணேக்கும் நமது சாலேச் சீர் திருத்தம் முதலியவைகளே இரவு பகலாகவும் மிகவிரைவாகவும் செப்பனிட்டு அழகு படுத்தி ஆற்றுமணல் தூவிச் சீரமைத்துப் பேருதவி புரிந்தார்.

கோயிலின் உள்ளேயும் வெளியேயும் தூய்மை செய்து தெய்வத் திருமேனிகளுக்கு மருந்து சாத்தும் அலுவல்களில் தேவகோட்டை ஆவி. க. குடும்பத்தினர்கள். திரு. மாணிக்கம் செட்டியார் மெய்யப்ப செட்டியார், திரு. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோரும், தேவகோட்டை செ. வீர. யெ. திரு. கண. குடும்பத்தினர்கள் திரு. கண. தியாகராஜன் செட்டியார் திரு. சிந்தாமணி செட்டியார், திரு. சிற்சபேசன் ஆகியோரும் அவ்வூர்ப் பொறியியல் வல்லுனர் திரு. S. லெட்சுமணன் செட்டியாரும் இடையருது பணியாற்றி செவ்வனே நிறைவு செய்தார்கள். இவர்களில் திரு. ஆவி க. மெ. சோம. மெய்யப்ப செட்டியார் கலே நிகழ்ச்சிகள் அனேத்தையும் ஒலிப்பதிவு செய்தார்கள்.

வர்ணம் பூசும் வேலையைத் திரு. VE ST. வயிரவன் செட்டியார் மேற்பார்த்து நிறைவு செய்தார். சுவாமி புறப்பாட்டின் பொறுப்பை ஷெ யாரும். நற்சாந்து பட்டி திரு. PL.S R.M. ராமநாதன் செட்டியாரும் ஏற்றுக் கோலாகலமாகநிறைவு செய்தார்கள். சுமார் 36 ஆண்டுகளுக்குப் பின்னர் இத்திருக் கோவிலில் சுவாமி புறப்பாடு நிகழ்வது இக்-கும்பாபிஷேகத்தில்தான் என்று தெரியவருகிறது.

*யாகசாலே அமைப்பு :* திருக் கோவிலின் முன்னே ஈசானதிக்கில் திருக்குளத்தில் வட கரையில் சுமார் 136 அடி நீளம் 86 அடி அகலம் உள்ள அழகான கொட்டகையில் இரண்டு யாக சாலைகள் முறையே பிரதான தெய்வங்களுக்காகவும் பரிவார தெய்வங்களுக்காகவும் அமைக்கப் பெற்றன. 201 புதிய கலசங்களில் புனித நீர் நிரப்பப் பெற்று கலாகர்ஷணம், பிரதிஷ்டை, அலங்காரம் செய்யப் பெற்று 28-1-82 முதல் யாகசாலே பூஜைகள் நடைபெற்றன.

பெங்களூர்கைலாச ஆஸ்ரம பீடாதி-பதி ஜெகத்குரு ஸ்ரீஸ்ரீஸ்ரீ திருச்சி மகாசுவாமிகள் முன்னிலேயில் பெங்களூர் கைலாசஆஸ்ரமத்தில் வயிரவயந்திரம் எழுதப் பெற்று ஒரு மண்டலம் முறைப்படி பூஜையில் வைக்-கப் பெற்று ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மகா சுவாமிகளின் நேர்பார்வையில் கோயில் கர்ப்பக்கிரகத்தில் பிரதிஷ்டை செய்யப்பெற்றது. ஸ்ரீ ல ஸ்ரீ மகா சுவாமிகள் வயிரவன் கோவிலின் சீர்திருத்தப் பணிகளிலும், வயிரவன் கோவில் நகரத்தார்களிடமும் கொண்டுள்ள ஈடுபாடு வயிரவன் கோவில் நகரத்தார்களுக்குப் பெரும் பாக்கியமும் வரப் பிரசாதமுமாகும். அவர்களின் ஆலோசனேகளின்படி சீரமைத்தால் உலகமுள்ளளவும் வயிரவன் கோவில் பிரகாசிக்கும். கும்பாபிஷேகக் கமிட்டி அங்கத்தினர்கள் அனேவருக்கும் யாகசாலேயில் பெங்களூர் கைசால ஆஸ்ரமத்தின் சார்பில் பரிவட்டம் கட்டப் பெற்றது மிகச் சிறப்பாகும்.

31. 1 1982ம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலே 8. 10 மணிக்குத் திருக்குட நன்னீராட்டு, கோவிலுர் ஆதீன மகாசன்னிதானங்கள் ஸ்ரீ லஸ்ரீ இராமனுத ஞான தேசிக சுவாமிகள், ஜெகந் குரு ஸ்ரீஸ்ரீஸ்ரீ திருச்சி சுவாமிகள், கலாமடம் பாதரக்குடிமடம் ரவி சுவாமிகள், தவத்திரு குன்றக்குடிஅடிகளார் முன்னிலேயில் மிகச்சிறப்பாக நடந்தேறியது. குட நீராட்டு விழாவிற்கு டாக்டர் ராஜாசர் மு. அ. முத்தையா செட்டியார், மத்திய அமைச்சர் திரு. ஆர். வி. சாமிநாதன், புதுக் கோட்டை ஸ்ரீசாந்தானந்தசுவாமிகள்மதுரை மீனுட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் அறங்காவலர் குழுத்தலேவர் திரு வி.என்.சிதம்பரம் செட்டியார் ஆகியோரும் மற்ற பெருமக்களும் லெட்சக்கணக்கில் பக்தர்களும் நகரத்தார் சமூகத்தினரும் வருகை புரிந்துதரிசனம் தசய்தனர். திருச்சிராப்பள்ளி வானெலிநிலேயத்தார் குட நீராட்டு விழாவின் நேர்முக வர்ணனேயைப் பதிவு செய்தனர். பொற்கிழிக்கவிஞர் திரு. அரு சோமசுந்தரம் இந்

நேர்முகவருணனையைச் சிறப்புறச் செய்தார். கும்பாபிஷேக நாள் அன்று மாலை 6. 45 மணிக்கு இவ்வருணனை ஒலிபரப்பப்பெற்றது.

அன்று மாலை திருக்கோவிலில் மகாபிஷேகம் நடைபெற்றுத் தெய்வத்திருமேனிகளுக்கு விசேஷஅலங்காரம் பூஜைகள் நடத்தப் பெற்றன.

இரவு பஞ்ச மூர்த்திகள் ஸ்ரீ வயிரவ சுவாமிதிருவீதிஉலாக் காட்சிநடைபெற்றது.

சிறப்புச்சொற்பொழிவு, கவியரங்கங்கள் பட்டிமன்றம், இன்னிசை, வில்லிசைநிகழ்ச்சிகள், நடனம், கரகஆட்டம், நாதசுரஇசை முதலிய கலைநிகழ்ச்சிகள் 29, 30, 31- 1- 82 ஆகிய மூன்று நாட்களிலும் அதற்கெனத் திருக்குளத்தின் தென்கிழக்கே அமைக்கப் பெற்ற பிரதானக் கொட்டகையில் நடைபெற்றன. அவற்றை பாகனேரி திரு. ஆவி. நா. நாச்சியப்ப செட்டியார் சிறப்பாய் நடத்தினர்கள்.

பசுமடத்தின் அருகில் மிக விசாலமான கொட்டகைகள் சமயலுக்காகவும் சாப்பாட்டிற்காகவும் அமைக்கப் பெற்றன. 29, 30. 31. 1. 82 ஆகிய மூன்று நாட்களிலும் பல்லாயிரக்கணக்கான அன்பர்களுக்குச் சிறப்பான முறையில் வயிரவன் பட்டியிலும், பிள்ளையார் பட்டியிலும், சிறு கூடல்பட்டியிலும் உணவு வகைகள் தங்கு தடையின்றிச் சீரிய முறையில் அளிக்கப் பெற்றன. சிறப்பு மலர் நிதியிலிருந்து செலவிட்டு மேற்படி மூன்றுஇடங்களிலும் விருந்து வழங்கப்பெற்றது. வயிரவன்பட்டி நகர விருந்தைக் கண்டனூர் வயி. ராம. ப. பழனியப்ப செட்டியாரும், காரைக்குடி திரு. அண்ணமலையாரும், வலையபட்டி நகரத்தார்களும், தேவகோட்டை இளைஞர் சங்கத்தினரும் மேற்பார்வை செய்து மிகத் திறம்பட நடத்தினர். பிள்ளையார்பட்டி பெண்கள் விடுதியில் இராயபுரம் திரு. பழனியப்ப செட்டியார் அன்பர்கள் சிலருடன் மிகச்சிறப்பான முறையில் மேற்பார்வையிட்டு உணவளித்தார்கள். சிறு கூடல்பட்டி நாகப்பா சைக்கிள் மார்ட் முத்துக்கருப்பன் செட்டியாரின் புதிய இல்லத்தில் அறுசுவைவிருந்து அளிக்கப்பட்டது. மேலைச்சிவபுரி திரு. A. ராமனதன் செட்டியாரும் தேவகோட்டை திரு. சித. சொ ந. வீரப்ப செட்டியாரும் மிகப் பொறுப்புடன் மேற்பார்வை செய்து நன்கு சிறக்கச் செய்தார்கள். பலசரக்குகளைத் தேவகோட்டை திரு லெ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் வாங்கிக் கொடுத்தார்கள். கீழச்சிவல்பட்டி ஆசிரியர் திரு. முத்தையா செட்டியார் காய்கறிகளை அப்போதைக்கப்போது வாங்கிக் கொடுத்தார்கள். திருச்சிராப்பள்ளியிலிருந்து, இலைக்கட்டுக்களைத் திரு PR. சொக்கலிங்கம் செட்டியார் வாங்கி யனுப்பினர்கள். இம் மூன்று இடங்களிலும் ஜாதி மதபேதமின்றி விழாக்காண வந்திருந்த மக்கள் அனைவருக்கும் இடையருது அறுசுவை விருந்து அளிக்கப்பட்டது.

வெளிப்புற விநாயகர் கோவிலின் அருகில் தண்ணீர்ப்பந்தல் அமைத்து இன் சுவை நீர் வழங்கப் பெற்றது.

மின்விளக்கு அலங்காரங்களையும், ஒலி பெருக்கி ஏற்பாடுகளையும் திண்டுக்கல் அங்கு விலாஸ் M. V. முத்தையா பிள்ளை சன்ஸ் நிறுவனத்தினர் மிக அழகுறச் சிறப்பான முறையில் செய்து கொடுத்து உதவினர்கள்.

கோவில்திருப்பணிக்கும், கும்பாபிசேஷக விழாவிற்கும் உணவளித்தலுக்கும் மெய்யன்பர்கள் பலர் தனித்தனியே பொறுப்பேற்று நிதியளித்துச் சீரியமுறையில் நிறைவேற்றித் தந்தனர். வயிரவன் கோவில் நகரத்தார் சங்கத்தின் நற்பணிகளுக்காக இக்கோவிலைச் சேர்ந்த பெருமக்கள் பலர் பெருநிதியும் வழங்கி வருகிருர்கள். வயிரவன் பட்டியைச் சேர்ந்த மக்கள் அனைவரும் சுவாமி புறப்பாட்டிற்கும் பாதுகாப்பிற்கும் மற்ற பணிகளுக்கும் சிறந்த ஒத்துழைப்பு நல்கினர்கள்.

திருக்குடநன்னீராட்டு விழாச்சிறப்புமலர்க் குழு தியாகராசர் கல்லூரி முதல்வர் டாக்டர் சுப. அண்ணமலையைப் பதிப்பாசிரியராகக் கொண்டு அமைக்கப் பெற்றது. அவர்களின் பொறுப்பிலும் திரு. இராம. ரெங்கநாதன் செட்டியாரின் பெருமுயற்சியிலும் விளம்பரங்கள் சேர்க்கப்பட்டன. அன்பர்கள் பலரும் உதவினர்கள். குறிப்பாகச் சென்னையில் அரிமளம் திரு A. கணபதி செட்டியாரும், பாகனேரி திரு R. ராமனதன் செட்டியாரும்

கோவையில் திருகலைமகள் இராமனுதன் செட்டியார் திரு. M.V.M. முத்துச் செட்டியாரும், பெங்களூரில் திரு V.சேதுராமன் செட்டியார், திரு. பி.கு. நா. பெரியகருப்பன் செட்டியார், மதுரையில் கெமிக்கல் ஏஜன்ஸீஸ் திரு. AR. முத்தையா செட்டியார், திரு RM. SP. சுப்பிரமணியம், திரு. AL. வீரப்ப செட்டியார், ஒக்கூர் சிவபூஜைச் செல்வர் திரு. சாத்தப்ப செட்டியார் முதலியோரும் பெரிதும் உதவினுர்கள். டாக்டர் சுப. அண்ணுமலை தமது இடையருத அலுவல்கள், பிரயாணங்களுக்கிடையில் மலரை மிக அழகுறப் பதிப்பித்து அமைத்துக் கொடுத்துள்ளார்கள்.

மின்சார வாரியப் பொறியாளர் திரு. மகேசுவரலால் வயிரவன் பட்டிப்பகுதிகளில் புதியடிரான்ஸ்பார்மர் அமைத்துக் கொடுத்து மின் கம்பிகளை மாற்றித் தடையற்ற மின்சாரம் வழங்குவதற்கு மிக விரைந்து உதவினுர். அவருக்கு நன்றி உரியது.

கல்லல் திரு. நா. நா. சுவாமினுதன் செட்டியார் பாதுகாப்பு சுகாதார ஏற்பாடுகளைச் செவ்வனே செய்தார்கள். அன்பர்கள் பலர் தங்களது டிராக்டர்கள், லாரிகள், வான்கள், கார்கள் முதலியவைகளை அப்போதைக்கப்போது தங்கு தடையின்றி தந்து உதவினுர்கள். பஸ் போக்குவரத்து நிறுவனத்தினர் பிள்ளையார்பட்டிக்கும் வயிரவன் பட்டிக்குமிடையே மக்களுக்கு இலவ சபஸ் வசதி கொடுத்து உதவினுர்கள்.

இந்து அறநிலையத் துறையினருக்கும். வயிரவன் கோயில் திருப்பணிக்கும் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கும் சிறப்பு மலருக்கும் நிதி உதவியளித்தும், திருப்பணிகளை மேற்பார்வையிட்டும், யாகசாலையை அமைத்து நடத்துவித்தும், உணவளித்தலை மேற்பார்வையிட்டும், சுவாமி புறப்பாட்டை நடத்துவித்தும், கலை நிகழ்ச்சிகளை நடத்திக் கொடுத்தும், பட்டிமன்றம், கவியரங்கம், நேர்முக வர்ணனை ஆகியவற்றில் பங்கு பெற்றும், உதவிய அனைவருக்கும் கூட்டத்தினரை ஒழுங்குசெய்து உதவிய சாரணர் இயக்கக் குழுவினருக்கும் பாதுகாப்புக்கு உதவிய காவல் துறையினருக்கும் தொடர்பான பிற பணிகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஒத்துழைப்பு நல்கிய அனைத்துப் பெருமக்களுக்கும் நன்றிஉரியது. கோயில், விடுதி சிப்பந்திகள் அனைவருக்கும் பாராட்டு உரியது.



## ஆசாரியருடைய பாவனை

ஆசாரியன், ஆவாஹன காலத்தில் குரு ரூபத்தையும் நைவேதியம்

தூபம், தீபம், அருச்சனை காலத்தில் மந்திர ரூபத்தையும்,

அலங்கார காலத்தில் தாய் ரூபத்தையும், ஸ்தோத்திரம்,

ப்ரதக்ஷிணம் செய்யும் காலத்தில் பக்தனுகவும்

ஆகிருர்.

# வயிரவன் கோவிலிலுள்ள நிரந்தர அமைப்புக்கள்

**A. திருநாவுக்கரசு-செயலர்**

---

**நந்தவனம் :** இதன் மேற்பார்வையைக் கண்டனூர் வயி. அ. குடும்பத்தினர் ஏற்று நிர்வகித்து வருகின்றனர். இராமநாதபுரம் மாவட்டத்திலேயே நீலோத்பலமலரும் செங்கழுநீர்மலரும் உள்ள இது நந்தவனம்இது ஒன்று தான்.

கோவிலின் இரண்டு கால பூஜைகளுக்கு தனியே நிதி திரட்டி அதன் வளர்ச்சியிலிருந்து தனி அமைப்பின் மூலம் உச்சிக்காலப், அர்த்த ஜாமப் பூஜைகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன.

**பசுமடம் :** பெரிய வகுப்பு நகரத்தார் பெருமக்கள் நிதி திரட்டி தனி அமைப்பு ஏற்படுத்திப் பசுக்களைப் பராமரித்துத் தினந்தோறும் திருக்கோவிலில் கோ பூஜை செய்வித்து நாளிது துர்முகி ஆண்டு சித்திரைத்திங்கள் 5ம் நாள் முதல் அபிஷேகத்திற்கு பால் வழங்கி வருகிறார்கள்.

நாதசுரம் தெய்யனூர் வகுப்பினரால் தனி நிதி மூலம் ஏற்படுத்தப் பெற்று நடைபெறுகிறது. மேற்படி நிதியிலிருந்து கோவிலில் மின்சாரம் இணைப்பு ஏற்படுத்தப் பெற்று நடைபெறுகிறது. அர்த்த ஜாமத்திற்கு பல்லக்குச் செய்து வைத்து அதைத் தாக்குவதற்குரிய செலவை ஏற்று நடத்தி வருகிறார்கள்.

---

**ஆலயப் புருஷ வடிவம்**

1. கர்ப்பக்கிரஹம், தலை
2. அர்த்தமண்டபம், முகம்
3. ஸ்நபனமண்டபம், கழுத்து
4. மஹாமண்டபம், மார்பு
5. நர்த்தனமண்டபம், துடை
6. ஆஸதானமண்டபம், கணுக்கால்
7. மஹாகோபுரம். பாதங்கள்

# ''வளரொளி நாதர் வயிரவன்பட்டி வாவென அழைக்கிறது''

இராம. சிவராமன், எம் ஏ., பி.எல்.,

வளரொளி நாதர் வயிரவன் பட்டி
வாவென அழைக்கிறது
வான்முகில் முட்டும் வண்ணக் கோபுரம்
வாழ்த்தி மகிழ்கிறது
உளங்கவர் பைரவ உன்னதத் தலைவனின்
உயர்வு தெரிகிறது
ஊண்உறை உயிரின் சாந்தியின் பிறப்பிடம்
உள்ளொளி தருகிறது
களங்கமில் உள்ளம் காக்கும் இறையைக்
கனிந்து புகழ்கிறது
கான்நதிச் செல்வம் கரும்புக் கொடையால்
கடவுளைச் சேர்கிறது
இளகிய மனசில் இரக்கப் பண்பில்
இனியது தொடுகிறது
ஏனே தானே என்றிடும் சுயநலம்
ஏளனப் படுகிறது.

வடிவுடை அம்மன் வழங்கிடும் அருளில்
வாஞ்சை பொழிகிறது
வலையதில் சிக்கி வாடிடும் பூச்சியின்
வாதையும் ஒழிகிறது
துடிநிறை நெஞ்சு தொடர்ந்து வணங்கிடத்
தொல்லை அகில்கிறது
தோட்டப் பூக்கள் மலர்ச்சர மாகித்
தூய்மை புகல்கிறது.
இடிமினல் முழக்கம் இட்டிடும் தொடக்கம்
இன்பம் சிறக்கிறது
இறையுணர் வதுதான் ஆண்டிடும் போது
ஏற்றம் பிறக்கிறது
மிடிதீர் ஆலயக் குடமுழுக் காலே
மேன்மை மிளிர்கிறது
மேவிடு அருள்மிகு காட்சியால் ஆசி
மேலும் ஒளிர்கிறது.

# விருந்தோம்பல்

மக்கள் கவிஞர் அரு. நாகப்பன், உ. சிறுவயல்

நாடகத்தின் மேடையிந்த உலக மாகும்
நாமெல்லாம் அதிலாடும் நடிக ராவோம் ;
ஆடவைத்தான் நமையெல்லாம் ஒருவன் ; நல்ல
ஆண்பெண்ணாய் வேடம்வைத்தான் ; ஏனோ நம்மைக்
கூடவைத்தான், பிரியவைத்தான், பொம்மை போலக்
கூத்தாட வைக்கின்றான், ஆனா லும்தான்
நாடவைத்தான் இல்லறத்தில், எதற்கென் றேதான்
நாமறிய முயன்றதுண்டோ? குறிக்கோ ளுக்காய் !

பாடுபட்டுப் பொருள்தேடி நாளும் நாளும்
பனித்துளிகள் திரண்டதுபோல் செல்வம் சேர்த்துக்
கூடுகட்டி வாழ்கின்ற வாழ்க்கைக் குள்ளே
கூட்டத்தைக் கூட்டுவது தவறென் றாலும்
வீடுதேடி வந்தவரை வெளியே வைத்து
வீட்டுக்குள் தனியாகச் சுவைத்தி ருக்கும்
கேடுகெட்ட மனமெல்லாம் வேண்டா மன்றோ?
கிஞ்சித்தும் விருந்தோம்பல் தவற லாமா?

கொண்டுவிற்று வந்திட்டோம் வேற்று நாட்டில்
கோட்டைகொத் தளமாகக் கட்டி வாழ்ந்தோம் ;
வண்டுபோலச் சுறுசுறுப்பாய் உழைத்து ழைத்து
வருமானம் தனைப்பெருக்கி வாழ்ந்திட் டாலும்
உண்டுபசி யாறுமல், விசேடத் திற்காய்
ஊரெல்லாம் கூட்டித்தான் விருந்து வைக்க
முண்டுக்கல் முகப்பிலுள்ள கதவு செங்கல்
முதலாக விற்பதிலே பயனுண் டாமோ?

தான்உண்ணும் உணவினையே விருந்தாய் வந்த
தயரதனின் பிள்ளைக்குக் குகன்ப டைத்தான் ;
வான்புணர்ந்த அன்பாக அதனை ஏற்று
வள்ளலவன் வாழ்த்தியதைக் கம்பன் சொன்னான் ;
தேன்எனினும் அமுதெனினும் நமது சக்தி
தெரிந்தேதான் மகிழ்வுடனே படைத்த ளித்தால்
ஏன்வீட்டை விற்கவேண்டும்? மிச்சம், மீதி
எச்சில்இலைக் கண்காட்சி குறையு மன்றோ?

வரும்விருந்தை எதிர்நோக்கிக் காத்தி ருந்தே
வக்கணையால் ஏழெட்டு வகை சமைத்தே
தரும்விருந்தில் ஏழைபணக் கார ரென்ற
தரம்பார்த்துப் பாகுபாட்டை விதைத்திடாமல்
பெருவிருந்து படைத்திடுக ! ஏற்றத் தாழ்வுப்
பேதத்தை உடைத்திடுக ! மென்மை மிக்க
அருள்முகத்தை, அன்பகத்தைக் கொண்டி ருந்தால்
அகிலத்தில் விருந்தோம்பற் கிணையே இல்லை !



அருள்தரும் அண்ணல் வயிரவசுவாமி உற்சவத் திருமேனி



அருள்மிகு அன்னை வடிவுடையம்பாள்
உற்சவர்



அருள்தரும் அண்ணல் வளரொளிநாதர்
அருள்மிகு வடிவுடையம்பிகை
உற்சவத் திருமேனி



அருள்தரு சுப்பிரமணியர் வள்ளி - தெய்வானை மூலவர்



அருள்தரு சுப்பிரமணியர் உற்சவத் திருமேனி



விநாயகர் உற்சவத் திருமேனி



சண்டேசுவர் உற்சவத் திருமேனி



# வயிரவன் கோவில் மூர்த்திகள்

(பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன்)

## வடிவுடை அம்பாள்

வயலோரம் புரள்கின்ற கயல்கள் எல்லாம்
வடிவுடையாள் கயல்விழியின் வடிவம் காட்ட
அயல்நிற்கும் தென்னையெலாம் எங்கள் அன்னை
அம்பிகையின் அருள்காட்டி அமுதம் ஊட்டப்
புயல்காட்டும் கூந்தலுடன் பிறைபோல் நெற்றி
பூத்தநிலா முகம்காட்டப் பொழியும் அன்பால்
செயலெல்லாம் காட்டிவழி நடத்து கின்ற
செகன்மாதா வடிவுடையாள் பாதம் காப்பே!

## வளரொளிநாதர்

திருக்குளமோ பாதாளம் தொட்டு நிற்கத்
திகழ்கின்ற கோபுரமோ வானம் முட்ட
அருக்கனவன் ஒளிபோலக் கோடிப் பங்காய்
அழல்போலும் வளரொளியை வீசும் நாதா!
எருக்கம்பூ மாலையினை ஏற்ற போதும்
எழிலார்ந்த மல்லிகையாய் மணக்கும் ஈசா!
உருக்கமுடன் உன்பாதம் வணங்குகின்றோம்
ஒளிமயமாய் ஒளிர்பவனே! காப்பாய் அப்பா!

## வைரவர்

காலத்தை வென்றவனே
காசிக்குச் சென்றவனே!
கயிலை வாழும்
மூலத்தைக் காட்டியவா!
சூலத்தை நீட்டியவா!
ஞமலி முற்றும்
கோலத்தைக் காட்டியவா!
கொடுமையினை வாட்டியவா;
கோபம் கொண்டு
வேழத்தை உரித்தவயி
ரவநின்தாள் பணிகின்றோம்
வினைகள் தீர்ப்பாய்!

# மக்கமடை ஐயனூர்

மக்கமடை அருகி ருக்கும்
ஐயனுரே! - எங்கள்
மக்களெலாம் சிறக்க அருள்
புரிகுவாயே!
சொக்கனுக்கு மீனுட்சி
அந்த நாளில்- தினம்
சோறுகொண்டு போனவயல்
களத்து மேட்டில்

கோயில் கொண்டு பிள்ளைபெண்டு
காத்துநின்று -நம்
குலம் வளரக் காவல்கொண்ட
ஐயனுரே! - நம்
வாயில் வந்து பாதம்பாடி
வணங்குகின்றோம் - எம்
வாழ்க்கையெலாம் வளம்தந்து
வாழ்விப்பாயே!



# ஐந்திற்கு இரண்டு பழுதில்லை

பழனி இளங்கம்பன்



நிறைந்த நன்மையை அல்லது பயன்களை நாம் மிக்க ஆர்வமாக எதிர்நோக்கி, அதில் குறைந்த நன்மையையோ அல்லது பயனையோ நாம் பெற்றால் அதனை ஏதோ "ஐந்திற்கு இரண்டுபழுதில்லை" என்று கூறி ஒரு ஆறுதலைப் பெறுகின்றோம்

இந்த ஐந்தும் இரண்டும் நிறைவுக்கும் குறைவுக்கும் உள்ளதைப் போலவே நாம் பிறழ உணர்ந்து பொருள் கண்டு வருகிறோம். பக்தி உலகில் இந்த ஐந்தும் இரண்டும் காட்டும் பொருள் என்ன?

நம் சமயம் உலகில் மூத்த சமயம்: வளர்ந்து வரும் சமயம். எந்தனையோ உண்மைகளையும், நுண்மைகளையும் தன்னகத்தே கொண்டொளிரும் சமயம். கட்டுப்பாட்டை சுதந்திரமாகச் சிந்தித்து ஏற்கச் செய்யும் சமயம் கொள்கைகளை குறிக்கோள்களை கட்டாயத்தால் பரப்பாமல் உணர்ந்து ஏற்கச் செய்யும் உயர்ந்த சமயம்.

முதன்மையுற்ற சமயமாக மூதுலகில் நின்று வழிகாட்டும் நம் சைவத்தின் தத்துவப்பரப்பு எல்லைகாண முடியாததாக உள்ளது.

எண்களில் நிற்கும் பொருளைக் கொண்டே எழில் விளக்கங்களை நம் சைவம்பேசும்.

ஒன்றவன்தானே இரண்டவன்இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன்ஆறுவிரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தாமுணர்ந் தெட்டே

இப்படி எணகளின் வரிசையிலே எழில்திருமந்திரம் விளக்கங்களை நல்கக் காண்கிறோம்.

ஆகவே எண்களில் எண்ணிக்கை மட்டும் இன்றி ஏற்ற விளக்கங் களும் உள்ளன. அம்முறையில் அமைந்ததே இந்த ஐந்தும்-இரண்டும்,

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்தாகமங்களும்
ஐம்பதெழுத்தின் அடைவை அறிந்தபின்
ஐம்பதெழுத்தே ஐந்தெழுத்தாமே

ஐந்தெழுத்தாகிய சிவாயநம என்னும் மந்திரம் உயிர்மந்திரம், ஓத இனிக்கும் மந்திரம். சிவமந்திரமாகிய இம்மந்திரம் சிவனருளாலே ஓதப் பெறும் மந்திரம். அவன் அருள் கொண்டு அவன்நாமத்தை ஓதியடைகின்ற இன்பம் அந்தமில்லாத இன்பம். எனவேதான்

சிவனருளாய சிவன்திருநாமம்
சிவனருளான்மாத் திரோதமலமாயை
சிவன்முதலாகச் சிறந்து நிரோதம்
பவமதகன்று பரசிவனுமே

அருளைவழங்குகின்ற அவன், அவன் தனது நாமத்தாலே நமக்கு நற்பேற்றை வழங்குகின்ருன்.

எளிய வாதுசெய்வார் எங்கள் ஈசனை
ஒளியை யுன்னி உருகும்மனத்தராய்
தெளிய ஓதிச் சிவாயநமவென்னும்
குளிகை யிட்டுப்பொன்ஆக்குவன் கூட்டையே

வேதமெலாம் போற்றும் விண்ணுக்கமுதான இறைவனின் நாமத்தை நவின்று காணும் இன்பம் நவிலவொண்ணுதது அத்தகைய இன்பத்தை நாம் ஓதிஓதி உயிர்க்குறுதி தேடிக் கொள்ள வேண்டும்.

இன்றைய வாழ்க்கையில் எல்லாம் சுருங்க வேட்கைகள் விரிகின்றன. வேதனைகள் விரிகின்றன பயணங்கள் விரிகின்றன. பரபரப்பு மிக்க இல்வாழ்க்கையில் எல்லாம் சுருங்கக்காண்கின்ருேம்.

அதற்கேற்ப நம் வாழ்க்கையில் பலப்பல மாற்றங்கள் பக்தித் துறையிலும் இந்த மாற்றங்கள் கால்கொள்ளும் அல்லவா? அதற்கேற்ப ஐந்தெழுத்தாகிய சிவாயநம என்ற மந்திரத்தை நாம் ஓதி உருக முடியாமல் போனுலும் அவன் நாம நினைவு நம்மை விட்டு நீங்கமுடியாதே. ஆதலால் அவன் திருநாமமாகிய ஐந்தெழுத்தை ஓத இயலா விட்டாலும் இரண்டெழுத்தையாவது ஓதுங்கள். ஏனென்ருல் ஐந்துக்கு இரண்டு பழுதில்லை. அதுவும் நம்மைக் காக்கும் என்றே நம் சமயப் பெரியோர்கள் நமக்கு சலுகை வழங்கி உள்ளார்கள். சிவாயநம என்ற எழுத்துக்களில் முதலில் உள்ள சிவா என்ருலும் போதும் நமக்குப் பழுது வாராது. ஏனைய மூன்று எழுத்துக்கள் அதனுள் அடங்கிவிடுகின்றன. ஆகவே சிவா சிவா என்ருேதி இன்பம் காண்க என்றே நம் முன்னேர்கள் நமக்கு வழங்கியுள்ள இவ்வாய்ப்பு எத்தகையது? இந்தச் சுருக்கத்தில் நம் வாழ்வின் பெருக்கம் அடங்கி இருப்பதால் தான் திருமந்திரம் அழகாக இதை நமக்கு உணர்த்துகின்றது.

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவஎன்றிடத் தீவினைமாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவஎன்னச் சிவகதிதானே



# வயிரவன் கோயிலும் வைப்புத்தலம்தான்

பழ. சண்முகம்

மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாகத் தொடங்குவோர் திருமுறைகளால் வழுத்தப்பெற்ற தலங்களுக்கு அதிகச் சிறப்புக் கொடுத்து வழிபாடு செய்வது மரபு. இவ்வகைத் தலங்களுக்குத் தனித்தனிப் பதிகங்களும் உண்டு. ஒருதலத்தைப் பாடியருளும் போது பிறதலங்களையும் சேர்த்து அந்தந்தப் பதிகத்திலோ அல்லது தனியே பொதுவகையிலோ அருளாளர்கள் திருவாய்மலர்வர். இப்படிச் சேர்க்கப் பெறும் தலங்கள் தாம் ''வைப்புத்தலம்'' எனக் குறிக்கப் பெறும்.

ஆளுடைய அரசாம் அப்பரடிகள் தேவாரத்தில் புள்ளிருக்குவேளூரான வைத்தீஸ்வரன் கோயில் திருத்தாண்டகத்தில் ''வயிரவன் கோயிலையும்'' வைப்புத்தலமாகக் கொண்டருளினார்களோ எனக்கருத இடமுண்டு.

நாவரசப் பெருந்தகையாம் அப்பர் பெருமான் தில்லையம் பதிமருவும் மூதூராடிய திருவடியைத் துதிக்கும் முகத்தால் கோயில் திருத்தாண்டகத்தில் '(கரும்பமரும்மொழிமடவாள்'' தலைப்பு) கன ''வயிரக்'' குன்றனைய காட்சியானை என்றருளுவர். ''காரொளிய திருமேனி'' எனத்தொடங்கும் திருத்தாண்டகத்தில் சீ''ரொளி'' தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத் திகழ்''ஒளி'' என்றும் சிந்தைதனை மயக்கம் தீர்க்கும் ஏர்''ஒளி'' என்றும் இருநிலனும், விசும்பும்விண்ணும் ஏழுலகும் கடந்து அண்டத்து அப்பால் நின்ற ''பேரொளி'' என்றும் ''ஒளியின்'' ''வளர்ச்சி'' ஒருமை நலனை வியந்து மகிழ்ந்தருளுவர்.

வயிரத்திலும், ஒளியிலும் அவ்வளவு ஈடுபாட்டருமைப் பொலிவின்உண்மையை நந்தமக்கு உணருமாறு அருளுவர். ''ஒளியை''ச் சோதியாக வருணிக்கும் முறையில் திருவையாறகலாதசெம் பொற்சோதி என்று செப்பியருளுவர். அத்திருத்தலத்திரு நேரிசையில் ''வடிவுடைமங்கை'' தன்னை மார்பிலோர் பாகம் வைத்தார்'' என்று அனைத்துலகத்தாயாம் அம்மையை வழுத்தி நமக்கு அமுதை ஊட்டுவர்.

எனவே ''வடிவுடை அம்மையையும்'' ''வயிரத்தையும்'' ''வளரொளியையும்'' சுட்டிக் காட்டுமாப் போல புள்ளிருக்குவேளூர் திருப்பாடல் அமைகிறது.

''என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே'' என்று தில்லையம்பதியின் திருவிருத்தத்தில் பாடியருளும் போது அங்குள்ள சொர்ணகால ''வயிரவரி''ன் திருவுருவையும்நாம் இப்போது நகரத்தார் பெருமக்களின் கோயிலான ''வயிரவ'' மூர்த்தி திருமேனியையும் சேர்த்து நினைப்பதுபோல்-ஒளிக்குச் சிறப்புச் செய்த ''வயிரத்தை'' என்ற சொல்லும்-தொடுவது-போல்-ஒரு ''உணர்வும்'' வருகிறது. சிதம்பரத்தில் கூத்தப் பெருமானுக்குச் செய்யப் பெறும் சிறப்புகள் அத்தனையுடன் சொர்ணகால ''வயிரவநக்''குச் செய்யும் சிறப்பும் அவ்வளவு பெருமையுடையதாகிறது. தில்லையை வழிபடுவோர் இதை நெஞ்சார நினைந்து மகிழ்வர். மூர்த்தியின் (திருவுருவம்) அமைப்பும் ''வயிரவன்'' கோயில் மூர்த்தி அமைப்பும் ஒருமையில் ஒன்றே ஆவது போல் வைத்த கண் மாறாது நெஞ்சை அள்ளுகிறது.

இங்கு வயிரவம் பட்டி என்ற ஊரும், ''வயிரவநம்'' ''வளரொளி'' நாதரும் ''வடிவுடை'' அம்மையும் அப்பர் காலத்தனவா, என்ற ஆய்வுக்கு இங்குஇடமில்லை. சித்தாந்த நூல்களில் மிக நுணுக்கம் சொல்ல வேண்டிய நிலைவரும் போது ''அன்புடனே கண்டு கொள் அப்பா'' என்று சொல்வார்களே தவிர அறிவுடனே கண்டு கொள் அப்பா எனச்

சொல்லவே மாட்டார்கள், அறிவு மூளையி லிருந்து உதிப்பது. இது எல்லையுடையது. ஆனால் அன்பு அனைத்தையும் கடந்தது. எல்லையற்றது. அந்த அன்பு கொண்டு வடிவுடை அம்மையைத் தன்னகத்தில் பிரிவறக் கொண்ட (உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருந்தி என்ற திருவாதவூர் வள்ளல் திருவாக்கிற் கிணங்க) நிலையில் தனக்குவமையில்லாத தான் தோன்றி சிவபரம் பொருளையே அப்பர் பெருமான் திருவாய் மலர்ந்த திருப்பாடலைக் கண்டு அதன் உள்ளீட்டு ஓர்மையை உணர்ந்து உய்வோமாக!

மின்னுருவை விண்ணகத்தில் ஒன்ருய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவில் மூன்றாய்த்தாழ் புனலின் நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
''வளரொளியை'' ''வயிரத்தை'' மாசொன்றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

திருச்சிற்றம்பலம்.

---

பண்டித மணியார் பிறந்திட்ட
பைந்தமிழ் வயிரவன் கோவிலுக்குக்
கண்டு சிறப்பாய்க் குடமுழுக்கை
கலைமணம் கமழச் செய்கின்ற
தொண்டு கண்டு மகிழ்த்திடலாம்
தூரியார் உள்ளம் வாழியவே
பண்டைப் பெருமை நாம்காணப்
பணிவோம் வளரொளி நாதனையே.

தமிழ்மன்றம், கீழச்சிவல்பட்டி

# பேரருள் நெறி

டாக்டர். ம. ரா. போ. குருசாமி
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

பத்தொன்பதாம் நூற்றுண்டு தமிழ் இலக்கிய அரங்கில் குறிப்பிடத் தகுந்த சிறப்புடையது. இத்தலைமுறையினர் பெரு மக்கள் பலர்க்கு நூற்றுண்டு விழாக் கொண்டாடுகின்றனர். அப்பெருமக்கள் ஒவ்வொருவர்க்கும் தனிச் சிறப்புகள் உண்டு.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழுக்கு நாடகம் இன்றைய நிலையில் இல்லை' என்ற குறையைத் தம் சிறப்புப் பணியால் போக்கியவர். செந்தமிழ் நலங் கனிந்த இலக்கியமாக மட்டுமன்றி, அவர் இயற்றியுதவிய 'மனேன்மணியம்' தத்துவச் செறிவும் சமயக் கனிவும் கொண்டதாகப் பொலிகின்றது. நாடக இலக்கியங்களுள்ளும் உருவகமாலை (அல்லிகரி) யாக அமைந்திருப்பதில் அதற்கு ஈடு அதுவே என இலக்கிய அரங்கில் சீரொடு பொலிகின்றது; சித்தாந்த வேதாந்த நெறிகளின் சமரச நன்னிலை புலப்படுத்தும் தத்துவப் பாங்கிலும் சிறப்புடையதாகத் திகழ்கின்றது; அகப் புறப் பற்றுகள் கழன்று பரம்பொருளிடத்து அடைக்கலம் புகுவார்க்கு இறையருள் கைக்கனியாகிறது என்ற பத்திமை நெறியினை விளக்கும் சமய நன்னூலாகவும் மனேன்மணியம் ஒளிர்கின்றது. இலக்கியப் பொலிவுக்கும் தத்துவப் பாங்கிற்கும் சமய நெறிக்கும் ஏற்புடையதாக, நாடகக் காப்பியமாக ஆக்கி வழங்கியதில் பேராசிரியர்சுந்தரனர் தமிழன்னையின் தொண்டர் நாயகராகப் பொலிவு பெறுகின்றார்.

மனேன்மணிய நாடகக்காப்பியத்தின் பாவிகம், 'அமைய அருள் அனைத்தும் ஆட்டும்' என்பதே யாகும். 'நான் செய்கிறேன், 'நான் செய்விக்கிறேன்,' 'என்னால் எதுவும் செய்ய முடியும்', 'என்னால் ஆகாதது எதுவுமில்லை' என்றெல்லாம் பேசித் தற்பெருமை கொண்டாடுவோரை நாம் காணுகிறோம். 'ஐயாவால் ஆகாதது ஒன்றுண்டா','ஐயா நினைத்ததை நினைத்தபடி முடித்துவிடுவார்களே' . என்று முன்னிலையாகவும் படர்க்கையாகவும் புகழ்வதையும் கேட்கிறோம். உலகியல் நிகழ்ச்சிகளிலேயே ஊறிக்கிடப்பவர்களுக்குச் சிலசில செயல்களைப் பார்க்கும்போது இந்தத் தற்பெருமையும் புகழும் உண்மையே என்று எண்ணத் தோன்றுகிறது.

ஆனால், இறையருள் நிகழ்விலே நம்பிக்கை கொண்டவர்கள் இந்த மனப் பான்மையை ஏற்கமாட்டார்கள். 'எதுவும் அவன் செயலே', 'திருவருட் செயல்' என்று உளமார நம்புவது இறைநெறி யாளர்கள் போக்கு.

அவையடக்கமாகப் பின்வரும் பாடலை -அவையஞ்சின நெஞ்சோடு கிளத்தலாகப் பேராசிரியர் சுந்தரனர் பாடுகிறார்.

அமைய அருளனைத்தும்
ஆட்டுமேல் நெஞ்சே
சுமைநீ பொறுப்பதெவன்
சொல்லாய்-நமையும்இந்த
நாடகமே செய்ய
நயந்தால் அதற்கிசைய
ஆடுவம்வா நாணம்
அவம்

திருவருளே எல்லாவற்றையும் பொருந்துற அமையுமாறு ஆட்டுகின்றது; இந்த நிலேயிலே மனமே, நீ என்ன சுமையைச் சுமந்து விடப் போகிருய்! இந்த நாடகத்தை நாம் செய்யவேண்டும் என்பது திருவருளின் விருப்பமாக இருக்குமாஞல், அவ்விருப்பத்தின்படி அரங்கில் இறங்கி ஆடுவோம் வா. அப்படி ஆடாமல், 'நம்மால் முடியுமா' என்று நாணுவது வீண்.

ஆம். தவம் செய்வார் எல்லோரும் திருவருட் குறிப்பின் வழியே தம் கருமம் செய்வார்கள். பிறவாறு 'கர்மம்' செய்பவர்கள் தம் ஆசைவழியே செயல்பட்டு அவம் செய்வார்.

தவம் செய்வார் தம்கருமம்
செய்வார் மற் றல்லார்
அவம் செய்வார் ஆசையுட்
பட்டு

என்பது திருவள்ளுவப் பயன்.

மனேன்மணிய நாடகத்துள் பற்பல கதை மாந்தர்கள் தத்தம் இயல்புக்கு ஏற்பவும் தீட்டுகின்ற திட்டங்களுக்கு ஏற்பவும் செயல்படுகின்ருர்கள் சிலருக்குத் தங்கள் எண்ணத்தின் வழியே எல்லாம் நடப்பதாகத் தெரிகின்றது; மற்றும் சிலருக்கு எப்படியும் தாம் நினேப்பது நடக்கும் என்று நம்பிக்கை இருக்கின்றது; சிலர் செயல்பட்டாலும் நம்பிக்கை இழந்து தளர்கின்ருர்கள்.

குடிலன் நினேக்கிருன்—தன் திட்டங்களின் படியே எல்லாம் நடப்பதாக. புத்தியே சகல சத்தியும் என்பது குடிலன் கொள்கை. 'பிடித்தால் கற்றை, விட்டால் கூளம்' என்று உறுதி கொள்ளும் அளவுக்குச் சீவக மன்னனேத் தன் கைப் பாவையாக்கித் தன்செயல்களிலே வெற்றி பெற்றுக் கொண்டே போகிருன். தொன்மைத் தலேநகராகிய மதுரையைக் கைவிடச் செய்து, தன் சூழ்ச்சிச் செயல்களுக்கு ஏற்ற களமாக அமைகின்ற நெல்லேயைத் தலேநகர் ஆக்குவதிலிருந்து மன்னனே தன் மகள் மனேன்மணியைக் குடிலன் மகன் பலதேவனுக்கு மணம் செய்விக்க வேண்டிக் கொள்ளும் வரை எல்லாம் குடிலனின் வெற்றிகளாகவே தெரிகின்றன.

சீவகன் எடுப்பார் கைப்பிள்ளேயாக இருந்தாலும் நாட்டுக் கடமைக்காக மன்னன் என்ற முறையிலும் வீட்டுக் கடமைக்காகத் தந்தை என்ற முறையிலும் போர்ச் செயலிலும் திருமண முயற்சியிலும் செயல்படுகிருன்.

மனேன்மணி—கனவில்கண்ட எவனே ஒருவன்பால் மனம் பறிகொடுத்தவளாய்த் தனக்கென மனவழி நாட்டம் ஒன்றிருந்தாலும், தனக்கென உறுதியான செயல் வழி புலப்படாமல்—தந்தை சொல் மிக்க மந்திர மில்லே என்று வாயாரச் சொல்லி, மனமழிந்த வகையிலே பலதேவன் மனேவியாவதற்கு இசையும் வழியிலே 'செயல்' படுகிருள்.

புருடோத்தமனும் கனவிலே கன்னி ஒருத்தியைக் கண்டு மனமிழந்தவனே. கனவெனப் புறக்கணிக்கவும் முடியாமல், அது நடக்கும் என்று உறுதி கொள்ளவும் இயலாமல் இரண்டுங் கெட்ட நிலேயில் மனம் உழல்கிருன். இந்தக் கவலேயை மறக்கலாம் என்ற நம்பிக்கையிலே போர் மேற்கொண்டு வருகிருன். பலதேவன் தூதுரையால் தூண்டப்பெற்ற சினத்தின் வழியிலே—கனவில் விளேந்த கலக்கம் மறக்கலாம் என்ற நைப்பாசையும் கொண்டு நெல்லேக்கு வருகிருனே தவிர, அங்கே தன் கனவுக் கன்னியைக் காண முடியும் என்பதோ, அவளே அடையவே இந்தப் பயணம் என்பதோ அவன் எண்ணத்தின் சாயலாகக் கூட அமையவில்லே.

சுந்தரமுனிவர் — எல்லாம் திருவருள் என்று நம்புகிறவர்: அவர் கூடத் தம்மை அறியாமல் — அரச குலத்துக்கும் மன்பதைக்கும் நலமெனக் கருதி — பாசத்தின் வயப்பட்டு — திட்டம் தீட்டிச் செயல்படுகிருர்! ஆம், நல்லான்மாக்களும் உலகியலில் பாசவலேயிற்படுவதற்கு வாய்ப்பு உண்டு. ஆபத்துக்காலத்தில் மன்னனேயும்

மகனேயும் காப்பாற்ற உதவியாக வேண்டும் என்று சுந்தர முனிவர் சுரங்கப் பாதை அமைக்கிருர்.

சுரங்கம் அமைவதை அறியாத குடிலன், கடைசியில் அறிந்து, அந்தச் சுரங்கத்தைத் தன் திட்டத்துக்கு உதவியாகப் பயன்படுத்துகிருன்.

சீவகனுக்குத் துரோகம் நினைத்த குடிலனை அந்த மன்னனிடமே சேர்த்து அவன் நிலை உணர்த்தக் கருதி அதே சுரங்கத்தின் வழியே வருகிருன் புருடோத்தமன்.

குடிலனுடைய திட்டத்துக்குச் சுருங்கை பயன்படுவதையும் — புருடோத்தமன் வேறு நோக்கம் கருதித் தாம் அமைத்த சுருங்கை வழியில் வருவதையும் அறியாமல் மனோன்மணி — பலதேவன் திருமணத்தை நடத்தி முடிப்பதிலே முனைந்திருக்கிருர் சுந்தரமுனிவர்.

அவருக்குத் தெரியும் மனோன்மணிக்கு ஏற்ற கணவன் அல்லன் பலதேவன் என்பது. அங்குள்ள எவர்க்குமே அந்த மணத்திலே மனநிறைவு இல்லை. என்ருலும், இன்னும் சில கணங்களிலே மனோன்மணி பலதேவனின் மனைவிதான் ! சீவகன் முதல் அங்குள்ளோர் அனைவரும் உட்பட அங்கு இல்லாவிட்டாலும், குடிலன் வரை எல்லோரும் இட்ட திட்டத்தின்படி, ஏற்றுக் கொண்டுவிட்டபடி மனோன்மணி பலதேவனின் மனைவிதான்.

இந்த இடத்தில் பக்தியுலகின் ஒரு நிலையினைக் கருதிப் பார்பது நல்லது.

அடியவர்கள் வாழ்விலே அல்லல் சூழ்கிறது. எல்லோருமே வருந்துகிருர்கள் என்ருலும், துன்பம் அடர்கிறது. 'இந்த அடியவருக்கா இந்த வேதனை ! கடவுளுக்குக் கண் இல்லையா' என்று பதறுகிருர்கள். ''ஐயனே ! உன் அடிமையாகிய எனக்கா இந்தத் துன்பம்'' என்று அடியவரும் வேதனைப்படுகிருர்.

உலகவர் அறிய — அடியவர் உள்ளமும் அறிய — அடியவர் உண்மையான பக்தர்தான். அவருக்குத் தொல்லை வரலாமா?

அடியவர் துன்பத்தில் உழலும்படி விட்டுவிட்டு, ஆண்டவன் என்ன செய்கிருன்? — இப்படியெல்லாம் பக்தியுலகிலே சில வேளைகளில் சிந்தனை அலைகள் எழுவதுண்டு.

'மனோன்மணீய'த்துக்கு வருவோம்.

மனோன்மணி தன் கனவுக் காதலனையே நினைந்து, தன்னை இழந்து நிற்கிருள்.

புருடோத்தமன் தன் கனவுக் காதலியைப் போர் முனையிலும் மறக்க முடியாமலே வருகிருன்.

சீவகனோ — குழப்பச் சூழலில் திருமணத்தை உறுதி செய்துவிட்டாலும், சாதாரண நிலையில் இத்திருமணத்தை நடத்தமாட்டான்.

வாணி தன் காதல் கைகூடாவிடினும், மனோன்மணி — பலதேவன் திருமணத்தை மனமார என்றுமே ஏற்கமாட்டாள்.

சுந்தரமுனிவர் நிலை தனி. இது பொருந்தா மணம் எனத் தெரிகிறது. மனோன்மணியோ வேறு நல்லார் எவருமோ விரும்பவில்லை என்பதும் தெரிகிறது. ஆனல், நிகழ்ச்சி நிலையில் அது தானே நடக்கப் போகிறது ! 'எல்லாம் திருவருட் செயல்' என்று அமைந்து கிடப்பது அவர் நிலை ....

அப்போது, சுந்தரமுனிவர் —

'மற்றவர் கவலை மாற்றிட ஒரு பா
சற்றிசைத் திடுவளோ வாணி'

என்கிருர் — வாணி பாடுகிருள்

பாடல்கள் மூன்று. முதற்பாடலில் கசேந்திரன் ஆதிமூலத்தை அழைத்த கதை; இரண்டாம் பாடலில் பாஞ்சாலி கண்ணன் உதவியைநாடியகதை; மூன்ரும் பாடலில் மார்க்கண்டன் இலிங்கத்தைப் பற்றி உய்ந்த கதை.

வெறும் பாடலாகப்பார்க்காமல் இந்த மூன்று கதைகளிலும் வரும் அடியவர்கள் எழுப்பிய ஆன்மக் குரலை — அடைக்கல உணர்வை மனத்திலே வாங்கிப் பாடல்களைப் பார்க்க வேண்டும்.

நீர்நிலையில் முதலையின்வாய்
நிலைகுலைந்த ஒரு கரிமுன்
ஓர்முறைஉன் பெயர்விளிக்க
உதவினைவந்து எனஉரைப்பர்
ஆர்துயர அளக்கர்விழும்
அறிவிலியான் அழைப்பதற்கு உன்
தெரியேன் ஆயிடினும்
பிறகிடல்நின் பெருந்தகையோ

பார்அரசர் துகில்உரியப்
பரிதவிக்கும் ஒருதெரிவை
சீர்துவரை நகர்கருதிச்
சிதைவுஒழிந்தாள் எனஉரைப்பர்
ஆர்துணையும் அறஇருக்கும்
அறிவலியான் அழைப்பதற்கு உன்
ஊர்தெரியேன் ஆயிடினும்
உறுதிதரல் உனக்குரித்தே

மறலிவர மனம்பதறும்
மார்க்கண்டன் உனதுலிங்கக்
குறிதழுவி அழிவுஇல்வரம்
கொண்டான்முன் எனஉரைப்பர்
வெறுகழுமிப் பொறி அழியும்
வெம்பாவி விரவுதற்குஉன்
நெறிஅறியேன் ஆயிடினும்
நேர்நிற்றல் நினதுஅருளே

''கசேந்திரனுக்கு எப்படியோ உன் பெயர் தெரிந்தது; அழைத்தது. ஐயனே, இந்தப் பாவிக்கு உன் பேர் தெரியவில்லையே! என்றாலும், அடைக்கலம் அடைந்த என்னைக் கைவிடலாமா! ஐயனே, நீ பின் வாங்கலாமா?

''மற்றவர்கள் பிழை செய்தால் மன்னவர்கள் கேட்பார்கள். ஆனால், பாராளும் மன்னர்களே பாஞ்சாலியின் துகிலுரிந்தனர். 'துவாரகாபுரியானே' என்று அரற்றி, ஐயனே, அவள் உன் அருள் பெற்றாள். ஆனால், இந்தப்பாவிக்கு நீ இருக்கும் ஊர் தெரியவில்லையே! என்றாலும் எனக்கு உறுதி தரவேண்டிய கடமை உனக்கில்லையா!

''உயிர் கொள்ளக் கூற்றுவனே வந்த போது பதறிய மார்க்கண்டன் உன் இலிங்கத்தைப் பற்றும் நெறியறிந்து பற்றி மரணமிலாப் பெருவாழ்வு பெற்றான். பந்த பாச வெறிகளிலே அறிவு கலங்கிய எனக்கு ஐயனே, உன்னை அடையும் நெறி தெரியவில்லையே! என்றாலும், ஆண்டவா உன்னைத் தவிர வேறு கதியற்ற என் முன் நீவந்து அருள்வது உன் இயல்பல்லவா!''

— இப்படிப் பாடுகிறாள் வாணி. ஆம், கதை மாந்தர் மனக்கவலை மாறட்டும் என்று தான் சுந்தரமுனிவர் பாடச் சொன்னார். கதைத் தலைவி துயர் மாறாதா என்று வாணியின் ஆன்ம குரல் கொடுத்தது.

ஐயனையே கதியெனக் கொண்டு திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை என நம்பி — தன் செயலால் இனி ஆவது ஒன்றுமில்லை, இனி இறைவன் செயலே என உணர்ந்து — ஐயனே, ஆண்டவனே இறைவா அடைக்கலம் அடைக்கலம் அடைக்கலம் எனக் குரல் கொடுத்தாள்.

கதை வழியில் மனோன்மணிக்குப் புருடோத்தமனின் பெயர் தெரியாது, ஊர் தெரியாது. அவனைச் சென்றடையும் நெறியும் தெரியாது. ஆன்ம போதம் கழலாத நெறியிலே அடைக்கலம் புகுந்தாலன்றி இறைவனது பேர், ஊர், நெறி எதுவும் ஆன்மாக்களுக்குத் தெரியாது.

பேர் பல பாடித் தெள்ளேணம் கொட்டலாம்; தலம் பல சென்று அலையலாம்; நெறி பல என்று செயல்படலாம். ஆனால், இத்தனையிலும் இல்லை ஆன்ம ஈடேற்றம். 'அமைய அருள் அனைத்தும் ஆட்டு மேல் நெஞ்சே சுமை நீ பொறுப்ப தெவன்' என்ற உணர்வோடு தன்னை இழந்த நிலையில் 'அடைக்கலம்' எனத் தன் செயலற்றுக் கிடப்போரே இறைநிலை காண்கிறார்.

கசேந்திரன், பாஞ்சாலி, மார்க் கண்டன் மூவரும் தம் முயற்சி கைவிட்டு, 'அடைக்கலம்' என்ற அக் கணத்திலேயே திருவருள் தன் பொறுப்பாக ஏற்றது.

இறையருளிடத்து நம்பிக்கை கொண்டவர்களுக்குப் பிற முயற்சிகள் தேவை இல்லை. பிற முயற்சிகள் இருக்கும் வரை இறையருள் பற்றிய நம்பிக்கையில் உறுதி ஏற்படவில்லை என்பதே அடைக் கலத்தின் தத்துவம்.

மேற்குறித்த பாடல்களை ஆன்மாவின் குரலாக — அடைக்கல ஓலமாக வாணி பாடிய போது

எதுவோ இதனினும் ஏற்புடைப்
பிரார்த்தனை?
மந்திரம் தந்திரம் வழங்கும் நற்செபம்
யாவையும் இவையே

என்கிறார் சுந்தரமுனிவர். கதை நிகழ்ச்சி களின் சூழலுக்கும் ஆன்ம யாத்திரைத் தத்துவத்துக்கும் சுந்தரமுனிவரின் கூற்று பொருந்தும்.

அதன்பின் மனோன்மணியைப் பார்த்து முனிவர்,

ஒருதனி முதல்வன் உணர்வன் உன்
உளம்
உன்அன்பு உண்மையேல் இன்னமும்
காப்பன்

என்று கூறுகிறார். அடுத்த கணம் பல தேவனின் மனைவியாக ஆகப் போகும் மனோன்மணியைப் பார்த்துத்தான் இப்படி கூறுகிறார். 'இன்னமும் காப்பன்'!

இன்னமும் இடம் இருக்கிறதா என்று நாம் ஐயுறுகிறோம். தகாதவனுக்கு மாலை போட்டு மனைவியாகப் போகும் கணம் இதோ வந்துவிட்டது. அப்போது சொல் கிறார், 'இன்னமும் காப்பன்' உன் அன்பு உண்மையான அன்பாக இருக்குமானால் இன்னமும் காப்பன்!

அடியவர்கள் அன்பின் திறத்திலே வேண்டுமானால் ஐயம் கொள்வார்களே தவிர, ஆண்டவன் அருளிலே அடியார்கள் ஐயம் கொள்ளமாட்டார்கள்.

அடைக்கலக் குரல் ஆண்டவனைக் கொணர்ந்து நிறுத்தியே விட்டது.

கசேந்திரனுக்கு ஆதிமூலம்,
பாஞ்சலிக்குக் கண்ணன்,
மார்க்கண்டனுக்கு மாதேவன்,
மனோன்மணிக்குப் புருடோத்தமன்!

குடிலன் திட்டம் நடக்கவில்லை; புருடோத்தமன் திட்டம் நடக்கவில்லை; சீவகன் திட்டம், ஏன், சுந்தரமுனிவர் திட்டம் கூட — நடக்கவில்லை. ஆனால், நடந்து முடிந்தே எல்லோருக்கும் பொருத் தமான திட்டம்.

அமைய அருள் அனைத்தும் ஆட்டும், திருவருளின் செயற்பாடு இது; அடைக் கலத்தின் தத்துவம் இது.



# ஒரு பாடல் — ஒரு சிந்தனை

பேராசிரியர் பா. நமசிவாயம், எம். ஏ.,
ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி,
திருப்புத்தூர்.

திருவிளையாடற் புராணத்தில் ஒரு பாடல். அன்னையின் புகழினை அறிவிக்கும் திருப்பாட்டு. அப்பாட்டு என்னுள்ளே புகுந்து கொண்டது. நினைக்கும் போதெல்லாம் ஆனந்தத் தேன் வந்து என் சிந்தையில் பாய்ந்தது. நான் அடைந்த இனிய உணர்வினை நாலுபேருக்குச் சொல்ல வேண்டும் என்ற ஆசை. ''ஆசை பற்றி அறையலுற்றேன்''.

என்னை எங்கோ அழைத்துச் சென்ற பாடலைத் தருகிறேன். பாடலைப் பலமுறை படித்து விட்டுக் கட்டுரைக்குள் நுழையுமாறு வேண்டுகிறேன். வைணவ இலக்கிய உலகத்திலே உரையாசிரியர்கள் செய்துள்ள மகத்தான சாதனை என்னுள்ளே வேலை செய்தது. அவர்களெங்கே? நானெங்கே? எனினும் ஆசை யாரை விட்டது. பரஞ்சோதியாரின் பாடல் இது தான்.

சுரும்புமுரல் கடிமலர்ப் பூங்குழல் போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலை போற்றி கவுணியர்க்குப்
பால் சுரந்த கலசம் போற்றி
இரும்புமனம் குழைத் தென்னை
எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்பு மிள நகை போற்றி ஆரணநூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி !

(கடிமலர்) காவல் எனக் கொண்டால் — தாயே! உலகினைக் காக்கும் உன் மலருக்குக்காவலா? உள்ளம் உண்மையறியாது புரள்கிறது. காவல் செய்தால் அது என்ன? கடிமலர் — மணமுள்ள மலர் என்று பொருள் கொண்டால் மானுடப் பெண்களுக்குப் பொருந்தும். உன் கூந்தல் மணம் பற்றிய போட்டியிலே நக்கீரன் பட்டபாடுபோதாதா? அதன்பின்னும் மணமுள்ள உன் தலைமயிர் என்று கூற முடியுமா? சுரும்பாகிய வண்டுகளின் உயிரைக் காக்கும் தேனையளிப்பதால் உன் மலர் காவல் செய்யும் கடிமலரே தான்! பூட்டு அவிழாத மலர், வண்டு ஊதும் போது மலருமாம். அதனால்தான் வண்டு முரல்வது கேட்குமாம். உன் மலரோ அருளால் உயிர்க்காவல் தரும் போது முரல்வதேன்? பசிதீர்க்கும் மருந்து கண்ட போது போற்றும் வறியன் போல உன் மலர்த் தேன் கண்டதுமே உனக்குப் போற்றிகள் பாடித் துதிக்கின்றன போலும்! மானிடப் பெண்டிர்க்கு வாடும் பூவே உண்டு உன் தலை மலர் வாடுமோ? அவ்வாறு வாடாத வடிவுதந்து காத்தலால் அல்லவா கடிமலர் என்றோம்.

சுரும்பு (வண்டு)க்குத்தேன் தந்து நுகரச் செய்யும் மானிடமகளோ நீயில்லை. ஆயினும் உயிர்கள் பக்குவமுற்று உன அருளாகிய தேன் வழங்கு மலரில் மூழ்கும் என்பதையல்லவா இதனுல் காட்டி விட்டாய் தும்பி என்ற உயர் சாதியில்லாத இடைச் சாதியாகிய சுரும்பு உன் தலைமலரிப் மொய்ககுமோ? மொய்க்காது தான்; தும்பி என்றால் உயர்ந்த சாதியைக் குறிக்கும். பிறழ்ந்தாலும் வலிய ஆட்கொள்ளும் அப்பரடிகளைப் போலும் உயிர்

களையன்றோ தும்பி என்ற சொல் குறிக்கும். உயிர்களுக்கு அருள் வழங்கும் அடையாள மாக வண்டுக்குத் தேனூட்டும் உன் செயலை உயர்ந்த சாதி வண்டால் கூறினுல் தவப்பயன் பெற்ற ஆன்மாக்களுக்கே நீ அருளுவாய் என்றாகி விடாதா? ஏழைமை யால் இடைப்பட்டுப் பிழை செய்தாரையும் ஊட்டும் தாயான உன்னைச் சுரும்புக்கு உயிர் வழங்குவாள் என்று அழைக்காமல் வேறெப்படி வழங்க முடியும்? சுரும்பு என்ற சொற்குறிப்பு நமக்குச் சுருதியாகிய வேதத்தை நினைப்பூட்டுகிறது. நான்மறை ஓதுங்கால் முன்னும் பின்னும் ஓம் எனும் பிரணவம் காவலாய் அமையும் எனவே சுரும்பாகிய வேதம் முரலும் போது (கு) காவல் தரும் மலர் என்று பொருளாயிற்று. வேதத்துக்குக் காவல் பிரணவம். ஒரு மலர் என்பது கொன்றைப்பூ. உலகைக் காக்கும் பிரணவத்தை மலராகச் சூடிக் கொள்ள விரும்பி ஓம் என்று எழுதியது போல மலரும் கொன்றைப் பூவையும் இதற்காகத்தான் படைத்தாய் போலும்! மலரை வேறெங்கும் சூடாது தலையில் அணிந்தாய். நீயே பிரணவத்தை முடியில் அணிந்தால் நாங்கள் அதனைக் கற்று உணராது போக முடியுமா? நாதமின்றி உலகமில்லை. ஓம் என்ற உயிர்ப்பின்றி நாதமுமில்லை. உலகுக்குக் காரணமான பிரணவம் அருள்வடிவம். உலகத்திற்கு அருள்தரும் சக்தியாகிய நீ அதனைத் தலை மேற்கொண்டாய். அடடா! அருள் புரிவ தை உன் தலைக்கடன் என்றல்லவோ காட்டி விட்டாய். உலகமெலாம் தழுவிய நாதம் உனக்கொரு தலைப்பூ தான் என்றால் அம்மையே உன் பெரிய வடிவந்தான் எவ்வளவு பெரியதாயிருக்கிறது? பிரபஞ் சமே உனக்கொரு தலைப்பூ என்றால் உன்னை யார் அளவிட்டுப் பேச முடியும்?

(மலர்ப்பூங்குழல்) மானிடர்க்கு மலர் அணிவதால் மணமும் அழகும் பொலியும் குழல் உண்டாகும். உன் குழலோ அழகும் மணமும் இயற்கையாகக் கொண்டது. அதனை மலர் என்றால் ஒரு சொல்லுள் அடங்காத நீர்மை யுணர்ந்து பூவென்று மீண்டும் புகழ்வதால் கூறி அமைந்தோம். அழகு பற்றி மானிடப் பெண்டிர் கூந்தலைக் குழல் என்பர். உனக்கும் அவ்வாறு கூறுவதா? குழல் என்றால் உருண்டு திரண்டது. பிரபஞ்சத்தையே வளைத்த நாதத்தைப் பூவாக உருட்டிக் கொண்ட உன் கூந்தலைக் குழல் என்று காரணம் காட்டாது நிற்க இயலுமோ? உனக்கு ஞானப் பூங்கோதை'என்று பெயர். உலகந் தழுவிய பிரணவத்தை உருட்டிப் பூவாகக் கொண்ட ஞானங்கருதி அப்பெயர்வராமல் போகுமா?

(போற்றி) சிறியோர்க்குப் பெரியோர் ஆசி வழங்குங்கால் இன்னின்னவற்றைப் போற்றிக் கொள் என்பர். புகழுடை யாரைப் போற்றுவோம். உன் அருளால் மகிழும் எளியோர் உன்னைப் போற்றும் தகுதியுடையரா? ஞானத்தைப் பூவாக அணிந்தாய் அருள் புரிவதை உன் தலைக் கடன் என்று தலைப்பூவால் காட்டினாய். நாங்கள் அறிந்தோம். எம் பின் வருவாரும் அறிய நீ காட்சி தரல் வேண்டாமா? அவர் வருந்தொறும் உன் தோற்றம் இவ்வாறே நிலை நிற்க வேண்டாமா? ஆகவே அவர் கள் வருந்துணையும் 'இதனைப் போற்றிக் கொள் என்று கூறாமல் எம் ஆசை தணியு மோ? இந்த உண்மையையும் உன் குழல் மலரில் முரன்று போற்றும் வண்டுகள் அல்லவோ எமக்குக் கற்றுத் தந்தன. 'வண்டுச் செய்கை மனிதர்க்கு ஒத்து வருமா'- என்று கேட்பதா? யாதுமறியாத நாணனின் சொல்லைக் கேட்டல்லவா கண்ணப்பர் சிவனையறிந்தார்.

(உத்தரியத் தொடித் தோள் போற்றி) உலகப் பிறவிகள் போல் நீயணிந்த உத்தரியமாகிய உடையையும் தோள் வளையாகிய தொடியையும் அணிந்த உன் தோள்களைப் போற்றுவோம் உலக வாழ்வை உயிர்கள் அறிந்து போற்றுவதற் காக நீயும் இறைவனுடன் வாழ்ந்து காட் டினாய். இதனாலன்றோ நீ உடையும் தொடியும் அணிந்தருளினாய். தோளையும் தொடியையும் சேர்த்துக் கூறுவது கணவனை நீ பிரியாதிருக்கின்றாய் என் பதைக் காட்டியது. நாயகியொருத்தி நாயகனிடம் அன்பு காட்டுவது போல

நாங்களும் அன்புகாட்ட வேண்டுமென்றும் அவனுக்கு நீ உகந்தன காட்டிப் பிரியாது நிற்பது போல் நாங்களும் நிற்க வழி காட்டிய அருளன்றோ உடையும் தொடியும் பூண்ட கோலம். அணிகளா உனக்கு அழகைத் தரப் போகின்றன? அதனால் பாராட்டினோம்.

(தோள்போற்றி) இறைவனின் இடப் பாகத்தில் நீயிருக்கின்றாய். அவன் இடத் தோள் உன் இடத் தோளையல்லவோ நினைப்பிக்கும். ஒரு கையில் தீயை வைத்தும் மறுகையில் எடுத்த பொற் பாதத்தைச் சுட்டிக் காட்டுவதையும் அவன் செய்கிறான். எல்லாவுயிரும் மல மாசு நீக்கியதும் உலகையழிக்கும் தீயும், அவ்வாறு மாசு நீக்கி அருள் பெறுவதற் கான ஆதாரம் என்று திருவடியை சுட்டிக் காட்டுகிறது. இரண்டு கையும் அருள் வழங்கின. உலக உற்பத்திக்கு வலக்கைத் துடியும், வந்தாரை அருளும் அபயத்துக்கு வலப்பக்கத் தோளும் அடையாளம். தோன்றிய போதே மாயம் நிரம்பிய உலகைக்காட்டும் வலக்கையினும் மாசு போக்கும் இடப்பக்கம் உயர்ந்ததன்றோ? நீயிருக்கும் பாகமாகையால் இடப்பக்கம் அருள் விஞ்சி நின்றது. இருள் வந்த போது மாணிக்கத்தின் ஒளி மாணிக்கத் துள்ளேயே ஒடுங்கியதன்றி மாணிக்கத் தை விட்டுப் பிரிந்து போய் விடுமோ? அவ்வாறே அவன் தானாகத் தோற்றி ஆடும் போதும் இடப்பக்கத்தில் நீ ஒடுங்கி யதாக வன்றி நீங்கியதாக நினைக்க முடியுமா? உயர்வுக்குக் காரணமான உன் தோளைப் போற்றாத மனம் என்ன மனமே? சிங்கத்தின் தோலையன்றோ மார்புக்கச்சாக அணிந்தாய். எம் தீமையைத் தோலுரித்து அப்பால் தூக்கி வீசினாலும் மீண்டும் முளைத்து விடுமோ என்று உன் கண்பார் வையிலேயே அணிந்து எம்மைப் பாது காத்தாய்! வாழ்க! அன்னையே நீ வாழ்க!

(கரும்புருவச் சிலை போற்றி) புருவத் தால் கண்ணுக்கு அழகு பெற்ற எங்களைப் போலல்லாது உன் கண்ணைச் சேர்ந்த காரணத்தாலே அந்தப் புருவம் அழகு பெற்றது. திருஞானசம்பந்தரின் தேவா ரத்தை யாழில் மீட்டிய திருநீலகண்ட யாழ்ப்பாணரின் யாழும் பெருமை பெற்றது. உன் கண்ணைச் சேர்ந்து புருவம் அழகு எய்தியது. ஒன்றுக்கும் பற்றாத நாங்களும் உன் கண்பார்வை பட்டால் உய்வோம்.

மானிடப் பெண்டிர் போல உன் புருவத்துக்கும் மை தீட்டிக் கொண்டா யோ? நம்மினும் வேறுபட்டார் நாட்டிற்கு விருந்தாய்ப் போனால் அவர்கள் போலப் பழக்க வழக்கத்தில் ஈடுபடும் உலகவழக் கம்பற்றி எம்மையாள வந்த நீயும் புருவத் துக்கு மைதீட்டும் எமது பழக்கம் மேற் கொண்டாய் போலும்! எம்மிடம் எவ்வளவு எளிமையாக இறங்கி வந்துள்ளாய்.

(கவுணியர்க்குப் பால் சுரந்த கலசம் போற்றி) தமிழில் பாடுவதும் வேதத்தை நிகர்க்கும் என்று எம்மில் யாவரும் புரிவ துண்டோ? ஆகவே மறையோதும் குலத் துப் பிறந்தாரைக் கொண்டே தமிழைப் பாடிக் காட்டிடச் செய்தாய். குளக்கரை யில் நின்றழுத பிள்ளைக்குச் சிவபெருமான் பாலூட்டுமாறு சொன்ன பிறகே நீ பாலூட்டியதாகக் கேள்விப்பட்டோம். பிள்ளையழுத குரலுக்குத் தாய் முந்தி வரா மல் தந்தை ஆணையிடுமளவும் தாமதித்தா யோ என்று வருந்தினோம். 'சுரந்த' என்ற சொல்லைக் கொண்டு ஆறுதல் பெற்றோம். ஆணையால் ஊறும் பாலைச் சுரந்தல் என்று கூற முடியுமா? ''அருள் சுரந்து ஊட்டும் ஆ'' என்று மணிமேகலையும் பேசுமே! தன் கணவன் சமணனாக இருந்த வருத்தத்தால் நலிந்து நின்றாலும் மானிடப் பெண்ணாகிய மங்கையர்க்கரசிக்கு ஞானசம்பந்தரைப் பார்த்துத் தாயாகிப்பால் சுரக்கவில்லையா? அவ்வம்மையினும் தாழ நீ இருக்க முடியு மா? பிள்ளையழுத போதே தாயியல்பால் உனக்குப் பால் சுரந்து விட்ட போதும் கணவன் கட்டளைக்குக் காத்திருந்தாய் போலும்! இதுபற்றியன்றோ 'தோடுடைய செவியன்'' என்று ஞானசம்பந்தரும் உன்னை முதலில் அழைத்தார்.

அபரஞானம் எனப்படும் உலகியல் அறிவும், பரஞானம் எனப்படும் மெய்ப் பொருளறிவும் உனக்கு மார்பகங்களாம். ஏதேனும் ஒன்று மட்டும் கொடுத்தால் சிறு குழந்தை ஞானக்கவி ஆக முடியுமா? அந்த ஞானப்பாலுள்ள திருமுலையைக் கலசம் என்று குறிக்கலாமோ? தாயின் முலையைப் பிள்ளைகள் வருணிக்கலாமா? கலசம் பருத்த தன்மையைக் குறிக்கும். இரு ஞானத் திரட்சியைப் பருத்த தன்மையால் அழைக் காமல் வேறெப்படி அழைப்பது? உலகம் வியக்கச் சிறு பிள்ளையை அருட்கவியாக்கி விட்டன உன் தனங்கள். வாழ்வுக்குப் புறம்பான கொள்கைகளை நீக்கியன அக் கலசங்கள் இனியும் எதிர் காலத்தில் வரும் தீய சக்திகளையும் அழித்துக் காட்ட அவை வாழ வேண்டாவோ? அதனை எண்ணியே நாங்கள் வாழ்த்தினோம்.

(இரும்பு மனம் குழைத்து) எந்தச் சக்தியாலும் இளகச் செய்ய முடியாத கட்டிப்பட்ட இரும்பான என் நெஞ்சையும் குழையச் செய்து விட்டாய் காய்ச்சி அடித் தாலும் இளகாதஇரும்பு மனத்தைக்காய்ச் சாமல் அடிக்காமல், காந்தம் தன் வசப் படுத்தி விடுவது போல உன் கடைக்கண் பார்வையால் குழைய வைத்துவசப்படுத்தி விட்டாய். (என்னை) ஆணவத்தால் என்னை யே வியந்து கிடந்ததையும் மாற்றி விட்டாய் (ஆண்ட) யானாக மருத்துவத் திற்கு உன்னைத் தேடி வாராத போதும் நீயாக வலிய வந்தன்றே ஆண்டாய்! (எடுத்து) எதனையும் எளிதாகச் செய்யும் நீ எம்மை எடுத்தது அரிய முயற்சி தான் என்று யாம் நினையுமாறன்றே எம் நெஞ் சின் வலிமை மிகுதியாக விருந்தது. (கயற் கண்) அடிக்கடி நாங்கள் பார்த்துப் பழகிய கயல்மீனின் வடிவத்தைக் கண்ணாகக் கொண்டாய். கயலைக் கண்டு அஞ்சும் வழக்கம் இன்மையாலே உன்னை நாங்கள் நெருங்கி வந்து விட்டோம். (அம்கயல் கண்) அருகில் வந்ததும் அதுவரைபாராத அழகெல்லாம் கொண்டதாக உன் கயல் விழியிருந்தது. அருளே அழகாகி நின்ற தாலே எம் கல்நெஞ்சும் குழையுமாறு செய்து விட்டாய். எம்மை உன்வயம் ஆக்கும் நோக்கத்தால் எளிய மீன் போல உன் கண்கள் தோன்றின. அருளால் எம்மை மயக்குவதற்காக நீ மீன் கண்ணைக் கொண்டதன்றி உன் அழகு மீனளவில் நின்று அமையுமோ? எம்மைக் குழைய வைத்த உன்னை எம்பிராட்டி என்று அழைக்கிறோம்.

(அரும்பு மினநகை போற்றி) உதவி யைப் பெற்றவர் சிரிக்க வேண்டும் உதவியைச் செய்துவிட்டு, அதுவும் இரும்பு மனம்' எனினும் சலியாமல், அருளால் குழைய வைத்த உதவிக்குப் பிறகு நீ சிரிக்கலாமோ? இருப்பு நோக மிகத் துயர் தந்தபோதும் மகனை ஈன்ற போது துன்பம் மறந்து தாய் சிரிப்பாள். உலகைப் பார்த்து முதலில் சிரிக்காமல் குழந்தை அழவும், தாய் சிரிப்பதும் போல நீ சிரித்து விட்டாய். (இளநகை) உலகத் தோற்றம் தொடங்கி ஒவ்வோர் உயிரையும் கடைத்தேற்றி உதவிய நீ சிரிப்பதெனில் இச்சிரிப்பு அப்போது முதல் இப்போது காறும் இளமையாய் இருக்கும் காரணம் என்ன? (அரும்பும்) முதுமை பொருத உன் சிரிப்பு இப்போது முளைத்தது போலவன்றே அரும்பி நிற்கிறது! இச் சிரிப்பு என்றும் வாழ்க!

(ஆரணநூபுரம் சிலம்பும் அடிகள் போற்றி) நீ நடந்தாலும், நடித்தாலும் காற்சிலம்பில் வேதத்தின் கீதம் கேட்கும். தலையிற் சூடிய பூவாலே ஞானப்பூங் கோதையானாய்; தோள்களாலே ஞானத் தைச் சுட்டி மலமாசு போக்கினாய். புருவத் தாலே சிவனுடன் கூடிடும் ஞானவழி நின்றாய் மார்பினால் ஞானத்தைப் பாலாய் ஏற்று ஊட்டினாய். கண்களால் ஞானம் தந்து எம்மை எடுத்து ஆண்டாய். காற் சிலம்பின் ஒலியிலும் ஞானமே பேசு கின்றாய். நீ ஞானத்தின் மொத்த வடிவ மோ? ஞான வடிவான உனக்கு வேதங் கள் காற்சிலம்பாவதன்றி வேறு பெரிய பொருளாகுமோ? சிலம்பொலியால் ஒருவர் நடப்பது தான் அறிய முடியும். அவரது பிற குணம் முதலியவற்றையும் அறிய முடியுமோ? அதுபோல வேதங்களின் ஒலி உன் திருவடிகளை நினைவூட்ட முடியுமே தவிர நீயாகவே வேதத்தை எண்ண முடியுமா? ''வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே'' என்ற மணிவாசகர் கூற்றுப் போல நீ வேதங்கள் காணா அளவு அகன்று நுண்ணிதானாய் எனப் புரிந்தது. இதனைக் காட்டவே வேதத்தை அணிந்தாயோ? வேதமே யாவும் என எண்ணிச் சடங்குக் குழிகளில் உழன்ற எம்மை நீ எடுத்து வாழ வைத்து விட்டாய். அதனையும் போற்றுகிறோம். பெருஞ் சோதியாக, அண்டக் குவியல் அனைத்தும் ஞானமெனத் தழுவிய பெருஞ் சக்தியாக இருக்கும் பொருள் நம்மை நாமே வியக்குமாறு ஆட்கொள்ளும் திருவடியின் அருட்டிறன் எண்ணி எண்ணி ஏற்றிப் போற்றற்குரியது. அம்மையின் திருவடிகள் வாழ்க! நலம் பெருகுக!

# வேதஒலியும் விழவொலியும்

சிவாகமவித்வான் & சிரோமணி
**K. S. வைத்யநாத சிவாசாரியார்**
தலைமை ஆசிரியர்,
வேத சிவாகம பாடசாலை, திருப்புகலூர் P.O.

மந்திர நான் மறையாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செழுத்துமே !!

பாரத நாடு விண்ணளாவிய கோபுரங்களோடு கூடிய திருக்கோயில் பலவற்றை பெற்றுள்ளது. அருள் பெற்ற நாயன்மார்களால் நில முழுவதும் நடந்து சென்று மனம் உருகி அருள்வாக்கினுல் எப்போதும் தெய்வமணம் ததும்பும் திருப்பதிகங்களை பாடி அருளியதும், இப்புண்ணிய பூமியேயாகும், பக்தி வெள்ளம் தமிழ் நாடெங்கும் பரவிடக் காரணமாயிருந்த அருளாளர்களை ஈன்ற பாண்டிநாடும் இதில் ஒன்ருகும். பாண்டிய நாட்டில் நூற்றுக்கணக்கான திருக்கோயில்கள் புகழ் மிக்க கலைச்சிற்பங்களோடு இன்றும் பிரகாசிக்கின்றன,

கடவுள் அருள்தான் மேன்மையை அடைய இன்றியமையாத சாதனமாகும் உண்மையை உணர்ந்து பண்டைக் காலத்தில் தேவர்களாலும், முனிவர்களாலும் பூஜிக்கப் பெற்ற இறைவனின் திருவுருவங்களை அனுசரித்து சிவாகம முறைப்படி பெரும்பொருள் செலவிட்டுப் பழைய கோவில்களைப் பெரிதாக்கியும், சீர் பெறப் புதுப்பித்தும், சுற்றுக்கோயில் கோபுரம் முதலிய பல உறுப்புகளுடன் புதிய ஆலயங்களை உண்டாக்கியும் விதிமுறையால் பிரதிஷ்டை செய்வித்தும் நித்திய பூஜை புரிவித்தும் திருவிழாக்களை தவருது நடத்துவித்தும் வந்தார்கள்,

நித்திய, நைமித்திக பூஜைகளில் மந்திரங்கள், இருக்கு, யஜுர், ஸாம, அதர்வண வேதங்கள் திருமுறைகள் ஒலி வழுவா வண்ணம் ஒலிக்கச் செய்ய வேண்டும் என்பது மரபு.

மந்திரங்கள் உச்சரிக்கும் போது கிரியா பாவனைகள் அமைந்திருப்பது போல் வேத பாராயணங்கள் சொல்லும் போது ஸ்வரம் முதலியவைகள் நன்கு உச்சரிக்கப்பட வேண்டும். ஒலி தான் முக்கியம்.

சதாசிவ மூர்த்தியின் மேல் முகமான ஈசானத்திலிருந்து சித்தாந்தமென்ற காமிகம் முதலிய சிவாகமங்களும் மிருகேந்திரம் முதலிய உபாகமங்களும் தோன்றின. கிழக்குமுகமான தத்புருஷத்தினின்றுஇருக்குவேதமும், தெற்கு முகமான அகோரத்தினின்று யஜுர்வேதமும் மேற்குமுகமான ஸத்யோஜாதத்தினின்று அதர்வண வேதமும் வடக்கு முகமான வாமதேவத்தினிடமிருந்து சாம வேதமும் தோன்றலாயின.

இச்சிவாகம வேதங்கள், ஸ்ரீ மந்திர வடிவமான ஸ்ரீ சதாசிவரது முகங்களில் நின்று முண்டானதால் ஒன்றுக்கொன்று மாறுபட்டதான கருத்துடையவை அல்ல, ஆகவே வேதங்கள் பொது நூலாகவும் சிவாகமங்கள் சிறப்புநூலாகவும் கொள்ளப் படுகின்றன.

ஒளி வண்ணனை பெருமானுக்கு ஞான வாக்கும் அநுபவ வாக்கும் அருள் நாத ஒலியாக விளங்குகிறது என்பர்

சான்றோர். அவர் அந்நாத ஒலியை பூஜை செய்யும் போதும் திருவிழாக் காலங்களிலும் ஓதச் செய்வது பெரும் புண்ணியம் என்பதை எடுத்துரைத்துள்ளார்.

திருமுறை ஆசிரியர்களும் ஞானவாக்கின்படியே ஒழுக வேண்டும், முக்தி சித்தித்தற்குக் காரணமாக விளங்கியவை வேதாகமங்களே, என்ற உண்மையை திருமுறை பாடல்களில் ''நான் மறைவல்ல ஞானசம்பந்தன்'' நான் மறையங்கமோதிய நாவன் வன்றொண்டன்' 'செழுமறை நெறியுந் திகழ் கருவூரன்'' என அனுபவித்துக் கண்டனர்,

வேதங்களில் நடுவில் உள்ளது யஜுர் வேதமாகும். வேத மந்திரங்கள் சிவபெருமானைப் பற்றி ஓதப்படும் ஸ்ரீ ருத்திரத்தால் பஞ்சாக்ஷரம் இருப்பதால், நமகத்துக்குப் பெருமை. ஸ்ரீ ருத்ரத்தை நடுவில் உள்ளதால் யஜுர் வேதத்துக்கு சிறப்பு. யஜுர் வேதத்தை நடுவில் உள்ளதால் வேதத்திற்கு மிகவும் சிறப்பு. அத்தகைய வேத மந்திரங்கள் இம்மைக்கும் மறுமைக்கும், இந்த லோகத்தில் பற்றுள்ளவர்களுக்கும், பற்றில்லாதவர்களுக்கும், காம்யங்களை விரும்புகிறவர்களுக்கும், இன்றியமையாததாகும்.

வேத மந்திரங்களால் சரீரஆரோக்யம், அழகு சரீரம் இயங்குவதற்கு அடிப்படையாகவுள்ள அறிவு, சரீர பலம் மனோபலம், தாம்பத்ய வாழ்க்கை, ஸஹோதரஸஹோதரிவாஞ்சைகுடும்பநிலைஒற்றுமை சமுதாய நிலையில் ஒற்றுமை உலக நிலையில் அமைதி இவை எல்லாவற்றையும் பெறலாம்.

இது தவிர மனித வாழ்க்கைக்கு அவசியமாக வேண்டிய மழை, ஆரோக்கியத்தோடு ஆயுள், சுபிக்ஷமான பண்டங்கள், பணப்பெருக்கு, வசிக்க வசதியான இடம், உண்பதற்கு உணவு, உடுக்க ஆடை இவைகளைப் போன்ற மனிதனுக்கு அத்யாவசியமான சௌகர்யங்களை வேத மந்திரங்கள் அனுஸந்தானத்தினால் (அடிக்கடி ஓதுவதால்) திண்மையாகப் பெறலாம் என்பது உண்மையாகும்,

வேத மந்திரங்களை பாராயணம் செய்வதின் மூலம் நாம் சிவபிரானை பிரார்த்தித்தால் இறைவன் நிச்சயமாக நாம் கோரின பலன்களை கொடுத்து அனுக்கிரஹிப்பான் என வேதமே பறை சாற்றுகிறது.

கோச்செங்க சோழநாயனார், புகழ்ச் சோழ நாயனார், அமர்நீதி நாயனார், முதலிய நாயன்மார்களும், முசுகுந்தர் முதலிய அரசர்களும், பெரியோர்களும், சிவாகம விதிப்படி பிரதிஷ்டை செய்வித்தும் நித்திய பூஜை புரிவித்தும் திருவிழாக்களை, தவறாது நடத்துவித்தும், பூஜை விழாக்கள் வழுவாது நடைபெறுவதற்கு நிபந்தங்கள் அளித்தும் அன்பு மேற்கொண்டு தரிசித்தும் வந்த சிவபுண்ணிய பேற்றால் தாம் விரும்பிய பயன்களை எய்தி இன்புற்றார்கள்.

'' இப்படியே யொருகலி லெழுவரையுந் தாபித்து
மெய்ப்பருவில் வழிபாடு விதிமுறை யாற் புரிவித்துச்
செப்பரிய புகழாரூர்த் தேவனுக்கு விழாச் செய்வான்
முப்புவனங்களும் போற்று முசுகுந்தன் முன்னினனால்,

— கந்தபுராணம்

வேதங்களைப் பாராயணம் செய்வதால் ஒரு ஜாதியர் மட்டும், அதன் பலன்களை அடைகிறார்கள் என்பது தவறு. வேத மந்திரங்களை அடிக்கடி சொல்லச் செய்வதால் எல்லா ஜாதியில் உள்ளவர்களும் இரண்டு கால்கள் உள்ள எல்லா உயிர்களும் நான்கு கால்கள் உள்ள எல்லா பிராணிகளும் எல்லாப் பயன்களையும் அடையும்படி செய்யப்படுகிறது என வேதமே பரக்க நிரூபிக்கிறது,

ஆலயங்களில் வேத மந்திரங்களை ஓதச் செய்வதும் அதாவது வேத பாராயணங்களைச் செய்விப்பதும் ''அருவிநீர் தொடர்ந்து பாய்கின்ற போது ஓம் எனும் ஒலி உண்டாவது போல், பகவத் ஸான்னித்யம் ஒளி வீசும். பகவதனுக்கிரஹமும் உண்டாகும்,

இன்றும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பல திருக்கோயில்களைப் புதுப்பித்தும், பூஜை, திருவிழா, விதி முறை வழுவாது நடத்தியும் வருகிறார்கள். திருக்கோயிலுக்கு மிகத் தேவையான சிவாகம, வேத, தேவார, பாடசாலைகள், கல்வி நிலையங்கள் நித்திய உரை வழுவாது நடைபெற அறக்கட்டளையும் அதற்குரிய நிரந்தரநிதியும் ஏற்படுத்திக் கோசாலைகள், நந்தவனங்கள், அன்னசத்திரங்கள், நீர் நிலையங்கள் முதலியன அதற்குரிய மான்யங்களை அளித்து நடத்தி வருகிறார்கள்,

இன்று திருவிழாக்கள் செய்தவர்களும், செய்வித்தவர்களும் உதவி புரிந்தோர்களும் இம்மையில் சகல போகங்களையும் அனுபவித்து மறுமையில் வீடுபேற்றையும் அடைவார்கள் என்பது திண்ணமாகும்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்
துறை விளங்க
பூதபரம் பரைபொலிய புனிதவாய்
மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு
பரவுவாம்

---

# செல்லப்பிள்ளை

(இராம வே. சேதுராமன்)

வேலைப் பிடித்தவன் காலைப்பிடித்தால்
வேதனை எல்லாம் தீர்ந்துவிடும்
பாலமுருகனைப் பாடி மகிழ்ந்தால்
பற்பல நன்மைகள் உண்டாகும்

அண்ணன் கணபதி முன்னேவர
ஐயப்ப சாமியும் பின்தொடர்வார்
மண்ணை அளந்தவன் 'மருகன்' என்பான்
மண்ணைச் சுமந்தவன் 'பிள்ளை' என்பான்

வளரொளி நாதரும் வந்திடுவார்
வடிவுடை யம்மையும் உடனிருப்பாள்
அழகிய வயிரவ சாமியுந்தான்
அங்கில்லாமல் எங்கிருப்பார்

கண்ணுந்தா தாயும் வந்திடுவாள்
காட்டு நாச்சியும் அங்கிருப்பாள்
உண்ணுமலையும் வந்திடுவாள்
உமையவளும் வந்து கொலுவிருப்பாள்

பொன்பொருள் தருகின்ற லெட்சுமியும்
பூவில் உறைகின்ற சரஸ்வதியும்
இன்னுமந்த வள்ளி தெய்வானையும்
ஈடில்லா மகிழ்ச்சி கொண்டிடுவார்





யாகசாலை மேற்பார்வை குழுவினர்



யாகசாலை மேற்பார்வை குழுவினருடன்
கும்பாபிஷேகக் குழுவினர்

உ

சிவமயம்

# டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கட்குப் பாராட்டு விழா

— ● —

மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர், டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களுக்குப் பாராட்டுவிழா வயிரவன் கோவிலில் டாக்டர் ராஜாசர் முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையில் மிக்க சிறப்பாக நிகழ்ந்தது. வயிரவன் கோவில் மண்டலாபிடேகம் (16 -3 -82) அன்று நிகழ்ந்தபோது இந்தப் பாராட்டு விழா ஏற்பாடு செய்யப் பட்டது. மின்சாரத்துறை மேற்பார்வைப் பொறியாளர் திரு. மகேஸ்வர்லால் கடவுள் வாழ்த்துப் பாடினார்கள். ராஜாசர் அவர்கள் துணைவேந்தருக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்கள் வயிரவன் கோவில் நகரத்தார் சங்கத் தலைவர் திரு. ப. ராம. குழந்தையன் செட்டியார், பொற்கிழிக் கவிஞர் திரு. அரு. சோமசுந்தரம் அரியக்குடி திரு. கி. ராம சாமி செட்டியார், வானதி திருநாவுக்கரசு, திரு. கண சிற்சபேசன், டாக்டர் வெ. சு. அழகப்பன், டாகடர் சப அண்ணாமலை ஆகியோர் துணை வேந்தரின் கல்விப்பணி, தமிழ்ப்பணி ஆகியவற்றைப் பாராட்டிப் பேசினர். காரைக்குடி திரு. மெ.காந்தி பாராட்டிதழ் படித்தளித்தார்.

உ

சிவமயம்

# மண்டலாபிடேகமும் மலர் வெளியீடும்

வயிரவன் கோயிலில் மண்டலாபிடேகம் துன்மதி ஆண்டு பங்குனித் திங்கள் 3 உ (16-3-82) செவ்வாய்க்கிழமை நடைபெற்றது. இவ்விழாவிற்குரிய ஹோமங்கள் 15 - 3 - 82 மாலை தொடங்கித் திருக்கோயில்மண்டபத்தில் நடைபெற்றன 16-3-82 காலை. ஹோமங்கள் நிறைவு எய்திச் சங்காபிஷேகமும் கடாபிஷேகமும் அருள்மிகு வளரொளி நாதர், அருள்மிகு வடிவுடையம்மை, அருள் தரும் வயிரவசுவாமி திருமேனிகளுக்கு நடைபெற்றன, விசேட அலங்காரங்கள் செய்யப்பெற்றுத் தீபாராதனை நிகழ்ந்தது. ஏராளமான அன்பர்கள் குழுமியிருந்து தரிசித்தனர். அனைவருக்கும் அறுசுவை உண்டி வழங்கப்பட்டது.

அன்று மாலை திருக்குட நன்னீராட்டுச் சிறப்புமலர் வெளியீட்டு விழா, டாக்டர் ராஜாசர் முத்தையாசெட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பு அரங்கத்தில் நடைபெற்றது. திரு. அரு. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் விழாத் தலைவருக்கு மலர் மாலை அணிவித்துச் சிறப்புச் செய்தார்கள் பதிப்பாசிரியர் டாக்டர் சுப. அண்ணாமலை மலரைச் சமர்ப்பித்து வரவேற்புரை நிகழ்த்தினர். மலரின் முதல் பிரதியை விழாத்தலைவரிடம் திரு. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். மலரின் சிறப்பைப் பாராட்டி விழாத் தலைவரும், திரு. குழந்தையன் செட்டியார் அவர்களும் திரு. அரு. சோமசுந்தரம், திரு. கண. சிற்சபேசன், டாக்டர் வெ. சு. அழகப்பன், வானதி திருநாவுக்கரசு ஆகியோரும் பேசினர். செயலாளர் திரு. அ. திருநாவுக்கரசு நன்றி கூற விழா இனிது நிறைவேறியது.

—o—

பாடப் பெறுபவர்: **பண்டிதமணி**

பாடுபவர்: 'பொற்கிழிக் கவிஞர்' *சொ. சொ. மீ. சுந்தரம்*, M.Com.

கள்ள மற்றுக் கவின் மிகுந்த பேச்சுக் கேட்கும்
கனிவோடு கண்டிப்பும் கலந்து தோன்றும்
வெள்ளைநிறத் தனியாடை நீற்றைக் காட்டும்
வேதங்கள் இவருக்காய்க் காத்தி ருக்கும்
உள்ளத்தில் வடமொழியும் தமிழும் தோன்றும்
உரையினிலே வாசகத்தேன் உயர்வாய்த் தோன்றும்
பள்ளம்தாழ் உறுபுனல்போல் பக்தி தோன்றும்
பண்டிதர்க்கு மாமணியை நினைவு கூர்ந்தால்.

மண்ணுக்குள் தமிழ்நாடு தவத்தைச் செய்ய
மகிபாலன் பட்டியது தவத்தைச் செய்யக்
கண்ணனைய நகரத்தார் மரபில் வந்து
கந்தனவன் கதிரேசப் பெயரைப் பெற்றான்.
எண்ணரிய தமிழுக்குச் சொந்தக் காரன்
இருமாதும் துதிபாடும் விந்தைக் காரன்
கண்ணகைச் செட்டிமக்கள் நினைந்து போற்றும்
கதிர்காமக் கதிரேசன் பிறந்து வந்தான்.

வடநூலும் தமிழ்நூலும் கண்ணுகக் கொண்டான்
வண்டமிழைத் தொட்டமையால் வாணிகத்தை விட்டான்
இடையினிலே வந்ததுதான் இளம்பிள்ளை வாதம்
இதனாலே கோலூன்றி வீதிவலம் வந்தான்
தடையென்றே நினைத்தவர்க்கும் தமிழ்வாரித் தந்தான்
சன்மார்க்க சங்கத்தில் தமிழ்ச்சோறு போட்டான்
விடையேறும் ஈசனையும் வாசகத்தில் கண்டான்
விரைவோடு பொருள்சொல்லி வேதத்தைத் தந்தான்.

## வேறு

ஞானத்தின் திருவுருவைத் தொட்டுப் பார்த்தான்
நல்லதமிழ்ச் சொல்லாலே தட்டிப் பார்த்தான்
தேனனைய கண்ணப்பர் அன்பைப் பற்றிச்
சிறப்பான திருவுருவப் பேச்சில் சொன்னான்.
வானுயர்ந்த சிவபுரியாய் ஊரை மாற்றி
வள்ளலெனச் சன்மார்க்க சபையைக் கண்டான்
தானுயர்ந்த தரமுடைய மாணிக் கத்தைத்
தமிழருக்குத் தந்துவிட்டு மறைந்து போனான்.

தன்னுடைய திருத்தோளில் துண்டு போட்டான்
தமிழ்த்தொண்டால் வடமொழியைக் கட்டிப் பார்த்தான்
மன்னுபுகழ்த் தமிழுக்கே ஊன்று கோல்நீர்
மதியுங்கள் எனக்காட்டக் கோலெ டுத்தான்
பன்னரிய தில்லையிலே அரசர் வைத்த
பல்கலையின் கழகத்தை உயர்த்தி விட்டான்
தென்னவரின் தமிழமுதை ஊட்டி விட்டுச்
செட்டிமக்கள் பலர்பேசச் செய்து வைத்தான்.

செப்பரிய தமிழுக்கே ஊன்று கோலாய்த்
திகழ்ந்திட்ட கதிரேசன் இந்த நாட்டில்
எப்பொழுதும் தமிழ்வளர்க்க வேண்டு மென்றே
இளம்பிள்ளை வாதத்தால் தடுத்தாட் கொண்டான்.
ஒப்பில்லா இடதுபதம் தூக்கி ஆடும்
உயர்ந்தபிரான் கதிரேசன் இடது காலை
எப்படியோ தான்கொஞ்சம் இளைக்கச் செய்தான்
இல்லையெனில் தமிழன்றோ இளைத்திருக்கும்.

தில்லையிலே ஆடுகிறான் ஈசன் இந்தச்
சிறப்பான கதிர்மணியின் விளக்கம் கேட்டே
எல்லையிலா மகிழ்ச்சியினால் ஆடு கின்றான்
இன்னுமந்த ஆட்டத்தை நிறுத்த வில்லை
சொல்லறிய சிவபெருமான் தவம்செய் கின்றான்
சுடராலின் கீழ்நின்றான் தெற்கு நோக்கி
நல்லவொரு மணியின்னும் தோன்று மென்று
நாயகனே தவம்செய்து நிற்கின் றானால்.



துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கத்திற்கு டாக்டர் ராஜாசர் முத்தையா செட்டியாரவர்கள் பொன்னுடை போர்த்துதல்



சிறப்பு மலரை டாக்டர் ராஜாசர் முத்தையா செட்டியாரிடமிருந்து குழந்தையன் செட்டியார் பெறுதல்



திரு கண்ணப்பா ஸ்ரீனிவாசன்
நாட்டரசன்கோட்டை



திரு கும. சா. அழகப்ப செட்டியார்
கீழச்சிவல்பட்டி



திரு ராம. வீர. பெரி.
பஞ்சநதம் செட்டியார்
காரைக்குடி



திரு நா. க. ராம.
ராமசாமி செட்டியார்
புதுப்பட்டி



**பிரதான யாகசாலைகள்:**

I அருள்தரு வயிரவர் வேதிகை

II அருள்தரு வளரொளிநாதர் வேதிகை

III அருள்மிகு அன்னை வடிவுடையம்பாள் வேதிகை

**குறிப்பு :**

பிரதானவேதிகை மூன்று

ஒவ்வொன்றும் 4' 6" சமசதுரம்

வேதிகை ஒன்றின் குண்டங்கள் 9

வேதிகை 3 க்கு 27 குண்டங்கள்

மொத்த நீளம் 72 அடி அகலம் 22 அடி

வேதிகை ஒவ்வொன்றின்அளவு 22' × 22'

இடைவெளி 3 அடி வீதம் இரண்டு.

**பரிவார யாகசாலைகள்:**

IV ஸ்ரீ விநாயகர்

V ஸ்ரீ சுப்ரமணியர்

VI ஸ்ரீ அறுபத்து மூவர்

VII ஸ்ரீ நால்வர்

VIII ஸ்ரீ நவக்ரகம்

IX ஸ்ரீ சண்டீஸ்வரர்

XI ஸ்ரீ தெட்சிணா மூர்த்தி

XII ஸ்ரீ ராஜகோபுரம்

XIII ஸ்ரீ உற்சவர்

XIV ஸ்ரீ நந்திகேஸ்வரர்

XV ஸ்ரீ கருப்பர்

XVI ஸ்ரீ மகாலெட்சுமி

ஒவ்வொன்றின் விஸ்தீரணம் 12' × 12'

மொத்த நீளம் 72' அகலம் 24'

வேதிகைகளுக்கு ஏககுண்டம்

X திருமுறை பாராயணம் நாதஸ்வரம்




திருக்கோவிலின் வரைபடம்



A. No. 33548
LIBRARY, KOVILOOR


திருக்கோவிலின் வரைபட விளக்கம்

| | | நீளம் | அகலம் |
|---|---|---|---|
| 1. | ராஜகோபுரம் | 36' 00" | 16' 00" |
| 2. | யாகசாலை | 15' 00" | 10' 00" |
| 3. | பள்ளியறை | 10' 00" | 8' 00" |
| 4. | அம்பாள் சன்னிதி | 14' 3" | 15' 00" |
| 5. | வயிரவசுவாமி சன்னிதி | 15' 00" | 15' 00" |
| 6. | நடராசர் சன்னிதி | 16' 6" | 15' 6" |
| 7. | சுவாமி சன்னிதி | 16' 6" | 16' 6" |
| 8. | சுப்பிரமணியர் சன்னிதி | 10' 00" | 10' 00" |
| 9. | விநாயகர் சன்னிதி | 10' 00" | 10' 00 |
| 10. | மகாலட்சுமி சன்னிதி | 12' 00" | 10' 00" |
| 11. | சோமாஸ்கந்தர் | 12' 00" | 10' 00" |
| 12. | மண்டபங்கள் | 12' 00" | 12' 00" |
| 13. | மணிமண்டபம் | 9' 6" | 10' 00 |
| 14. | யாகசாலை | 13' 00" | 13' 00" |



பிரதான பிரதான யாகசாலை ஒன்றின் முகப்புத் தோற்றம் வரைபடம்



திரு வயி ராம. நா. ராம.
வயிரவன் செட்டியார்
கண்டனூர்



காரைக்குடி திரு AL. வீரப்ப செட்டியார்

# நகரத்தார் வரவும் வாழ்வும்

தே. சொக்கலிங்கம், எம். ஏ., பி.ஓ.எல்.
தமிழ்ப் பேராசிரியர்,
அழகப்பா கல்லூரி, காரைக்குடி-3.

''ஊருணிகள் கூபமிவை உண்டுபண்ணி
மிக்கதர்மம்
தாரணியில் செய்திட்ட சற்புருஷர்''

என்று பாடுவார் முத்தப்ப செட்டியார் நகரத்தார்களைப் பாராட்டுவர். நகரத்தார், நாட்டுக்கோட்டை நகரத்தார், இரத்தின தனமகுட வைசியர், பூபாலதன வைசியர், பிரதான வைசியர், உபயகுல பூபால வைசியர், சந்திர கங்காகுல வைசியர், சிவகோத்திர வைசியர், நாட்டுக்கோட்டை செட்டியார் எனப்பலபெயர்களால் அழைக்கப் பெற்றனர்.

## செட்டிநாடும் எல்லையும் :-

நாட்டுக்கோட்டை செட்டியார்கள் அனைவரும் ஒருங்கு கூடிப் பெருகி வாழு மிடம் செட்டிநாடு.

புதுக்கோட்டை, இராமநாதபுரம் மாவட்டங்களில் இன்றையச் செட்டிநாட்டு ஊர்கள் அமைந்திருக்கின்றன. செட்டியார்கள் வாழும் ஊர்களில் இவர்களுடன் பல்வேறு இனத்தார்களும் வாழுகின்றனர்.

சமீன்தார்கள் ஆட்சிக் காலத்திலும் செட்டிநாட்டுப்பகுதி முழுமையும் ஒரு சமீனுக்குக் கீழ் அடங்கவில்லை. செட்டியார்கள் பலர் சமீன்தார்களாக இருந்தாலும் அவர்கள் ஆட்சிபுரியவில்லை; நகரத்தார் பல இடங்களில் வாழ்ந்து பலர் ஆட்சிக்கு உட்பட்டாலும் அவர்களிடையே ஒற்றுமை குறையவில்லை. தொண்ணூற்று ஆறூர் நகரக் கூட்டமும் அவர்கள் இன ஒற்றுமையைக் காத்தது. தம்மை ஆளுவோரைப் பற்றிக் கவலைப்படாது தங்கள் உறவைத் தொடர்ந்து வளர்த்தனர்.

எங்கிருந்தோ வந்த நகரத்தார் தங்கள் மரபினர் சிதறிச் சிதைந்து போகக் கூடாது என்று எண்ணினர். கூட்டமாக வணிகம் செய்த குழுமனப்பான்மை அவர்களிடை என்றும் இருந்தது அதனால் நம் மரபினர் வாழ்தற்கு நில எல்லையை வகுத்துக் கொண்டனர்.

வெள்ளாறு வடக்காம் மேற்குப்
பிரான்மலையாம்
தெள்ளார் புனல்வைகை தெற்காம்
ஒள்ளியசீர்
எட்டிக் கடல்கிழக்காம் இஃதன்றோ
நாட்டரண் சேர்
செட்டிநாட்டு எல்லைஎனச் செப்பு .

இவ்வாறு பாடுவார் முத்தப்ப செட்டியார், செட்டியார்கள் வாழும் எல்லையைப் பாடினார் இவ்வெல்லைக்கு உள்ளேயே செட்டிநாட்டு ஊர்கள் உள்ளன இவ்வெல்லையைத்தாண்டிச் சென்றால் தீமை விளையும் என்ற அச்சமும் இருந்ததுண்டு.

## நகரத்தார்களின் தாயகம்:-

நகரத்தார்களின் தாயகம் பற்றிச் செவிவழிச் செய்தியாக வழங்குவதைக் காணலாம். ''இத்தனப் பெரும் வணிகர்கள் கலியுகம் (200) இருநூறு ஆண்டுகளுக்கு முன்னாக நாட்டில் 'சாந்தியா புரி' என்னும் நகரில் சந்திரகுல கோத்திர வைசியரென்ற பெயரும் கோபதீச்சுர சுவாமி தரிசனமும் மரகத விநாயகர் பூசையும் சதாசிவ குரு பீடத்திற்றீக்ஷையும் இரத்தின வியாபார

மும் செய்து கொண்டிருந்தார்கள்.'' அந் நாட்டு மன்னன் செய்த கொடுமையால் காஞ்சிபுரம் வந்தார்கள். பின் அந்நகரத்துக்குக் கதிபனுகிய பிரதாப அரசன் அநீதி செய்யவே காவிரிப்பூம்பட்டினம் வந்தார்கள். அங்குப் 'பூவந்திச் சோழன்' நகரத்தார் குலப் பெண்ணை அநீதியாய்ச் சிறை வைக்கப் பலர் உயிர் துறந்தனர், ஆண் குழந்தைகளைத் தங்கள் ஆசான் ஆத்மசாஸ்திரியிடம் விடுத்தனர். ஆசான் தன் மாணுக்கர்களுடன் பாண்டி நாட்டிற்கு வந்து விட்டார்.[1]

இக்கதை நெடுங்காலமாகச் செட்டியார்களிடையே வழங்குகிறது. நகரத்தார்கள் சாந்தியாபுரி (சந்தியாபுரி)யில் வாழ்ந்தமைக்கோ காஞ்சிபுரத்தில் இருந்தமைக்கோ வெளிப்படையான சான்றுகள் இன்றையநிலையில் கிடைக்கவில்லை.

''காஞ்சிபுரத்தில் இருந்து வந்தவர்கள் ஆதலால் இவர்கள் நகரத்தார்கள் என்று பெயர் பெற்றனர்'' என்பர் உயர் திரு. கம்பன் அடிப்பொடி. ''பல ஊர்களைச் சேர்ந்த வணிகர்கள் ஒன்றுகூடி அமைத்த வணிகக் குழுக்களைப் போன்றே, ஓர் ஊரில் உள்ள வணிகர்கள் அனைவரும் கூடித் தமக்குள்ளே குழு அமைத்து வாழ்ந்தனர்; அத்தகைய உள்ளூர்க் குழுக்களை நகரம் எனப் பெயரிட்டு அழைக்கின்றன கல்வெட்டுக்கள்''[2] எனவே நகரத்தார் என்ற பெயர் வியாபாரக்குழு என்ற அடிப்படையில் தான் ஏற்பட்டிருக்க வேண்டும். காஞ்சிபுர வாழ்க்கையால் ஏற்பட்டிருக்க முடியாது.

சாந்தியாபுரி, காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் என்ற வரிசையில் காவிரிப்பூம்பட்டினம் நகரத்தார்களின் வாழ்விடமாகத் திகழ்கிறது. சிலப்பதிகாரம் காவிரிப்பூம்பட்டினத்தில் நகரத்தார் வாழ்ந்தமையைத் தெளிவாக்கும். கோவல கண்ணகியர் நகரத்தார் மரபைச்சார்ந்தவர் என்பது பலரும் ஒப்பிய உண்மை.

செட்டி நாட்டில் வாழ்ந்த பல புலவர்கள் தங்கள் நூல்களில் நகரத்தார் காவிரிப்பூம்பட்டினக்திலிருந்து இப்பகுதிக்குக் குடி பெயர்ந்தவர்கள் என்று பாடியுள்ளனர், பெரும்புலவரான பாடுவார் முத்தப்ப செட்டியார் திருமுகவிலாசத்தில்

''பார்த்திபர் காவிரிப்பூம் பட்டினத்தில்
முன்வைசியர்
கோத்திரத்தில் மிக்க குபேரனைப்போல் ''
(கண்ணி:183)

நாட்டுக்கோட்டை நகரத்தார் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து இன்று வாழும் பகுதிக்கு (அஃதாவது சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டுக்கு) வந்தமைக்கு யாது காரணம்? இதற்கு இப்போதைய நிலையில் நேரிடையாக விடை இறுக்க முடியாது. வழி வழிச் செய்திகளை உயர்திரு கம்பன் அடிப்பொடி முறைப்படுத்தியுள்ளார்கள். அவர்கள் உரைப்பதன் சாராம்சம் கீழே காண்க:-

1. நகரத்தார் கொடைச் சிறப்பால் ஏற்பட்ட பொருமை
2. இவர்கள் செல்வ வளத்தால் எழுந்த பொருமை
3. இவர்கள் அறிவாற்றலால் தோன்றிய பொருமை
(இவற்றையெல்லாம் ஒன்ருக்கிநகரத்தாரிடம் மன்னனுக்கு ஏற்பட்ட பொருமை என ஒன்ருகச் சொல்லலாம்)
4. நகரத்தார் பெண்ணை உலாப் போந்த மன்னன் முத்தமிட அதனல் விளைந்த பகை.

நகரத்தார் சொல்லும் கதையில் இந் நான்கு கூறுகளும் அவ்விருவர் பாலும் இருந்தன என்று உணரலாம்.

வேலங்குடிக் கல்வெட்டுஎன அச்சிடப் பட்டுள்ள நூலில் இவ்வரலாறு இடம் பெற்றிருக்கிறது.[3] அன்றிப்பாண்டிய நாட்டில்

1 இச் செய்தி 'ஏழு நகரத்தார் தரும சாசனத்திலும்' A General History of the Pudukottai State' என்ற நூலிலும் காணப்படுகிறது.

2 கா. கோவிந்தன்—தமிழர் வாணிகம் ப 88

3 நகரத்தார் சரித்திரம் : (1959) திருமண அன்பளிப்பு (பதி.) செல்வக்குறள் மணி

நற்குடிகளும் வைசியர்களும் இன்மையால் சவுந்திரபாண்டியன் சோழ மன்னனை நாடி நகரத்தார்களை அழைத்துவந்தான். இவ்வாறு நல்ல குடிமக்கள் நாட்டில் இல்லாத போது நாடுவிட்டு நாடு சென்று மக்களை அழைத்தல் வரலாற்றில் கண்ட உண்மை.

பாடுவார் முத்தப்ப செட்டியாரும் முத்துக்குட்டிப்புலவரும் பாண்டியமன்னன் சோழ நாடு போய் நகரத்தாரை அழைத்து வந்தான் என்பர்.

''பார்த்திபர் காவிரிப்பூம் பட்டினத்தில் வைசியர் கோத்திரத்தில் மிக்க குபேரனைப் போல்-வீற்றிருக்கும் அந்நாளில் பாண்டி நகர்க்கு ஆனகுடி வேண்டுமென்று தென்னுடன் தேசிகர்பால் சென்றுரைத்து-முன்னுன மெத்த உபசாரம் வேண்டுவதெல்லாமுரைத்துச் சித்தம் திரும்புதற்குச் செய்தி சொல்லிச்-சத்தியமாய்த் திங்கள் கதிர் உள்ள மட்டும் தேசிகரே என் நாட்டில் உங்கள் மரபுக்கொரு காலும்-பங்கம் வர ஒட்டேன் ...—

(திருமுக விலாசம்: 183-187)

இதனை நகர வாழ்த்திலும் குறிப்பர்.

கண்ணுடையம்மன் பள் பாடிய முத்து குட்டிப்புலவர்,

''சென்று நற்குடி மாறனழைக்கச்
சிறந்த காவேரிப்பூம் பட்டணத்தில்
அன்றிருந்து பொற்றேரேறி வந்தோர்
அருவியூர் சுந்தரம் தன்னிளசை
யென்று மூன்றிலிசை யைஞ்நூற்றுவாழ்
ஏழுமா நகர் வாழும் வணிகர்
நன்றிசேர் கண்ணுடையாளைப் போற்றும்
நகரமெங்கள் நகரங்காணுண்டே''

என்று அப்பள்ளில் இவ்வரலாற்றைக் குறிப்பர். வாய்மொழிக்கதை, சோழ மன்னனை நாடிப்பாண்டியன் அழைத்தான் எனத்தெரிவிக்கிறது. பாடுவார் ஆசானை நாடிஅழைத்து வந்தான் எனக் கூறுகிறுர். ஏழுநகரத்தார் குறுவநாடகத்திலும்[1] இக் கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

புலவர்கள் நகரத்தார் இடம் பெயர்ந்தமையை விளக்கினுலும், மக்கள்இடையே வழங்கும் கதை பெண்ணுடன் தொடர்புபடுத்தித்தான்பேசுகிறது. நகரத்தார்களைச் செட்டிகள் என்ப. செட்டிகளிலேயே நகரத்தார் செட்டி, காசுக்காரச்செட்டி, பேரிச் செட்டி, எனப்பலபிரிவுகள் காணப்படுகின்றன

நாகர்கோயில் வட்டாரத்தில் வாழும் இரணியல் செட்டியார்கள் செட்டியார் வகைகளில் ஒருபிரிவினர். ''நாகர்கோயில் கோட்டாறுப்பகுதியில் குடியேறினர். காவிரிம்பூம்பட்டினத்திலிருந்து கொண்டு வந்த மரகதப்பிள்ளையாரைக் கோட்டாற்றில் பிரதிஷ்டை செய்து வழிபடுவாராயினர். அக்கோயில் உள்ள தெரு செட்டித்தெரு எனப்படுகிறது. அங்குள்ள பிள்ளையார் பெயர் 'தேசி விநாயகர்' என்பதாம்.''[2]

கோட்டயம்-குமுளிச்சாலையில் கஞ்சிர பள்ளி (Kanjirapalli) என்ற இடத்தில் ஆதிகணபதியார் கோயில் உள்ளது. பன்னிரண்டாம் நூற்றுண்டில் செட்டியார்களால் இக்கோயில் கட்டப்பட்டது. 'குப்பா செட்டியார், மருத செட்டியார்' என்ற பெயர்கள் அங்குக் காணப்படுகின்றன. பின் இங்கு வாழ்ந்த மக்கள் அம்மை நோயின் தாக்குதலால் இடம் பெயர்ந்தனர்.[3] இதனுல் நகரத்தார்களின் கேரளத் தொடர்பு அறியலாம்.

இரணியல்செட்டியார்கள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வந்தவர்கள். அவர்கள் தங்களை 'ஏழூர்ச் செட்டியார்கள்' என்பர். ஏழூரில்வாழ்வதால் அப்பெயரடைந்தனர் நாட்டுக்கோட்டைச்செட்டியார்களும் ஒரு காலத்தில் கோட்டாற்றில் வதிந்தவர்கள். நகரத்தார் பழைய தொடர்பினை மறவாது ஆண்டுக்கு ஒரு

1 ஆய்வுக் கோவை — (11 ஆவது கருத்தரங்கு — 1979) (பக் 147 — 152) நிர்மலா மோகன் எழுதிய கட்டுரை.

2 கம்பன் அடிப்பொடி (1980) திருக்குட நீராட்டு மலர், கோட்டையூர்.

3 The Indian Express : 11—12—1975

முறை தங்களின் பழைய இடம் போய்த் தொன்மைக் கடவுளைத்தொழுது வருகின்றனர்.

பன்னிரண்டாம் செட்டியார்கள் குழித்தலைக்கு.மேற்கே 'பழைய செயங் கொண்டம்' பகுதியில் வாழ்கிறார்கள். இவர்கள் சிவபெருமானைத்தங்கள் பங்காளியாகப் பெற்றவர்கள்.[1]

''நகரத்தார்களின்மரபுகளைப்பற்றியும் உரிமைகளைப் பற்றியும் 1318ஆம் ஆண்டு பாண்டியக் கல்வெட்டு ஒன்று சில செய்திகளைத் தருகின்றது. அதில் காவிரியின் இரு கரையிலும் இருந்த பதினெண் பூமிவணிக நகரத்தார்களின் பிரசஸ்தி அல்லது மெய்க் கீர்த்தி கொடுக்கப்பட்டுள்ளது. இப் பதினெண் பூமி வணிக நகரத்தார் சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறினர் என்று தெரிகின்றது.''[2]

நகரத்தார் வரலாறு பற்றிய வேலங்குடிக்கல்வெட்டு, நகரத்தார் வரலாற்றையோ இடப்பெயர்ச்சியையோ சொல்லவில்லை. அக்கல்வெட்டு வேலங்குடி இறைவற்கு வாணிப நகரத்தார் கொடையையே உரைக்கிறது.[3]

நகரத்தார் வரலாற்றில் தொடர்புடைய பூவந்திச்சோழன், ராசபூஷண சோழன் என்ற பெயர்கள் வரலாற்றில் இல்லை. இவற்றுக்கு ஒப்பான பெயர்களும் இல்லை. இவை இன்னும் ஆராய்வதற்கு உரியன.

நாட்டுக்கோட்டை நகரத்தார் பல்வகை வியாபாரங்கள் செய்து திரண்ட செல்வம் பெற்ற பின்பே தனவணிகம் (வட்டித்தொழில்) செய்யலாயினர். எவ்வணிகம் செய்யினும் இவர்கள் தெய்வத்தை மறவாத பெருந்தகையர். பின்னளில் பாண்டியர்களிடம் சில கோயில் உரிமைகளை வாங்கி அவற்றாலே தங்கள் பிரிவுகளைச் சொல்லிக் கொண்டனர். சிறந்த வணிகரான நகரத்தாரோடு தொடர்புடைய பழைய வணிகக்குழுக்கள் எவை என்று காணலாம்.

## நகரத்தார்களும் வணிகக்குழுக்களும்:—

எழுநகரத்தார்களிடையே மாத்தூர் கோயில் இறைவன் 'ஐந்நூற்றீசர், என்றும் சூரக்குடி இறைவன் 'தேசிக நாதர்' என்றும் பிள்ளையார் பட்டிப்பிள்ளையார் 'தேசிக விநாயகப்பிள்ளையார்' என்றும் பெயர் பெறுவர். இப்பெயர்கள் '' நானாதேசித்திசையாயிரத்தைந்நூற்றுவர்'' என்பதோடு தொடர்புடையன. இச் சொற்றொடர்க்குப் பற்பல நாடுகளிலும் சென்று வர்த்தகம் செய்யும் ஐந்நூற்றுவர் என்பதே பொருள்.

இதனால் 'ஐந்நூற்றுவர்' குழுவைச் சார்ந்தவர் நகரத்தார் எனலாம். இக்குழுவினர் பாண்டிய நாட்டில் சிறிய ஊர்களிலும் இருந்து வணிகம் நடத்தினர். திரட்டிய செல்வத்தைக் கோயில்களுக்கும் பொதுநன்மைக்கும் செலவிட்டனர். அத்தகைய செய்திகள் சிலவற்றைக் காண்போம்.

''உக்கிரன் கோட்டையில் இராச சிங்கப்பேரங்காடி என்னுமிடத்தில் நகரத்தார்கள் பலர் வியாபாரம் செய்ததை ஒரு பழைய கல்வெட்டுத் தெரிவிக்கின்றது அவ்வூரிலுள்ள வடவாயில் அமர்ந்தாள் கோவிலுக்கு ஐந்நூற்றுவர் குழுவைச் சேர்ந்த நகரத்தார் ஒருவர் கட்டிய திருச்சுற்றாலைக்கு 'நகரத்தார் திருச்சுற்றாலை, என்று பெயரிட்டதை 9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. இராமநாதபுரம் மாவட்டம் பிள்ளையார் பட்டியில் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (13ஆம் நூற்றாண்டு) கல்வெட்டொன்று பாண்டிய

---

1 வல்ல நாட்டுச் செட்டியார்களும் தாங்கள் பதினொரு பேரே வந்ததாகக் கூறுகின்றனர், திருவரன்குளம் இறைவனுக்குத் தாங்கள் பெண் கொடுத்ததாக உரைக்கின்றனர்.

2 Annual Report on Epigraphy (1960—61) P 63.

3 Dr: K. Chandrasekar: (1978): The Nagarathas of South India. P. 30.

நாட்டில் பல ஊர்களில் குடியேறியுள்ள நகரத்தாரைப் பற்றிக் கூறுகிறது. எறுக்கன் குடியில் நகரத்தார் வகுத்தவீதி ஐந்நூற்றுப் பெருந்தெரு என்று வழங்கப் பட்டது. பிள்ளையார் பட்டியில் இவர்களது திசையாயிரத்தைந்நூற்றுவர் என்ற குழு இயங்கியது. சிவபுரியிலுள்ள கோயிலுக்கு ஆயிரத்தைந்நூற்றுஈச்சுரமுடையார்என்று பெயர் வழங்கப்பட்டது. அதற்கு அருகிலுள்ள அருவியூர் என்னும் ஊர் நானாதேசி உய்ய வந்தான் பட்டணம் என்று வழங்கப்பட்டது.''

இராமநாதபுரம்மாவட்டம்பிள்ளையார் பட்டியிலுள்ள பதின்மூன்றும் நூற்றாண்டுக்கு உரிய கல்வெட்டு நகரத்தாரைப் பற்றிய செய்தியைப் புலப்படுத்துகிறது. திருவீங்கைக்குடி மகாதேவர் கருவறைத் திருவாசலுக்கு வலபால் சுவரில் இக்கல் வெட்டு உள்ளது இதன்காலம் கி பி. 1284 எனக்குறிப்பர் உயர்திரு கம்பன் அடிப் பொடி* இக்காலத்துக்கு முந்தியகல்வெட்டு (கி.பி. 1202) இக்கல்வெட்டு இது தேசிய விநாயகப்பிள்ளையார் குடவரைத் திரு வாயிலுக்கு வலபால் உட்சுவ்ரில் உள்ளது

இக்கல்வெட்டு, நகரத்தாரில் ராச நாராயணபுரக் கிளையினரைப் பற்றிச்சுட்டு கிறது. ¹ இரணியூர்க்கோயில் நகரத்தார் ''கல்வாசல் நாட்டில் இளையாத்தன்குடி யான குலசேகரபுரத்தில், இரணியூர் மருதங்குடியான இராசநாராயண புரத்தில் இரணியூர்த் திருவேட்பூருடையார்'' என எழுதுவர். பிள்ளையார்பட்டிக்கோயிலாரும் இராசநாராயணபுரத்தைச் சார்ந்தவர்கள். வேலங்குடி, சூரைக்குடிகோயிலார் தேசிக நாராயணபுரத்தார்.

எறுக்கங்குடியில் உள்ள ஐந்நூற்றுவப் பெருந்தெருவில் அவர்கள் குடியிருந்தனர் மருதங்குடியில் புதிய நிலங்களை வாங்கித் தங்கள் இனத்தாரைக் குடியேற்றினர். அக் குடியிருப்புக்கு ராச நாராயண புரம் என்று பெயர். நாட்டுக் கோட்டை நகரத்தார் பாண்டிய நாட்டில் குடியேறிய ஊர்களில் இஃது ஒன்று.

இக்கல்வெட்டு இரண்டிலும் ஐந்நூற்றுவப் பெருந்தெருவில் நகரத்தார் 'கானாட்டு காரிகுடி ஐந்நூற்றுவப் பெருந் தெருவில் நகரத்தார்' எனக் குறிக்கப்பெறுவர். காரிகுடி கானாட்டில் உள்ள ஊர்; அஃது எந்த ஊர் என்று கானாட்டு ஊர் வரிசையில் காணவேண்டும்.

,பிரான் மலையிலுள்ள ஒரு கல்வெட்டு நகரத்தாரும் மற்ற வகுப்பினரும் அடங்கிய சித்ரமேழிக் குழுவினரின் தன்மையைக் குறிக்கிறது. இங்கு இடம் பெறுவோர் திசையாயிரத்து ஐந்நூற்றுவர். இதில் 'கேரள சிங்க வளநாட்டு அருவி மாநகரமான குலசேகர பட்டினத்து நகரத்தார், எனத் தெளிவாகக் குறிக்கப் பெறுவர். கல் வெட்டுக்கள் பதின்மூன்றும் நூற்றாண்டிலேயே இம்மரபினர் செட்டிநாடு முழுவதும் பரவியிருந்தனர் என்ற உண்மையை எடுத் தியம்புகின்றன.

டாக்டர். கே. வி. இராமன் அவர்கள் ''இக்கல்வெட்டுக் கணிப்புப்படி (A R E 1960—61. P 23) கி. பி. எட்டாம் நூற்றுண்டுத் தொடக்கத்திலேயே அவர்கள் பாண்டிய நாட்டில் குடியேறினர் என்று தோன்றும். 8-9 ஆம் நூற்றுண்டுக் கல் வெட்டுக்களிலேயும் அவர்கள் குறிப்பிடப் பட்டுள்ளனர். இவர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் இங்குக் குடியேறியவர்களாகக் கொள்ளக் கூடாது. பாண்டிய நாட்டிற்கு வெகு காலம் தொட்டே அடுத்தடுத்து அவர்கள் வந்திருக்கின்றனர்' என்று கருதுவர் இது பொருத்தமான, ஏற்றுக் கொள்ளத்தக்க கருத்து.

நகரத்தார் வரலாறு இன்னும் நன்கு ஆராய்தற்குரியது முன்னாள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர். கே. சந்திரசேகர் அவர்கள், வரலாற்று மூலங்களின் பெயர்ப் பட்டியலைப் பலர் துணையால் நன்குதொகுத்துள்ளார். அவற்றையும் அவர் குறிப்பிடாத இன்னும் பல சான்றுகளையும் தொகுத்து ஆய்வு மேற் கொள்ள வேண்டும். நகரத்தார் தொடர் பான சில ஆய்வுக்களம்

---

* சா. கணேசன் (1955) — பிள்ளையார்பட்டித்தல வரலாறு பக்: 47—48.

1. நகரத்தார் வீடுகள், அமைப்பு கலை நுணுக்கம்.

2. நகரத்தார்களின் படைப்புகள், பொதுப் படைப்பு, வீட்டுப் படைப்பு, பூசை.

3. நகரத்தாரின் கருப்பர் வழிபாடு.

இவை போல இன்னும் பல தலைப்பு களில் நகரத்தார் தொடர்பான ஆய்வுகள் நிகழ வேண்டும். அதன் பின் எழுதப் பெறும் நகரத்தார் வரலாறு சிறப்படையும் இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபடுவதும் ஈடுபடுவார்க்குப் பொருள் உதவி செய் வதும் நகரத்தார் சங்கங்களும் நகரப் பெருஞ் செல்வர்களும் செய்ய வேண்டிய கடமையாகும்

'வாழுங் குமரேசர் மாராசர் தென்னிலைசை,
ஏழு நகரத்தார் வாழியே''





# வேண்டுதல்

பழனி இளங்கம்பன்

அழகால் எனைநீ கவர்ந்திட வேண்டும்
அறிவால் எனைநீ ஆண்டிட வேண்டும்
குழலாய் எனைநீ கொண்டிட வேண்டும்
கோலஇசையை எழுப்பிட வேண்டும்

தாயாய் எனைநீ காத்திட வேண்டும்
தமிழாய் எனைநீ ஈர்த்திட வேண்டும்
சேயாய் எனைநீ மாற்றிட வேண்டும்
சிந்தைக்கு ஒளியை ஏற்றிடவேண்டும்

புள்ளாய் எனைநீ ஆக்கிட வேண்டும்
புதுப்பண் பாடவைத்திட வேண்டும்
கள்வ உனையான் தொடர்ந்திட வேண்டும்
கனியாய் எனைநீ செய்திட வேண்டும்

பயிராய் எனைநீ நினைத்திட வேண்டும்
பரமநின் அன்பினில் குளித்திட வேண்டும்
உயிரே உனைநான் நினைத்திட வேண்டும்
ஒளியே எனைநீ நடத்திட வேண்டும்

# "திருப்பணிக்கு மூடுவிழா நடத்தலாமா"?

— கவிஞர் சோம. சிவப்பிரகாசம், எம்.ஏ.,

மன்ருடும் ஈசனையும் குன்று தோறும்
மகிழ்ந்தாடும் முருகனையும் போற்றி ஏந்தி
நின்ருடல் ஒன்றுமட்டும் சமயம் அன்று
நெஞ்சினிக்கப் பாடுவது சமயம் அன்று
நன்ருகாத் தீமைகளைக் கண்ட போதும்
நாடேற்காச் சடங்குகளைப் பார்த்த போதும்
கன்ருகி மனமுருகிக் கதறினுர்கள்
கனிவுக்கு மறுபெயரே சமயம் ஆகும்.

ஊர்ஒதுங்கி நகர்ஒதுங்கிச் சிவனின் பேரை
உச்சரித்தல் சமயமில்லை ! ஊரார் எல்லாம்
பேர்பெறவும் பெருமைகளை உறவும் அந்நாள்
பேருதவி சமயமே செய்யக் கண்டோம்
ஆர்வந்தால் நமக்கென்ன ஆண்டால் என்ன
ஆண்டவனே எனஅன்று சமயம் வீணே
கூர்மழுங்கிக் கிடவாமல் தீமை கண்டால்
குத்தீட்டி எனமின்னிக் காத்த தாலோ



மேம்பாடு சமதர்மம் இவற்றை எல்லாம்
மேலான கோட்பாடாய்ச் சமயம் கொண்டு
தாம்பாடு வளராமல் பாடுபட்டுத்
தக்கபடி வளர்த்ததுவோ அருமைப்பாடே
பாம்பாடு கழுத்துடைய சிவனை மட்டும்
பாடுவது சமயமில்லை உலகம் வாழ
வீண்பாடு பட்டிடாமல் சமயச் சங்கு
வீரமுடன் போர்ப்பாட்டைப் பாடலாச்சு !

நெஞ்சுக்கே உணவளிக்கும் சமயம் இல்லை
நினைவுக்கே நீர்பாய்ச்சும் சமயம் இல்லை
பஞ்சைகளை ஏழைகளை உயர்த்தி வாழ்வில்
பயன்காணச் செய்கின்ற சமயம் இல்லை
அஞ்சாமல் தீமைகளைக் கண்ட போதும்
அறிவற்ற சடங்குகளைப் பார்த்த போதும்
கொஞ்சமும் மனம்குமுருச் சமயம் நல்ல
கும்மிருட்டில் முளைத்திட்ட செடியாய் ஆச்சு

அச்சமில்லை அச்சமில்லை முதலில் இஃதை
அறிவித்தான் பாரதியா? அதற்கே முன்னே
இச்சகத்தில் நாம்யார்க்கும் குடியும் அல்லோம்
எமனுக்கும் அஞ்சமாட்டோம் என்று நாடே
மெச்சுவகை சொன்னவரே அப்பர் ஆவார்
மேலான அந்நாளில் சமயம் செய்த
உச்சமதை நன்ருக எண்ணீர்! இன்ரே
உருப்படியாய்ச் சமயம்தான் செய்யவேண்டும்



பார்வாழத் திருவீதிப் பணிகள் செய்தார்
பாவரசன் நாவரசர் அவரைப் போல்
ஊர்வாழத் திருத்தொண்டு செய்யும் நல்ல
உத்தமர்கள் பெருகாத காரணத்தால்
சீர்மாளச் சமயந்தான் முடங்கிப் போச்சு
திருப்பணிக்கு மூடுவிழா நடத்த லாமா?
ஊர்வாழ உயிர்வாழச் சமயம் தன்னை
உயிருள்ள பொருளாகச் செய்ய வேண்டும்.

பேர்மாறிச் சமயமெலாம் கட்சி யாகப்
பெரும்பாலும் சமயங்கள் ஒடுங்கிப் போச்சு
தேர்ஏறிச் சாமியது தெருவில் வந்தால்
திருவிழா ஒழுங்காக நடந்தால் இந்தச்
சீர்ஏற்றும் சமயமோ மகிழ்ச்சி கொள்ளும்
சிறுசெயலால் சமயந்தான் செழிப்பா கொள்ளும்!
ஊர்போற்றி வளர்த்திட்ட சமயம் மீண்டும்
உலகாள எழுந்துவர உறுதி ஏற்போம்!



# பஞ்சாமிர்தப்பிரியன் பாமாலை

கவிஞர் சிவல்புரி சிங்காரம்
கீழச்சிவல்பட்டி.



ஆபத்து வரும்போது அரவணைத் திருக்கவுன்
ஆறிரு கரங்கள் உண்டு!
அஞ்சிடும் பகைவந்த போதிலும் அதைவெல்லும்
ஆயுதம் கையில் உண்டு!
தீபத்தை ஏற்றியுன் முகத்தினைத் தரிசிக்கத்
தீங்குகள் அகல்வ துண்டு!
தெய்வமே என்றுன்னை அழைத்ததும் பறந்துவரச்
சிங்கார மயிலு முண்டு!
கோபத்தி னலன்று நீவந்து பழநிமலைக்
குன்றத்தில் நின்ற துண்டு!
கும்பிட்ட பக்தர்க்குச் செல்வத்தைக் கொடுத்துநீ
கோவணம் ஏற்ற துண்டு!
பாவத்தைத் தீர்க்கின்ற பரம்பொருள் உனையின்றிப்
பாரினில் யாரு முண்டோ?
பஞ்சாமிர்தத்தினில் அஞ்சாமல் குளிக்கின்ற
பழனிமலைத் தண்ட பாணி!

சிறுவயதில் உன்பெருமை தெரிந்திருந் தாலுன்னைச்
சேவித்து மகிழ்ந்தி ருப்பேன்!
தெரியாமல் செய்தபிழை யத்தனையும் மன்னிக்கத்
தேடிவந் தழுதி ருப்பேன்!
புரியாமல் எடுத்தவிப் பிறவிதனில் மங்கையரின்
போகத்தை அளந்திருந்தேன்
பொன்னேடும் பெண்ணேடும் வருமின்பம் போதுமெனப்
புரியாமல் வாழ்ந்தி ருந்தேன்!
திருநாளில் உனதுபுகழ் தெரிந்ததும் சஷ்டிவரும்
தினந்தோறும் விரதம்வைத்தேன்!
தித்திக்கும் முக்தியினைச் சித்திக்க வரம்வேண்டித்
தீந்தமிழில் பாடுகின்றேன்!
பருவத்தில் நான்செய்த பாவத்தை மன்னித்துப்
பாதையைக் காட்டு என்றேன்!
பஞ்சாமிர் தத்தினில் அஞ்சாமல் குளிக்கின்ற
பழனிமலைத் தண்ட பாணி!

# இவ்வாறு பேசுவது ஏன்?

புலவர்மணி-சித்தாந்த வித்தகர்-முரு, பழ. இரத்தினம் செட்டியார்

சிலப்பதிகாரத்தில் கண்ணகி கோவலனை நோக்கிப் ''போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்'' எனக் கூறுவது பலர்க்குக் குழப்பத்தை விளைவித்திருக்கிறது. அவள் பேச்சு இங்கிதமில்லாமல் அமைந் திருக்கிறதென அவர்கள் கருதுகின்றனர். இங்கே அவள் ''இவ்வாறு பேசுவது ஏன்?'' என்பதைப் பற்றிச் சிறிது சிந்திப்போம்.

கோவலன் சிலம்பு விலைபகரப் புறப்படுகிருன். அப்பொழுது கண்ணகியிடம் விடைபெற வருகிருன்.

''இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
சிறுமுது குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்
வழுவெனும் பாரேன் மாநகர் மருங்குஈண்டு
எழுகென எழுந்தாய் என்செய்தனை?''

என உளம் வருந்திப் பேசுகின்ருன்; கண்ணகியைத் தனியே விடுத்துச் செல்ல முடியாமல் கலங்கு கிருன்.

தாய் தந்தையரைப் பேணுதொழிந்தேன்; உனக்குத் தீமை செய்தேன்; நம்ஊரை விட்டு இங்கு வருவது குற்றம் என்பதையும் நான் சிந்திக்காமற்போய்விட்டேன். நான், 'புறப்படு'' என்று சொன்னவுடன் உடனே வந்துவிட்டாய்; நீ செய்த தியாகம் எத்தனை பெரியது' '- இவ்வாறு அவன் தன் பிழை எல்லாம் நினைத்துப் பேசுவது நெஞ்சை உருக்குகிறது.

கண்ணகி சொல்லும் விடை அதிர்ச்சியைத் தருகிறது

''அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை''

என அவள் பேச்சைத் துவங்குவது, ''உன்னால் நான் எல்லாப் பேற்றையும் இழந்தேன்'' என இடித்துச் சொல்வது போல் அமைகிறது.

''நும்பெருமகள் தன்னுெடும் பெரும்பெயர்த் தலைத்தாள்
மன்பெரும் சிறப்பின் மாநிதிக் கிழவன்
முந்தைநில்லா முனிவிகந்தனனு
அன்புளம் சிறந்தாங்கு அருள்மொழி அளைஇ
எற்பாராட்ட யானகத் தொளித்த
நோயும் துன்பமும் நொடிவது போலும்என்
வாயல் முறுவதற்கு அவர்உள்ளமும் வருந்தப்

போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்'' என அவள் சொல்வது கோவலன் முகத்தில் அறைவது போல இருக்கிறது. அவனே மிகவும் குழம்பிப் போய் நிற்கிருன். இந்த நேரத்தில் அவன் செய்த குற்றங்களை எல்லாம் எடுத்துக்காட்டலாமா? போற்ரு ஒழுக்கம் புரிந்த செயலைக் கண்டிக்க வேண்டிய சமயத்தில் எல்லாம் கண்டிக்காமல் இந்த இடத்தில் தாஞ கண்டிக்க வேண்டும்? ''தாய் தந்தையர் ஏவல் பிழைத்தேன் ' என அவனே வருந்திக் கூறும்போது, ''என் நிலை கண்டு நின் பெற்ருேர்கள் வருந்தப் போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்'' என இவளும் அவனையே திருப்பிச் சொல்வது வெறுப்பை விளைவிக்காதா?

''போற்ரு ஒழுக்கம் என்பது கோவலன் பரத்தை மாட்டுச் சென்ற செயலையே குறிக்கும். ''தாய் தந்தையரைப் பேணுத ஒழுக்கம்'' எனச் சிலர் பொருள் செய்ய முயல்வதுண்டு. ''முந்தை நில்லா முனிவிகந்தனனுய்'' —'நீர் வாராமையால் ஏற்பட்ட துன்பத்தை நான் உள்ளடக்கிக் கொண்டு புன்முறுவல் செய்ய அது கண்டு நின் பெற்ருேர்கள் வருந்தப் போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்'' எனக் கண்ணகி சொல்வதால் அது பரத்தை மாட்டு அவன் சென்றதையே குறித்து நிற்கும் என்பதைக் கூற வேண்டுவதில்லை.

கோவலன் தான் பரத்தை மாட்டுச் சென்றதைக் கண்ணகியிடம் நேரடியாகச் சொல்ல அஞ்சியே ''வறுமொழியாளரொடும் வம்பப்பரத்தரொடும் குறுமொழி கோட்டி'' எனத் தயங்கித் தயங்கிச் செ ல்கிருன். அப்படிப்பட்டவனிடம் வெளிப்படையாக ''நீர் போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்'' எனக் காரசாரமாகக் கற்புக்கரசியாகிய கண்ணகி மொழியலாமா? வருந்துவோர்க்கு ஆறுதல் சொல்ல வேண்டுவது அவள் கடமையாக இருக்க அதனை விடுத்து நெடுநாள் தன் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த உணர்ச்சிகளை எல்லாம் இப்பொழுது காட்டலாமா?

நான் அழைத்ததும் நீ வந்துவிட்டாயே? ''எனக் கழிவிரக்கத்தோடு பேசும் கணவனிடம்,

''யாவதும் மாற்ரு உள்ள வாழ்க்கையேன் ஆதலின்
ஏற்று எழுந்தனன்''— உம்முடைய சொல்லைச் சிறிதும் மாற்ற நினையாத வாழ்க்கை உடையேனுதலால் நீர் சொல்வதை உடன்பட்டு எழுந்தேன்'' எனக் கண்ணகி சொல்வது செருக்கு மிக்க பேச்சாகாதா?

கண்ணகி ஏன் இப்படி பேச வேண்டும்? இளங்கோ அவளை இங்கிதமில்லாமல் பேச வைப்பாரா? அஃது அவர் புலமைக்கு இழுக்காகாதா? அவள் இவ்வாறு பேசுவதற்குத் தக்க காரணம் இல்லாவிட்டால் இளங்கோவின் படைப்பாற்றலுக்கு அது வீழ்ச்சியாகவே முடியும்.

சிலம்பு விற்பதற்காகக் கணவன் தன்னிடம் விடை கேட்க வந்ததும் ஒரு பெரும் பயம் அவளைப் பிடித்துக் கொண்டது.

''ஊரோ புதிது; விலைமிக்க சிலம்பைத் தன்னந்தனியாக விற்கச் செல்கிருர்; அவருக்கு யாரும் தீங்கு செய்யாமல் இருக்க வேண்டும்? தெய்வபலம்— பெரியோர்களின் ஆசிபலம் இருந்தால் அவர் ஆபத்தின்றி திரும்பி வரலாம். அத்தகைய பலம் இல்லையே? என் செய்வது'' என்று அவள் நிலைகுலைகிருள். தன் உள்ளத்தில் தோன்றிய ஐயம் மேலிடக் கணவனிடம் பேசத் துவங்குகிருள்.

''அறவோர்க்களித்தல் அந்தணர் ஒம்பல் முதலிய அறங்களை நான் செய்திருந்தால் அறக் கடவுளின் துணை எனக்கு இருக்கும்; நானே அறபலத்தை இழந்திருக்கிறேனே? என் செய்வேன்'' என முதலில் அங்கலாய்க்கிருள்.

தாய் தந்தையர் ஆசிபலம் இருந்தால் அது பேருதவியாக இருக்கும்; நீரோ போற்ரு ஒழுக்கத்தால் அவர் உள்ளம் வருந்துமாறு நடந்து கொண்டு விட்டீர். இதனல் பெரியோர்களின் ஆசிபலமும் நமக்கு இல்லை.

நீர் வரும் பொழுது பெற்ரேர்களிடம் சொல்லிக் கொண்டு வந்திருந்தால் அவர்கள் வருத்தம் நீங்கி ஆசி கூறி அனுப்பியிருப்பார்கள். போற்ரு ஒழுக்கம் காரணமாக அவர்களை நீர் பார்க்க அஞ்சி வந்து விட்டீர்; நாளுவது மாமன் மாமியாரிடம் சொல்லிக் கொண்டு வந்திருந்தால் அவர்கள் ஆசி கூறியிருப்பார்கள் யாருக்கும் சொல்லாமல் புறப்பட வேண்டும் என்று நீர் கட்டளை இட்டு விட்டீர், உமது சொல்லைத் தட்டாமல் வாழும் வாழ்க்கையுடையேனுதலால் 'எழுக'' என்று சொன்னவுடன் அதனை ஏற்று வந்து விட்டேன், இப்பொழுது என் உள்ளம் கலங்குகிறது: என்ன செய்வதென்று புரியவில்லை'?

—இந்த நோக்கில் தான் நாம் கண்ணகியின் பேச்சைப் பொருள் செய்ய வேண்டும் இந்தப் பின்னணியை மனத்திற் கொண்டே இளங்கோ இப்பகுதியினை அமைத்திருக்கிருர் சந்தர்ப்பம், சூழ்நிலை, முன்பின் நிகழ்ச்சிகள் முதலியவற்றை ட்கிடையாக வைத்தே புலவர் பெருமக்கள் இலக்கியத்தினைப் படைப்பார்கள் என்பதை நாம் மறக்கக்கூடாது. திருக்குறள் காமத்துப்பாலில், தகை ஒணங்குறுத்தல் அதிகாரத்தில்,

ஒண்ணுதற்கோ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணுரும் உட்கும் என்பீடு''

— ''போர்க்களத்திற்கு வாராத பகைவரும் வந்தவர் சொல்லக் கேட்டு அஞ்சுகின்ற என் மனவலியும் உடல்வலியும் இப்பெண்ணின் நுதலுக்கு உடைந்து விட்டனவே'' எனத் தலைவன் கூறுவதாக ஒரு குறள் அமைந்திருக்கிறது. இதில் ''என் பீடு'' எனத் தலைவன் சொல்வது தற்புகழ்ச்சி போலத் தோன்றுகிறது தன்னைப் புகழ்தல் தலைவன் இலக்கணந்திற்குப் பொருந்தாது. இங்கே ''தலைவன் தன்னைப் புகழலாமா?'' என ஒரு விஞவைப் பரிமேலழகர் தம் உரைக்குள் எழுப்புகிருர். கழிந்ததற்கு இரங்காமல் தற்புகழ்தல் சான்ருயிற்று'' என அவ்விஞவிற்கு அவர் விடை பகர்கிருர்.

கண்ணகியின் பேச்சும் கழிந்ததற்கு இரங்கல் ஆதலின், ''காரசாரம், கண்டனம், இங்கித மின்மை. செருக்கு'' முதலிய குற்றங்களினின்றும் நீங்கி நெகிழ்ச்சி பெற்று விளங்குகிறதை அறிதல் வேண்டும்.

''நான் மறைத்தும் என் சிரிப்பின் உட்கிடையை நுண்ணிய உணர்வினராகிய நின் பெற்ரேர்கள் அறிந்து வருந்துவதற்கேதுவாய் அப்போற்ரு ஒழுக்கம் அமைந்து விட்டது. இதனுல் அவர்கள் வருத்தம் மிக ஆழமானதென்பது புலனுகிறது ஆழமான வருத்தம் அவர்கள் ஆசியை நாம் பெற முடியாமற் செய்து விட்டதே'' என்னும் இரக்க குறிப்பில்தான், ''போற்ரு ஒழுக்கம்'' பற்றிக் கண்ணகி பேசுகிருள். சொல்லிக் கொள்ளாமல் வந்தது அவள் உள்ளத்தைப் பெரிதும் பாதித்திருக்கிறதென்பது ''எழுகென ஏற்று எழுந்தேன்'' எனஅவள் சொல்லும்விரைவுக்குறிப்பால் 'புலனுகிறது.

கண்ணகியின் பேச்சைக் கோவலன் புரிந்து கொள்ளுகிருன். அதனுல் தான் அவன் நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும் பேய கற்பும் பெருந்துணையாக என்னேடு போந்தீங்கு என் துயர் களைந்த, பொன்னே, கொடியே, புனைபூங்ணிகாதாய்'' எனக்கூறி அவளைத் தேற்று கிருன். ''பெரியோர்களின் ஆசிபலம் இல்லாவிட்டாலும் உன் கற்பையே பெருந்துணையாகக் கொண்டு என்னுடன் வந்திருக்கிருய். கற்புத்துணையிருக்கும் போது, வேறு துணை இல்லையே என நீ கவலைப்பட வேண்டாம்'' என்பதே அவன்கூறிய ஆறுதல் மொழியின்கருத்தாகும். கண்ணகியின் பேச்சைக் கழிவிரக்கப் பேச்சாகவே கோவலன் கருதியிருக்கிருன் என்பது இதிலிருந்து தெரிகிறது. பார்வைக்குக் கடுமையாகத் தோன்றினுலும் சூழ்நிலையை நோக்கினுல் கணவனின் பாதுகாப்பை நினைந்து பேரிரக்கத்தோடு கண்ணகி பேசியிருக்கிருள் என்பது தெளிவாகப் புலனுகும். ❋

# TAMIL CULTURE IN MALAYSIA

**O.RM.M.SP.SV.AN. ANNAMALAI CHETTIAR**
Founder, Sree Sevugan Annamalai College, Devakottai.

Malaysia is one of the beautiful countries of the world. Penang, an island belonging to this country is called the Pearl of the Orient. It is a lovely island with a pleasant climate and an excellent beach, an ideal place for a happy and settled retired life. Such a beautiful country has many shades of culture which are common to India in general and Tamil Nadu in particular.

The Malays are a colourful people with an aesthetic sense, meeting life as it offers and trying to make the best out of it to enjoy the same as much as possibie. They are a clean people with pleasant manners.

Historians divide Malaysian history into six distinct periods: a) The Hindu Period b) The Malay Empire in Malacca c) The Portuguese Period d) The Dutch Period e) The Engish Period f) The independent Malaysia under a Soverign Sultan.

We have to deal with the Hindu Period to know the origin of Hindu culture in general and Tamil culture in particular in Malaysia.

Some eminent historians come to the conclusion that the Indian contact with Malaysia came into existence even before the Christian era. That is, even two thousand years ago, the Tamils came into contact with Malaysia and there existed a flourising trade between these two countries from time immemorial. Out of these two thousand years of contact, the Hindu and Buddhist periods lasted for one thousand years. The Hindu kings of Malaysia had matrimonial alliances with the Hindu kings of Tamil Nadu and Kalinga. During the second half of one thousand years, Tamil Muslim traders introduced Islam into Malaysia and there were marriage alliances between Tamil Muslim traders introduced Islam into Malaysia and there were marriage alliances between Tamil Muslim traders and the Royal Families of Malaysia who had by than embraced Muslim faith

The Hindu traders besides taking cargo in their ships brought Brahmin priests also to Malaysia so that they could build Hindu temples in Malaysia where these Brahmin priests could officiate in the Temple services. These Brahmin priests indroduced the Hindu calendar, Ramayana, Mahabaratha and other mythologies in Malaysia. Thus, Tamil words relating to trade and politics and Sanskrit words relating to religion, culture etc. got freely mixed with Malay dialect. கப்பல், கடை, குளம், கோட்டை, கட்டில் etc. are the Tamil words in the Malay language. ராஜா, ஸ்திரி. பரமேஸ்வரன், பரமேஸ்வரி, மந்திரி, ஆசிரமம், குரு, பயம் etc. are some of the Sanskrit in Malay language.

The recorded historical Hindu period commences from A. D. 400 to 1600. The historians have recorded that the Indian ships were well built and large and they could transport 600 passengers with a heavy load of cargo at a time. What a great achievement in those days ! Moreover, these records reveal that the ships were from the Chola country. Since Malays were all Hindus in those ancient days, they came to India on pilgrimage to the holy places in India and they were familiar with the name of Nagapattinam, an important sea port in those days. Among the various orders of Hinduism, the Saivate order was more popular. The king was called Parameswara and the Queen was called Parameswari. Even now, though the king is a Muslim, the Queen is called parameswari and this word is added to her Muslim name.

Langkasuka the Hindu Kingdom was established in 502 A D. The King and his subjects resembled Indians and their culture was hundred percent Indian. The common man wore only Dhoti and an upper cloth. The King and the nobles wore silk Dhoti and Shawl and wore gold ear-rings and bangles. The King went on a procession in elephant which was ornamentally decorated. There were a number of banners on the processions and there was a colourful and picturesque march of soldiers in uniform armed with spears.

The Langkasuka dynasty lasted for many centuries and Rajendra Chola I called this country Ilangasukam (இலங்காசுகம்) in his inscription in Tanjore. This inscription is in Tamil. Cholas called Kedah as Kadaram which is also mentioned in many Tamil classical poems. After the Hindu period, Buddhism became the ruling religion in Malaysia. A Malaysian King built a Buddhist Vihara in Nagapattinam for which the Chola King gave a gift of one villiage.

After the Langkasuka Kingdom Sri, Vijaya Kindom came to the prominence. A Sri Vijaya King founded a Buddhist Sanctuary in 775 A. D. in Nalanda, the Buddhist University of learning in India. Chu'amanivarmadeva (1003 A.D ) and his son Sri Mara Vijoyothunga Varman of the Sri Vijaya Kingdom of Java were the allies of the Chola King Rajaraja I. Under these Sri Vijaya Kings who had the support of Chola Kings Rajaraja I and Rajendra I, Java and Kedah (Kadaram) came to the prominence

In 1017 A D., Rajendra Chola invaded the Sri Vijaya Kingdom and brought Nicobar (அந்தமான்) Langasuka (இலங்காசுகம்), Ta'ai Thakolam (தலைத்தக்கோலம்), Tambralinga (தாம்பிர லிங்கம்) etc. under his control The power and prestige of Rajendra Cho'a I spread far and wide in the Far East. The Chola Kings had sent an envoy to China also. It is noteworthy that the names of the towns in Malaysia in those days were in Tamil. Malaiyur (மலையூர்) was the name of the port in Sri Vijaya Kingdom. Sir R.O Winstedt the reputed historian calls 'Kedah' only as 'Kadaram' (கடாரம்) in his book on the history of Malaya. Tambralinga (தாம்பிரலிங்கம்) was the name of another place.

Ramayana and Mahabartha were very popular in those days. In Kelantan, even to-day, the shadow plays of Ramayana and the stories on Siva are very popular among the Malays.

The famous among the Hindu Kings of Malaysia was Parameswara.

If we trace his ancestry, we are astonished to note that he has Chola blood in his veins. The famous Chola King Rajendra I had a son by name Vira Rajendra who became a Buddhist. He called himself Niti Uthama. He founded Singapore in 1068. Then came Nila Uthama who is himself a descendent of a south Indian Royal family. He called himself Sri Tribuvana who married a South Indian Princess His descendent was Parameswara who founded Malacca Thus the founders of Singapore and Malacca were the decendents of the ruling families of South India, most probably the 'Chola Kings The Chola Kings conquered Kedah (Kadaram) also.

Thus the fame and power of the Chola Kings were felt throughout East Asia upto China. Even now a street in Penang is named 'Chulia Street' (Chola became Chulia in colloquial Malay) in recognition of the ancient Chola Kings. Sir Richard Winstedt, an authority on Malaysian history, has conclusively proved that the Coromandal represents Chola Mandalam (சோழ மண்டலம்) He argues that in many of the Far Eastern languages, the pronunciation for 'ழ' is 'Ra' So 'Chola' became Chora;- 'Mandalom' became Mandal'- thus the new word 'Choramandal' was formed which in later years became Coromandal. In almost all the Malaysian records 'சோழமண்டலம்' is refered to as 'Coromandal'.

The famous Malay King Parameswara who founded Malacca in his 72nd year became a Muslim by marring a princess from a Muslim Royalty. Sir Winstedt gives the following reason for the decline of Hinduism. Tantric form of Hinduism was widely followed in later years and the misguided people were shocked by the unimaginable orgies of this form of Hindu worship. This paved the way for the spreading of Islam which preached a Formless God and fundamental Codes of Ethics. It is interesting to note that Islam was brought into Malaysia first by Tamil Muslim traders.

These Tamil Muslim Traders had matrimonial alliances with Malay Royalty and continued to spread the basic Tamil culture not connected with Hindu religion and thus the Tamil spirit was kept alive, These Tamil Muslims on many occations, occupied the post of 'Bendaharas' (Prime Ministers) and served the Malay Rulers.

d' Albuquerque, the founder of Portugues Kingdom in Malaysia says in his commentaries that in 1510 A.D., the richest trader in Malacca was a Tamil by name Raja Mudaliar. d' Albuquerque is not an ordinary Portuguese. He was the founder of portuguese Kingdom in Malacca So his words carry weight. He also says in his commentaries that a Tamil trader by name Naina Chetty settled the wa between the Portuguese and the Malay King d' Albuquerque rewarded Naina Chetty by making him an important officer in the Portuguese Government of Malacca. Malays and Moors refused to obey the orders of Naina Chetty, since he was not of Royal blood. So he did not enjoy the full confidence of tha Malays and he committed suicide in 1515 A.D.

d' Albuquerque has recorded in his 'Commentaries' that the Indian cloth exported from Pulicot and Mailapore were in great demand in Malaysia The

English traders who came later to Malaysia in the 17th Century felt that they could not compete in cloth trade with these Pulicot Merchants. Incidentally the Pulicot cloth is nothing but the present-day 'Palayakot Lungis' manufactured by the Tamil weavers who some times have the title 'Mudaliars'. In cloth business they seem to have been kings in those days i.e. from 14th century

d' Albuque has also recorded that some traders by name 'Chettiars' were very rich and they came to Malaysia from Chola Mandalam (Probably he means Poompuhar) and they wore cotton cloth below the waist and were with big bellies! They were bare above the waists. They lived in tiled houses in Malacca which was considered to be a status symbol in those ancient days.

This Portuguese adventurer should have been a very keen observer. He has recorded this in the 14th century. How interestingly this pen picture of Chettiars coincide with the actual form of Chettiars of the 20th century, though they clothe themselves above the waist also!

He has recorded that Moors (the Muslims of Malabar) also were very great merchants. Gujarathy merchants also had trade connections with Malaya.

So we come to the conclusion that Mudaliars, Chettiars, Moors from South India and Gujarathies from North India were very rich mercantile communities owning big ships and they flourished in the export-import business in those ancient periods.

We saw that Mailapur (Madras) was a trading centre for exporting cloth to Malaysia. This gives us an insight into the life of our beloved Saint Thiruvalluvar. Valluvar, according to some scholars was born in Mylapore in weaver's community. When we now have a historic evidence from the records of the Portuguese adventurer d' Albuquerque that cloth weaving was a flourishing trade in Mylapore and that even the European weavers could not compete with them, we may safely conclude that Thiru valluvar was born in a high caste weaver community in Mylapore.

So far we discussed the Golden period of the Tamils and their adventure in the Far Eastern Countries from first century A.D. to the 15th century A.D. The influence of the Tamils and their trade began to decline later. When the English conquered Malaysia, most of the Tamils were recruited only as indented labourers to work in the European owned plantations. Still there are a good number of educated Tamils practising as Lawyers Doctors and many are in Govt. Services. There are two Tamil Ministers in the Cabinet Chettiars, Sindhis, and a few other Indian Communities form the mercantile class among the Indians settled in Malaysia. McNair, an English author has observed that the Tamil traders are shrewd and clever in their business and monetary transactions and the Tamils who belong to the labour class are also decent people. Buy gone are the days when they were the makers of history.

But, we can be proud of the following observations of Sir Richard Winstedt, a noted authority on Malaysian affairs.

"The Malays have experienced many foreign influences, imcomparably the greatest being that from India, which gave them three religions, (Hindu,

Buddhist and Islam), a new magic and medicine, law Hindu and Islam, the arts of sculpture, gold and silver work and silk weaving, two alphabets and a secular and religious literature. The Sanskrit contributed words for abstract concepts and Tamil and Hindustani contributed words for trade and other secular objects".


**Books consulted :**

i) 'A History of Malaya' by Sir Richard winstedt

ii) 'Perak and the Malays' by J.F.A. McNair

iii) 'Malaysian History' by Swami Sathyananda.

iv) 'Sejara Melayu'-Malay literature.


**NOTE** :- Portuguese, English and Malay historians spell Tamil proper nouns in their own ways. Thus 'Parameswari' is spelt 'Permaisuri; Mudaliar' is spelt 'Mudelier'; 'Chetti' is spelt 'Chettiji' or 'Chatau' Chola is spelt 'Chula' or 'Chulia'. Here in this article all these Proper Nouns are spelt as they are done in Tamil Nadu.

---

# பறந்தே மயிலில் வந்திடுவாய்

(இராம வே. சேதுராமன்)

ஐயா ஐயா முருகையா
அழகிய மயிலில் வருவாயே
பையப் பைய வருவாயோ
பறந்து மயிலில் வருவாயோ

நீயே வருவா யென்றிருந்தேன்
நெஞ்சம் ஏனோ இரங்கவில்லை
மாயவன் 'மருகன் நீயன்றோ?
மாபெரும் சிவனின் மகனன்றோ?

உன்னை எனக்குத் தெரியாதா
உமையவள் மகனும் நீதானே!
இன்னும் என்ன தாமதமோ
இன்றே வருவாய் முருகையா

பையப் பைய வந்திட்டால்
பார்த்துப் பார்த்து ஏங்கிடுவேன்
பைய வந்திட நினையாமல்
பறந்தே மயிலில் வந்திடுவாய்

கையும் காலும் ஓயாமுன்
கண்ணின் ஒளியும் மங்காமுன்
ஐயா முருகா வந்திடுவாய்
அருளைத் தந்தே காத்திடுவாய்

# இன்பமாகும்

(பொற்கிழிக் கவிஞர் ச. சவகர்லால்)
ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரி, திருப்பத்தூர் !.

ஆசையாம் வெள்ளத் துள்ளே
அழுந்தியே மூழ்கி வாழ்வில்
ஓசையே இன்றிச் சாகும்
உயிரினம் முருகன் பேரில்
ஆசையை வைத்தா லுய்யும்
அவனடி தெப்ப மாகும்
தூசுகள் சுடர்பெற் றேங்கும்
தூயவன் ஒளிபட் டாலே.

எங்கெலாம் மலைக ளுண்டோ
இணையிலா அழகு கொஞ்ச
அங்கெலாம் முருகன் நிற்பான்
அருளினை மக்கட் கீவான்
பொங்கிடு முள்ள மென்றும்
புதுமல ராக வள்ளல்
தங்கிய மலையைச் சேர்ந்து
தூயவன் பாதங் கூடும்.

முருகனை எண்ணி னாலே
முடிந்திடும் செயல்க ளெல்லாம்
ஒருமுறை சொன்னாற் போதும்
உளமதோ எதிரொ லிக்கும்
மறுமுறை மீண்டும் மீண்டும்
மனதினில் அவன்பேர் நிற்கும்
முருகனை யன்றி நம்மை
மீட்பவர் யாரே உள்ளார் !

காவடி தூக்கித் தூக்கிக்
கடுமையாய்த் தோள்கள் நோகும்
சேவடி நாடிச் சூட்டில்
சிற்றடி புண்ணா யாகும்
பூவினை நெருப்பி னுள்ளே
போட்டது போலக் கால்கள்
பாவிட நோகும் போதும்
பண்புடன் உளம்சி ரிக்கும்

புண்ணினை யாரே காண்பார் ?
புதுக்புதுக் கொப்பு ளங்கள்
கண்திறந் தழுத போதும்
காலினை யார்தான் காண்பார் ?
வண்ணமா மயில்மீ தேறி
வருகிற முருகன் பேரைச்
சொன்னஅக் கணமே வாழ்வில்
துன்பமெலாம் இன்ப மாகும்.

ச. சவகர்லால்
5. சாத்தப்ப விலாஸ் செக்காலை
காரைக்குடி-2.

உ
சிவமயம்

# நகர வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

## நகர வயிரவன்பட்டி.

## கலை நிகழ்ச்சிகள்

நாள் : 29—1—1982 வெள்ளிக்கிழமை

மாலை 5 மணி : **கதை அரங்கம்**

மதுரை ''சைவமணி'' ''சிவநெறிச் செம்மல்''
புலவர் நீ. சுந்தரராமன் குழுவினர்
''செந்தமிழ்ச் சுந்தரர்'' இசைக்கதை

நாள் : 30—1—1982 சனிக்கிழமை

காலை 10 மணி **பேருரை அரங்கம்**

விரையாச்சிலை பேரறிஞர், சைவசித்தாந்த வித்தகர்
முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள்
''முருகன் பெருமை'' பேருரை

மாலை 5 மணி **கவியரங்கம்**

பொருள் : தமிழ் இலக்கியம் கண்ட தனவணிகர்
தலைவர் : டாக்டர் தமிழண்ணல் M. A. Ph.D.,
தமிழ்த்துறைத் தலைவர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

**பாடப்பெறுவோர்:**

''பாடுவார்'' முத்தப்ப செட்டியார்

''வித்துவச்சிகாமணி''
சிந்நயச் செட்டியார்

''பண்டிதமணி'' கதிரேசச் செட்டியார்

''தமிழ்க்கடல்'' ராய. சொ

''குமரன்'' சொ. முருகப்பா

''பாலகவி'' இராமனுதன் செட்டியார்

''கம்பனடிப்பொடி'' சா. கணேசன்

துணைவேந்தர் டாக்டர்
வ. சுப. மாணிக்கம்

'கவியரசு'' கண்ணதாசன்

**பாடுவோர்:**

புலவர் சோம. சிவப்பிரகாசம் M. A.

''கவிஞர்கோ'' பொற்கிழிக்கவிஞர்
அரு. சோமசுந்தரம் M.A.B.T.,

''பொற்கிழிக்கவிஞர்''
சொ. சொ. மீ. சுந்தரம், M.Com.

கவிஞர் அழ. அண்ணாமலை M.A.

''சிந்தனைக் கவிஞர்''
பெரி. சிவனடியான் M.A.B.T.,

''சிவநெறிக்கவிஞர்''
இராகவன்முத்து. B Sc., C.A.I.I.B.

மக்கள் கவிஞர் அரு. நாகப்பன்

கவிஞர் சுப. கதிரேசன், M.A.

டாக்டர் அர. சிங்காரவடிவேலன்,
M.A., Ph.D.

இரவு 9 மணி **இன்னிசை அரங்கம்**
சென்னை ''கந்தர்வகான இசைமாமணி''
வீரமணி ராதா குழுவினர் இசைப்பொழிவு

நாள்: 31—1—1982 ஞாயிற்றுக்கிழமை

காலை 10 மணி **பெருவங்கிய அரங்கம்**
முத்துப்பேட்டை சண்முகசுந்தரம் குழுவினர் &
செம்பனார்கோயில் S. R. G. K. கல்யாணசுந்தரம்
S. R. D. G. ராஜேந்திரன் குழுவினர் நாதசுரம்

பிற்பகல் 2 மணி **வில்லிசை அரங்கம்**
செவல்குளம் ''கலைமாமணி'' ''வில்லிசைச் செம்மல்''
சி. தங்கையா குழுவினர் ''கந்தபுராணம்'' வில்லுப்பாட்டு

மாலை 5 மணி **பட்டிமன்றம்**

வரவேற்புரை: ஆவி. நா. நாச்சியப்பசெட்டியார், ''எவர்பிரைட்''

தொடக்க உரை: திருமிகு V.N. சிதம்பரம் அவர்கள்
அருள்மிகு மீனாட்சி அம்மன் கோயில்
அறங்காவலர் குழுத்தலைவர்

நடுவர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்

பொருள்: நகரத்தார்களிடம் மிகச்சிறப்பாகக் காணப்பெறுவது

| சைவப்பற்றே | தமிழ்ப்பற்றே |
|---|---|
| ''முத்தமிழ்மணி'' கதி. சுந்தரம் | திரு கண. சிற்சபேசன் M.A. |
| புலவர் நா. மீனவன் M.A. | திரு வ. தேனப்பன் M.A. |
| திருமதி உமையாள்முத்து B.A B.L. | செல்வி கவிதாராணி |
| டாக்டர் கரு. முத்தையா | திரு சொ. சொ. மீ. சுந்தரம், M.Com. |

இரவு 8 மணி **ஆடல் அரங்கம்**
குமாரி ஆஷா, குமாரி பிரியா, செல்வி ரேகா, குழுவினர்
பரதநாட்டியம்

இரவு 10 மணி **இன்னிசைஅரங்கம்**
பாண்டிச்சேரி குமாரி S. வைதேகி குழுவினர் இன்னிசை

இரவு 12 மணி **சுவாமி திருவீதி உலா**
நாதசுரம், திருமுறைப்பாராயணம், கரகம், பொய்க்கால் குதிரை முதலியன.

கலைநிகழ்ச்சிகள் அமைப்பு, பொறுப்பு, வரவேற்பு:
ஆவி. நா. நாச்சியப்ப செட்டியார் ''எவர்பிரைட்''

பாடப்பெறுவர் : **வித்வத்சிகாமணி சிந்நயச்செட்டியார்**

---

பாடுபவர் : ''கவிஞர்கோ'' ''பொற்கிழிக் கவிஞர்''
**அரு. சோமசுந்தரன்**

## சிந்நய்யா உருவம்

சிவப்பழமாய் இருக்கின்ற சிறந்த தோற்றம்
சிவப்புநிற மேனியிலே பஞ்ச கச்சம்
உவப்பான மார்பினிலே உருத்தி ராட்சம்
உத்தரியம் இருபுறமும் தவழும் கோலம்
தவப்பயனுய் வந்ததிருக் கரங்கள் தம்மில்
தமிழ்ச்சுவடி ; நெற்றியிலே இலங்கும் நீறு,
தவப்புதல்வர் சிந்நய்யச் செட்டி யாரின்
தாளிரண்டும் கம்பளமே தாங்கு தம்மா !

(கம்பளம் = இரத்தினக் கம்பளம்)

கடந்ததொரு நூற்றுண்டில் தமிழ்க்கோர் நாலாம்
கலைச்சங்கம் மதுரையிலே காண வேண்டி
இடம்பிடித்துப் பொறுமையுடன் தோற்று வித்த
எழிற்பாண்டித் துரைமன்னன் அருகிருந்தே
மடம்பயின்ற மக்களுக்குத் தமிழை ஊட்டி
மகத்தான புலவரெலாம் போற்றிக் காத்துத்
தடம்பதித்த சிந்நய்யச் செட்டி யாரின்
தமிழ்பதித்த கல்வெட்டுத் தோன்ற வேண்டும்.

ஆயிரத்தி எண்ணூற்றி ஐம்பத் தைந்தில்
அருந்தேவ கோட்டையிலே மேல வீட்டில்
தாயிருந்தாள் லெட்சுமியாம் ஆச்சிக் கிந்தத்
தமிழ்மணியாம் சிந்நய்யா நாலாம்பிள்ளை.
பாயிருந்த கடைக்குட்டி வாயால் அந்தப்
பழந்தாயும் பால்மொழியைக் கேட்ட தாலே
பாயிரந்தாள் லெட்சுமியாம் தாயே அன்றே !
பாயிரமாய் நான்வருதல் பொருத்த மாமோ?

(பாயிரந்தாள் = பா + இரந்தாள்
பாயிரம் + தாள்)

நகரத்தார் வரலாற்றை முதலில் அன்றே
நயமாக எழுதியவன் சிந்நை யாதான்.
புகலத்தான் இனியதிரு வெற்றி யூரின்
புராணத்தை எழுதியவன் ; முருக னுக்குச்
சிகரமெனும் நம்குன்றக் குடியைப் பற்றிச்
சிறிய ''மயின் மலைப்பிள்ளைத் தமிழைத் தந்தான்
திகடசக்க ரத்தானும் தேவை வாழும்
சீர்சிலம்பைப் பதிற்றுப்பத் தந்தா திக்கும்

(திருவெற்றியூர்ப்புராணம் எழுதினர் வயிரவன்கோவில் புராணத்தைப் பதிப்பித்தார். தேவை = தேவகோட்டை)

அருமைமிகும் இராமேசத் ''தேவைத் திரிபு
அந்ாதி'' தனக்கும் ஈ டென்றும் உண்டோ?
திருவண்ணு மலை ''அருணைச் சிலேடை வெண்பா
மாலைப்''பா நூற்றுக்கும் மாற்று முண்டோ?
கருணைமிகும் காசியிலே பாடி வைத்த
''காசியமக அந்தாதிக்'' கிணையு முண்டோ?
பெருமைமிகும் கண்டனூர் மீனுட் சிக்குப்
பிரியமுடன் பாடியதும் பதிக மன்றோ!
(தேவை = இராமேசுவரம்)

''கும்பாபி ஷேகத்தின் மகிமை'' பற்றிக்
குணமாக நூலெழுதிப் பதிப்பித் தாரே.
அம்பாளின் கருணையினல் வெளிமுத் திக்கும்
அழகான புராணத்தைப் பாடி வைத்தார்.
செம்பாகம் பெற்றவளாம் மீனுட் சிக்குச்
சிந்நையா தானடிமை ஆன தாலே
தம்பாவால் அர்ச்சித்தார்; பலிக்கும் வாக்கால்
தன்னிகரில் ஆசுகவி எனும்பேர் பெற்ருர்.

வெளிமுத்தி எனும் ஊர்க்குச் சென்ற போது
வீரமுடன் ஊரார்கள் அவரைச் சுற்றி
வழியடைத்தே, ''ஆசுகவி நீரே யானல்
வறண்டிருக்கும் ஆண்பனையைக் காய்க்க வைத்தால்
வழிவிடுவோம்'' என்ருர்கள். சிந்நை யாதான்
வாய்திறந்து பாடியதும் பனையும் பூத்துத்
தெளிவாகக் காய்த்துடனே பழுத்து வீழ்ந்து
திருவாளன் புகழ்பரப்பி இருந்த தன்றோ!
(''பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனம் துண்டமே'' என்று பாடி முடித்தார். ஆண்பனை பூத்துக் காய்த்துப் பழுத்தது)
மாண்புடைய பத்தொன்பான் நூற்ருண் டுக்கு

மகாவித்வான் மீனுட்சி சுந்த ரற்குக்
காண்பரிய வன்ருெண்டர் எனும்பேர் பெற்ற
கவிநாரா யணன்சீடன் ஆவான் அந்தக்
காண்பரிய வன்ருெண்டர் நாவன் னுவின்
கண்ணுன சீடன்தான் சிந்நை யாவே.
ஆண்பனையை மணக்கவைத்த சிந்நை யாவை
அனைவருமே பூமணமாய்ப் பொலிய வைத்தார்.
(காண்பரிய = வன்ருெண்டர்க்குக் கண் தெரியாது)

புகழ்காரைக் குடிபோற்றும் புலவ ரான
பூசகர்சொக் கலிங்கய்யா, புலியாம் பிச்சு,
திகழ்சேது பதிநாடு தந்த செல்வம்
திரு. ரா. ரா. சிந்நையன் தந்த சீடர்.
முகவையிலே பெரும்புலவர் மு. ரா. அன்று

முத்தமிழை ரா. ரா. பால் கற்கும் போது
தகவாகச் சிந்நையன் பாடல் எல்லாம்
தமிழ்ப்பாடத் திட்டத்தில் இருந்த தன்றே !

(சொக்கலிங்கஜயா, சிலேடைப்புலி பிச்சுவையர், ரா. ராகவய்யங்கார், தேவகோட்டை தி. வகை கயிலாய விநாயகபுராணம் பாடிய சுப்பிரமணியன் செட்டியார் ஆகியோர் சிந்நையாவின் சீடர்கள்)

கோயிலூர் ஆதீனம் சிந்நய் யாவின்
குணமறிந்து போற்றியதோர் குருபீ டம்காண் !
கோயிலூர் ஆதீனப் பத்தி ரங்கள்
குணமான சிந்நய்யா பேரால் அன்றே
நேயமுடன் அன்றைக்கே எழுதப் பெற்று
நிரந்தரமாய்க் காப்பாற்றப் பட்ட தென்றால்
போயவனை என்னவெனப் போற்று வேன்நான் ?
பொய்யில்லாப் புலவனவன் என்றால் உண்மை.

## அபிஷேகப்பிரிய : சிவ :

இறைவன் அபிஷேகத்தினால் உண்டாகும் பயன்

| | | | |
|---|---|---|---|
| 1. | நல்லெண்ணை | — | சுகம் |
| 2. | மாப்பொடி | — | கடன் நீக்கம் |
| 3. | மஞ்சள்பொடி | — | வசீகரம் |
| 4. | நெல்லிமுள்ளி | — | வியாதி நிவிருத்தி |
| 5. | சர்க்கரை | — | பகைவன் நீக்கம் |
| 6. | பஞ்சாமிருதம் | — | புஷ்டி |
| 7. | பால் | — | ஆயுள்விருத்தி |
| 8. | தயிர் | — | புத்திரப்பேறு |
| 9. | நெய் | — | அறிவு |
| 10. | தேன் | — | இராகவிருத்தி |
| 11. | கருப்பஞ்சாறு | — | வாக்குவன்மை |
| 12. | எலுமிச்சம்பழம் | — | சத்ருநாசம் |
| 13. | நாரத்தை | — | நேர்வழியாகசெல்லுதல் |
| 14. | இளநீர் | — | சமசீதோஷ்ணம் |
| 15. | சந்தனம் | — | இலக்ஷ்மீகடாக்ஷம் |
| 16. | ஸ்நபனம் | — | எல்லாவிதமான நன்மை அமைதி |

பாடப்பெறுபவர்: **"குமரன்" சொ. முருகப்பா**

பாடுபவர்: சிந்தனைக் கவிஞர் பெரி. சிவனடியான், எம்.ஏ., பி.டி.,

### விநாயகர் வணக்கம்

எண்ணங்கள் ஈடேற ஏற்றசெயல் வெற்றிபெற
நண்ணுகின்ற யாவும் நலஞ்சூழக்-கண்ணுதலான்
பெற்ற கணபதியே பேறுதர வல்லவனே
முற்றும் துணைவருவாய் முன்.

### தமிழ்த்தாய் வாழ்த்து

ஆளாக்கி வைத்த அருந்தமிழே! துன்பமெலாம்
தூளாக்கிப் போக்குகின்ற தூயவளே! — கேளாக்கி
வெற்றி தருபவளே! வீரத் திருமகளே!
மற்றென்ன சொல்வேன் மகிழ்ந்து.

### தலைவர் வணக்கம்

அருமைமிகு முருகப்பா! உன்னைப் பாட
அருகதையார்க் குண்டப்பா? இருந்தும் பாடி
உருகப்பா என்றென்னை உவந்த ழைத்தார்
உருகுகிறேன் தமிழாக; மெழுகாய் இல்லை
நெருப்பின்றி உருகாது மெழுகு, உன்னை
நினைத்தாலே நெஞ்சங்கள் உருகு தப்பா!
கருக்கொண்ட போதேநீ செட்டி நாட்டைக்
காப்பதென உருக்கொண்டு வந்தாய் அப்பா!

### இசைப் பாடல்

கவிமணியின் முதற்பாட்டே 'குமரன்' ஏட்டில்
கனிந்ததெனில் கடைக்குட்டி நாங்களெலாம்
செவிநுகரும் கனிகள்எனச் செய்தி தந்த
செட்டிமகன் தமிழ்ஏட்டை என்ன சொல்வேன்
புவிமெச்சும் தமிழறிஞர் பெட்ட கம்போல்
போற்றியதைக் காத்தார்கள், புகழ்சேர்த்தார்கள்
குவிந்துபல இதழ்வரினும், இற்றை நாளில்
''குமரன்'' போல் கொஞ்சுதமிழ் இதழ்ஒன்றுண்டா

இந்துமத அபிமான சங்கம் கண்டே
இறைநெறியை வளர்த்தாயே! இருபதிற்குள்
ஐந்தெழுத்தை ஓதுதற்குத் தீட்சை பெற்றே
அனுதினமும் காத்தாயே! கடவுட் பற்றில்
சந்தேகம் சிறிதளவும் கொண்டி டாமல்
சடங்குகளே தீங்கென்று சாற்றி னையே!

இந்தளிதம் பிரித்துணரும் சக்தி இன்றி
இன்றுவரை எத்தனைபேர் குழம்பு கின்ருர்?

செல்வவணி கர்குலத்தில் பிறந்திட் டாலும்
சீர்திருத்தப் புயலாக வீசி ஞயே!
சொல்வதெலாம் செயலாக்கிக் காட்டிஞயே!
தோள்வலியால் வெற்றிநிதம் ஈட்டி ஞயே!
சொல்வதற்கும் அஞ்சுகின்ற மறும ணத்தைத்
துணிந்தேற்று மாலைதனைச் சூட்டி ஞயே!
வல்லியைநீ மணங்கொண்டு, வீர பாண்டி
மைந்தனைநீ வழிவழியாய் வழங்கி ஞயே!

மாதர்மறு மணசங்கம் கண்ட சிங்கம்
மகளிரில்லம் தோற்றுவித்த மூசைத் தங்கம்
தாதர்நிலை மாறத்''தன வைசிய சங்கம்''
தளிர்த்ததிலே முருகப்பா முதன்மை அங்கம்
ஆதரவில் லாஆடு கோழி பங்கம்
ஆகியதைத் தடுத்ததிலும் அவரே சிங்கம்
மோதல்வரும் எனஅஞ்சி முடங்கி டாமல்
முழங்கியபோர்ப் புரட்சியிலே அவரோ வங்கம்

யாழிசையில் வல்லுநராம் விபுலா னந்தர்
நல்லதமிழ்ப் பேராசான் சேதுப் பிள்ளை
ஏழிசைக்கும் ஏற்றவகைப் பாக்கள் தந்த
எளியதமிழ்க் கவிமணியார், பி.ஸ்ரீ எல்லாம்
ஆழியெனத் தமிழுலகம் மதிக்க, நல்ல
ஆதரவு நல்கியவர் முருகப் பாதான்
பாழியற்கை அவர்களையே பிரித்த போதும்
பாடுகள நாயகராய் விளங்குகின்ருர்



பாடப்பெறுபவர் : **டாக்டர் வ. சுப. மாணிக்கம்**

---

பாடுபவர்: சுப. கதிரேசன், எம்.ஏ.,

ஆத்தாளாம் தெய்வானை அகநா னூறும்
அப்பச்சி மணிச்செட்டி புறநா னூறும்
கூதலுக்கு ஒன்றையிலே பிறந்த இன்பக்
குறுந்தொகையே மாணிக்கம் கொற்கை முத்து
நாதமெழும் பண்டிதநல் மணிக்கு வாய்த்த
நாக்கேதான் வ.சுப; சங்க காலச்
சீதனமாம் தொகைநூலை ஆய்ந்த மேதை
சிபார்சென்றால் சுட்டெரிக்கும் ஆண்பால் சீதை.

வந்திருந்தால் விடுமுறையில் சிப்பா வேட்டி
வழிநடைப்பேச் சுக்குச்சா ரங்க பாணி
சந்தியில்நாம் பார்த்தாலோ புன்ன கைப்பார்
சரளமாய்ப் பேசிவிட்டால் காசா கேட்போம்
சொந்தத்தில் மகிழ்வுந்தா? வாங்க வேண்டாம்
சுடுகின்ற காலுக்குச் செருப்பு வேண்டாம்
தொந்தரவாய்க் கருதுகிறார்; இவர்தான் எங்கள்
துணைவேந்தர்; காந்திக்கு மறுவாழ் வில்லம்.

கல்வெட்டு மனிதரென்பார்; ஒப்ப மாட்டேன்
கல்லெழுத்து வளைந்திருக்கும்; வளைய மாட்டார்
பல்செட்டு அறுபதிலும் குலைய வில்லை
பண்பாட்டில் இராமபிரான் வீட்டு முல்லை
இல்லார்க்கும் உள்ளார்க்கும் ஒன்றே நீதி
இவருக்கு இவர்நெஞ்சே பிரதி வாதி
இல்லறத்தில் கூடஅது பிசக வில்லை
இதில்மூன்று அதில்மூன்று ஆறு பிள்ளை.

அதிசயநல் மெழுகுவர்த்தி; கருத்த மேனி
அகந்தும்பை என்பதனால் சொல்ல வில்லை
அதிரசமாய்ப் பேசிஒளி பரப்பி நிற்பார்
அணுஅளவு கூடஅவர் உருக மாட்டார்
அதைக்கேட்போர் அப்படியே உருகிப் போவார்
அதனால்தான் அதிசயநல் மெழுகு வர்த்தி
கதிரேசன் சுட்டுவைத்த அதிரே சந்தான்
கருத்தாலும் இனிக்கிறதே; அதிச யந்தான்.

# கும்பாபிஷேகக் குழு உறுப்பினர்கள்

1 தலைவர்

பவ. ராம, குழந்தையன் செட்டியார்,
113, நுங்கம்பாக்கம் ஹைரோடு,
நுங்கம்பாக்கம்,
சென்னை—600 034.

2 துணைத் தலைவர்

ராம. ரங்கனுதன் செட்டியார்,
2, சரோஜினி தெரு,
சின்ன சொக்கிகுளம்,
மதுரை—625002

சா. பழ. பழனியப்ப செட்டியார்,
வையாபுரி ரோடு,
வலையபட்டி 622 411.

4 செயலாளர்

ராம. ராமனுதன் செட்டியார்,
2A, சரோஜினி ரோடு,
சின்ன சொக்கி குளம்,
மதுரை—625 002.

5 துணைச்செயலாளர்

க தெ.க.அள. அ. திருநாவுக்கரசு செட்டியார்
சத்திய மூர்த்தி இல்லம்,
76, செக்காலை ரோடு,
காரைக்குடி—623 001

உறுப்பினர்கள்

6. குப. அரு. கிருஷ்ணன் செட்டியார்,
1/46 வினைதீர்த்தான் செட்டியார் வீதி,
பாகனேரி—623 558.

7. கரு. பழனியப்ப செட்டியார்,
20, அப்துல்கபார்கான் ரோடு,
சின்ன சொக்கிகுளம்,
மதுரை—625002

8. மு. க. பெரி. மு. வீரப்பசெட்டியார்,
ஸ்ரீ மீனுட்சி ஸ்டோர்,
தேவகோட்டை—623 302

9. வயி. ராம. நா. ரா. ராம். வயிரவன் செட்டியார்,
ராமவிலாஸ், மெயின் ரோடு,
கண்டனூர்—623104

10. நா. நா. சுவாமிநாதன் செட்டியார்,
6 நம்பர் வீதி, 13. சுப்ரமணியபுரம்,
காரைக்குடி—623 003.

11. ச. அண்ணுமலை செட்டியார்,
அண்ணுமலையார் வீதி,
அரிமளம்—622 201.

12. பி. கு. நா. பெரி. கும. பெரியகருப்பன் செட்டியார்,
கல்லூரி மெயின் ரோடு,
சுப்ரமணியபுரம்,
காரைக்குடி—6230 03.

13. நாக. ராம. ராமநாதன் செட்டியார்,
சாந்தி இல்லம்
16, மலேயா ஊரணி தெரு,
புதுப்பட்டி 622 408.

14. பழ. ராம. சி. ராமநாதன் செட்டியார்,
நற்சாந்துபட்டி—622 404.

15. நா நா. சேதுராமன் செட்டியார்,
பிள்ளையார் கோவில் தெரு,
குழிபிறை—622 402.

16. வயி. ராம. ப. பழனியப்ப செட்டியார்,
கண்டனூர்—623 104

17. எ. மு. சொக்கலிங்கம் செட்டியார்,
2, பிரகாச முதலி தெரு, தி. நகர்,
சென்னை—17.

18. என். சீனிவாசன், புரபஸர்,
ஆர். டி. எம். கல்லூரி,
சிவகெங்கை—623540.

19. ராம. லெ. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார்,
159, கீழமாசி வீதி,
மதுரை—625 001.

20. ஆ.வி.நா.நா. நாச்சியப்ப செட்டியார்,
எவர் பிரைட் எம்போரியம்,
15, மீனாட்சி கோவில் தெரு,
மதுரை—625001.

21. கரு. சி. அ. கருப்பன் செட்டியார்,
10, அப்துல்கபார்கான் ரோடு,
சின்ன சொக்கிகுளம்,
மதுரை—2.

22. ராம. வீர. பெரி. பஞ்சநதம் செட்டியார்,
32, மேலச்சித்திரை வீதி,
மதுரை—625001.

23. சொ. மாணிக்கம் செட்டியார்,
24 வயி. வீர. தெரு, நா. புதூர்,
காரைக்குடி.

24. பள. அ. பள. அண்ணமலை செட்டியார்,
சி. மெ. வீதி, காரைக்குடி.

25. நா. அ. நா. அண்ணமலை செட்டியார்,
பள்ளத்தூர்.

26. SP. தியாகராஜன்,
அ. மு. பெரி. வீடு, நடுஊர் 4வது வீதி,
கல்லல்.

27. வடு. கும. குமரப்ப செட்டியார்,
வலையபட்டி—622 411

28. கும. சா. அழகப்ப செட்டியார்,
அம்மன் சன்னதி வீதி,
கீழச்சிவல்பட்டி—623205.

29. பெரி. சி. லெட்சுமணன் செட்டியார்,
கடியாபட்டி.

30. கண. கு. கண்ணப்பா ஸ்ரீனிவாசன்,
6/24. நடுவீதி, நாட்டரசன் கோட்டை.

31. சுப. அண்ணமலை, முதல்வர்,
தியாகராஜர் கல்லூரி, மதுரை.



உ

சிவமயம்

## திருக்குட நன்னீராட்டு விழா மலர்க் குழு

1. திரு ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் — தலைவர்
2. திரு ராம. ரெங்கநாதன் செட்டியார் — துணைத்தலைவர்
3. திரு டாக்டர் சுப. அண்ணாமலை — பதிப்பாசிரியர்
4. திரு அரு. கிருஷ்ணன் செட்டியார்
5. திரு அ. கணபதி செட்டியார்
6. திரு சா. பழனியப்ப செட்டியார்
7. திரு க. தெ. க. அழ. அ. திருநாவுக்கரசு செட்டியார்
8. திரு இராம. இராமனுதன்
9. திரு ப. ராம. ப. சு. பழ. சுப்பிரமணியன் செட்டியார்.
10. திரு ராம. லெ. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார்
11. திரு கரு. சி. அ. கருப்பன் செட்டியார்
12. திரு ஆ. மு. ஆ. மலையாண்டி செட்டியார்
13. திரு சொ. சொ. மீ. சுந்தரம்
14. திரு பெரி. கும. பெரிய கருப்பன் செட்டியார்
15. திரு கண. சிற்சபேசன்
16. திரு கலைமகள் R. M. இராமனுதன்
17. திரு RM. சுப்பிரமணியன்
18. திரு M. V, M. முத்து.
19. திரு வானதி பதிப்பகம் N. திருநாவுக்கரசு
20. திரு எ. மு. சொக்கலிங்கம் செட்டியார்
21. திரு ராம. வீர. பெரி. பஞ்சநதம் செட்டியார்
22. திரு அரு. சோமசுந்தரம்

# வயிரவன் கோவில்
# நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கச்
# செயற்குழு உறுப்பினர்கள்

---

1. சித.சா. ரெ. சுப. சிதம்பரஞ் செட்டியார் (அரியக்குடி)
   வாணி பிலிம்ஸ்
   64, பட்டர் ஒர்க்ஸ் ரோடு
   திருச்சி 620-002.

2. குப. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார்
   1/46 வினை தீர்த்தான் செட்டியார் வீதி
   பாகனேரி-623 558.
   இராமனுதபுரம் மாவட்டம்

3. ஆவி.உல. மு.சோமசுந்தரம் செட்டியார்
   வள்ளியப்ப செட்டியார் வீதி
   பாகனேரி -623 558.
   இராமனுதபுரம் மாவட்டம்.

4. மு. க. பெரி. மு. வீரப்பச் செட்டியார்.
   ஸ்ரீ மீனுக்ஷி ஸ்டோர்.
   தேவகோட்டை - 623 302
   இராமனுதபுரம் மாவட்டம்

5. சுப. அண்ணுமலை, (தேவகோட்டை)
   முதல்வர்.
   தியாகராஜர் கல்லூரி.
   மதுரை 625 009.

6. கு. கரு. வெ. இராமநாதன் செட்டியார்
   20, செப்பவயலார் தெரு.
   தேவகோட்டை - 623 302

7. செ. வீர. யெ. கண. தியாகராஜன் செட்டியார்
   24, சேக்கப்ப செட்டியார் வீதி,
   தேவகோட்டை-623 302
   இராமனுதபுரம் மாவட்டம்.

8. சுப, உ. உடையப்ப செட்டியார்
   அரண்மனை சிறுவயல்-623 305
   கல்லல் (வழி)
   இராமனுதபுரம் மாவட்டம்

9. நாக. நா. சேதுராமன் செட்டியார்
   பிள்ளையார் கோவில் வீதி
   குளிபிரை - 622 402
   புதுக்கோட்டை மாவட்டம்

10. மு. பழ. மு. பழநியப்ப செட்டியார்
    விரையாச்சிலை. - 622 412
    புதுக்கோட்டை மாவட்டம்

11. சுப. சா. சாத்தப்ப செட்டியார்.
    விரையாச்சிலை - 622-412
    புதுக்கோட்டை மாவட்டம்.

12. கு. மு. ராம. சுப்பையா செட்டியார் (சொக்கலிங்கம் புதூர்)
    காதி சென்டர்
    TSNo. 4163 கீழ ராஜ வீதி
    புதுக்கோட்டை- 622 001.

13. சு. பழ சிங்காரம் செட்டியார்.
    உலகம்பட்டி - 622 410
    புதுக்கோட்டை மாவட்டம்

14. நா. ராம. நா. மாணிக்கம் செட்டியார்.
    நாச்சியாபுரம்-623 107
    இராமனுதபுரம் மாவட்டம்.

15. ராம. சித. ரெ. நடேசன் செட்டியார்.
    திருப்பதியார் வீடு,
    கொத்தமங்கலம்-623 105
    இராமனுதபுரம் மாவட்டம்.

16. கி. நா. கி. நாகப்ப செட்டியார்
    கோனுபட்டு - 622 503.
    புதுக்கோட்டை மாவட்டம்.

17. சித. அ. சித. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
    கோ. அழகாபுரி 623 106
    (வழி-கோட்டையூர்)
    இராமனுதபுரம் மாவட்டம்

18. மு. அழ. சிங்காரம் செட்டியார்
மு. நா. வீதி,
கொப்பனபட்டி-622 401
புதுக்கோட்டை மாவட்டம்

19. ராம. ரெ. ரெங்கனதன் செட்டியார்
(கருங்குளம்)
10/130 ஜெயில் ரோடு,
கோயமுத்தூர்-641 018

20. பி. சி. மு. சுப. சுப்பிரமணியன்
செட்டியார்
ராங்கியம்-622 409
புதுக்கோட்டை மாவட்டம்

21. வயி. க. ராம. கருப்பாத்தான் என்ற
சேதுராமன் செட்டியார்
(வி. லெட்சுமிபுரம்)
வயிரவன் பரிமள சாலை
21, துர்காலயா ரோடு
திருவாரூர்-610 001.
தஞ்சை மாவட்டம்.

22. பெரி. பழ. லெட்சுமணண் செட்டியார்
விராமதி-623 212
(வழி) கீழச்சிவல்பட்டி.
இராமனதபுரம் மாவட்டம்

23. N.N. சுவாமிநாதன் செட்டியார்
(கல்லல்)
அண்ணமலையார் ரோட்வேஸ்
சுப்பிரமணியபுரம். 6வது வீதி,
காரைக்குடி-623 003.

24 ஆ. மு ஆ. முரு பழ குழந்தைவேலன்
செட்டியார்
ஆ. மு. வீடு,
கல்லல்-623 305.
இராமனதபுரம் மாவட்டம்

25. ந. மு, மு. முத்துராமன் செட்டியார்
மகிபாலன்பட்டி-623 203
இராமனதபுரம் மாவட்டம்

26. ராம. வீர. ராமசாமி செட்டியார்
27, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி-623 001.
இராமனதபுரம் மாவட்டம்

27. பழ. அ. பழ. அண்ணமலை செட்டியார்
சி. மெ. வீதி,
காரைக்குடி-623 001.
இராமனதபுரம் மாவட்டம்

28. க. தெ.க. அள. அள. அ. திருநாவுக்கரசு
செட்டியார்
76, சத்தியமூர்த்தி இல்லம்
செக்காலை ரோடு,
காரைக்குடி-623 001.

29. ராம. க. ராம. நாச்சியப்ப செட்டியார்
மானகிரி-623 307.
இராமனதபுரம் மாவட்டம்

30. பி. சு. ஆத. பி. பழ. சுப்பிரமணியன்
செட்டியார்
ஒக்கூர்-623 557,
இராமனதபுரம் மாவட்டம்

31. பழ. சி. ராம. ராமநாதன் செட்டியார்
நச்சாந்து பட்டி-622 404
புதுக்கோட்டை மாவட்டம்

32. செ. கண. காளைசுந்தரம் செட்டியார்
காளையார் மங்கலம்-623 557
இராமனதபுரம் மாவட்டம்

33. பழ. மு. சொ. இராமசாமி செட்டியார்
சிறுகூடல்பட்டி-623 215
(வழி) விராமதி,
இராமனதபுரம் மாவட்டம்

34 மு. சே. சுப. சுப்பையா செட்டியார்
பொ. புதுப்பட்டி-622 408
புதுக்கோட்டை மாவட்டம்

35. மு.பழ. இராமநாதன் செட்டியார்
பொ. புதுப்பட்டி-622 408
புதுக்கோட்டை மாவட்டம்

36. ராம. கும. மு. ராமநாதன் செட்டியார்
வேந்தன்பட்டி-622 403
புதுக்கோட்டை மாவட்டம்

37. வ. சுப. திருப்பதி செட்டியார்
மேலைச்சிவபுரி 622 403
புதுக்கோட்டை மாவட்டம்

38. கரு சி.அ கரு பழநியப்ப செட்டியார்
(பூலாங்குறிச்சி)
10, அப்துல் கபார்கான் ரோடு
சின்ன சொக்கிகுளம்
மதுரை-625 002.

39. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்
(ராயவரம்)
113, நுங்கம்பாக்கம் ஹைரோடு
நுங்கம்பாக்கம்
சென்னை-600 034.

40. மு. வீ. அழகப்ப செட்டியார்
ராயவரம்-622 505
புதுக்கோட்டை மாவட்டம்

41. வ. வீர. வ. மாணிக்கம் செட்டியார்
கண்டவராயன்பட்டி - 623 203,
இராமனுதபுரம் மாவட்டம்

42. கா. ராம. அழ. ராம. சேதுராமன்
செட்டியார்
ஒ. சிறுவயல் - 623 208
இராமனுதபுரம் மாவட்டம்

43. சா. பழ. பழநியப்ப செட்டியார்.
வையாபுரி ரோடு,
வலையபட்டி - 622 411
புதுக்கோட்டை மாவட்டம்

44. மு. பெரி. அண்ணுமலை செட்டியார்
வலையபட்டி - 622 411
புதுக்கோட்டை மாவட்டம்.

45. வடு. ராம. லெ. மாணிக்கம் செட்டியார்
வலையபட்டி - 622 411
புதுக்கோட்டை, மாவட்டம்.

46. ராம. ராமனுதன் செட்டியார்.
(நடராஜபுரம்
2-A., சரோஜினி தெரு,
சின்ன சொக்கிகுளம்.
மதுரை - 625 002.

47. வெ.சு. மு. சுப்பிரமணியன் செட்டியார்
பலவான்குடி - 623208
(ஒ. சிறுவயல். வழி)
இராமனுதபுரம் மாவட்டம்

48. எ. பெரி. வீர. சோலையப்ப செட்டியார்
எ. மு வீதி
K. புதுவயல் - 623 108.
இராமனுதபுரம் மாவட்டம்.

49. உ.ராம.பெ.ராம.ராமனுதன் செட்டியார்
(புதுவயல்)
சாக்கோட்டை போகிற மெயின் வீதி.
பழையூர், K. புதுவயல் - 623 108.
இராமனுதபுரம் மாவட்டம்

50. ஆத. நடராஜன் செட்டியார்
வெற்றியூர் - 623 305
கல்லல் (வழி)

51. நா. வெ. ராம நா.ராமசாமி செட்டியார்
(கண்டனூர்)
No. 23, ராமசாமிபுரம் : 2
தூத்துக்குடி - 628 003
(நெல்லை மாவட்டம்)

52. வயி.ராம. நா. ரா. ராம. வயிரவன்
செட்டியார்
ராம விலாஸ் - மெயின் ரோடு
கண்டனூர் - 623 104
இராமனுதபுரம் மாவட்டம்

53. பழ. ஆ. சிங்காரம் செட்டியார்.
(ஆ. தெக்கூர்.)
அழகப்பா கார்ப்பொரேசன்
வடக்கு ரத வீதி
திண்டுக்கல் - 624001.

54. மு. பெ. சித. சொ.
ராமையாசெட்டியார் (நேமத்தான்பட்டி)
Plot No. 3/2 Madurai Housing Unit
அறிஞர் அண்ணு நகர்.
சாத்தமங்கலம் போஸ்ட்
மதுரை - 625 020.

55. ச. அண்ணுமலை செட்டியார்.
அண்ணுமலையார் வீதி
அரிமழம் - 622 201.
புதுக்கோட்டை மாவட்டம்.

56. அ. ச ராம. செல்லப்ப செட்டியார்
அ. ச. ராம. வீதி.
அரிமழம் - 622 201.
புதுக்கோட்டை மாவட்டம்

57. ஆ. கண்ணப்பா ஸ்ரீநிவாசன்
6/24 நடு வீதி.
நாட்டரசன் கோட்டை - 623 556.
இராமனுதபுரம் மாவட்டம்.

58. நா. அழ. அழகப்ப செட்டியார்
குருவிக்கொண்டான்பட்டி - 622 409
புதுக்கோட்டை மாவட்டம்.

59. பெ. ஆத. இராமசாமி செட்டியார்
கண்டரமாணிக்கம் - 623 204.
இராமனுதபுரம் மாவட்டம்

60. சி. பழ அரு. பழநியப்பசெட்டியார்.
கண்டரமாணிக்கம் - 623 204.
இராமனுதபுரம் மாவட்டம்

61. பெரி. சித. லெட்சுமணன் செட்டியார்
விஸ்வநாதபுரம்
ராமசந்திரபுரம் 622 505
புதுக்கோட்டை மாவட்டம்

62 சொ. கி. மு. கிருஷ்ணன் செட்டியார்
உயர்நிலைப்பள்ளி ரோடு,
இராமச்சந்திரபுரம் - 622505
புதுக்கோட்டை மாவட்டம்

63. ப. உ. மு. ராம
முருகப்ப செட்டியார்.
தேனிபட்டி – கீழாநிலை - போஸ்ட்
PIN - 622202.

64. குப அண. ரெங்கநாதன் செட்டியார்
மதகுபட்டி - 623553
இராமனுதபுரம் மாவட்டம்.

65 கா. கா. ராம. உ.
ராமநாதன் செட்டியார்
பனங்குடி - Po 623555
(வழி) நடராஜபுரம்
இராமனுதபுரம் மாவட்டம்

66. நா. அ நா. அண்ணாமலை செட்டியார்
முரு. க. தெரு
பள்ளத்தூர். 623 107

67. ராம.மு.லெ.சுப.லெஷ்மணன்செட்டியார்
முரு. க. தெரு.
பள்ளத்தூர் - 623 107

68. சுப. நா. அண.லெஷ்மணன்செட்டியார்
(அலவாக்கோட்டை)
வீரராகவ பெருமாள் கோவில் தெரு
தெற்குமாசிவீதி.
மதுரை - 625001

69. கரு நா ராம. இராமநாதன் செட்டியார்
ஆவினிப்பட்டி P.o
கீழச்சிவல்பட்டி (வழி)
PIN 623205

70. கரு.சா. சாத்தப்பா சிங்காரம்செட்டியார்
(சிருவயல்)
6, மகாலெட்சுமிபுரம்
வசந்தநகர்
மதுரை - 625003.

71. ராம. அரு. அருணசலம் செட்டியார்
சந்தைப் பேட்டை அருகில்
கிராமத்தார் வீடு
ஆத்தங்குடி - 623 101.
இராமனுதபுரம் மாவட்டம்.

72. குமா. சா. அழகப்ப செட்டியார்
3/43 அம்மன் சன்னதி வீதி
கீழச்சிவல்பட்டி - 623205.

73. பன.சித செ. சொக்கலிங்கம்செட்டியார்
பி. அழகாபுரி.
கீழச்சிவல்பட்டி - 623 205



# வயிரவன் கோவில் தர்ம பரிபாலன சபை

## செயற்குழு மேம்பர்கள்

1. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார்,
   தலைவர்
   1/46 வினைதீர்த்தான் செட்டியார்தெரு,
   பாகனேரி-623 558.

2. கரு. சி. அ. கருப்பன் செட்டியார்
   உபதலைவர்
   No 10, அப்துல்கபார்கான் தெரு,
   சின்ன சொக்கிகுளம்
   மதுரை-625 002

3. நா. லெ. நா. இராமநாதன் செட்டியார்
   காரியதரிசி
   6/43 கஸ்தூரிபாய் தெரு,
   கண்டனூர்-623 104

4. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்
   113, நுங்கம்பாக்கம் ஹை ரோடு,
   சென்னை-600 034

5. நாக. ராம. இராமசாமி செட்டியார்
   சாந்தி இல்லம்
   பொ. புதுப்பட்டி-622 408
   புதுக்கோட்டை மாவட்டம்

6. ராம. ரெ. ரெங்கனுதன் செட்டியார்
   No 2, சரோஜினி தெரு,
   சின்ன சொக்கிகுளம்
   மதுரை-625 002

7. வயி. ராம. கி. ராம. இராமசாமி
   செட்டியார்
   V.E.RM.K. House
   வழி தேவகோட்டை ரஸ்தா
   அரியக்குடி-623 202

8. பெரி.வீர.ராம. பெரியணண் செட்டியார்
   எ. மு வீதி,
   புதுவயல்-623 108
   இராமனுதபுரம் மாவட்டம்

9. வயி. ராம. ப. பழநியப்ப செட்டியார்
   கண்டனூர்-623 104
   இராமனுதபுரம் மாவட்டம்

10. அ. வெ. மு. வெங்கடாஜலம் செட்டியார்
    குதிரைப்பாதை ரோடு,
    தேவகோட்டை-623 302
    இராமனுதபுரம் மாவட்டம்

11. முகு. அண. அரு. அண்ணுமலை
    செட்டியார்
    குழந்தை வேலன் செட்டியார் சந்து
    தேவகோட்டை-623 302
    இராமனுதபுரம் மாவட்டம்

12. செ. சு. செ.சுப. சின்னவீரப்பசெட்டியார்
    SSS House, காந்திரோடு
    தேவகோட்டை-623 302
    இராமனுதபுரம் மாவட்டம்

13. குப. கண.ஆரு. கண்ணப்பாஸ்ரீநிவாசன்
    நடு வீதி,
    நாட்டரசன் கோட்டை
    R. Dist

14. முரு. ராம. இராமநாதன் செட்டியார்
    No. 2-A, சரோஜினி தெரு
    சின்னசொக்கிகுளம்
    மதுரை-625 002

15. க.தெ.க. அள. அள. அ.
    திருநாவுக்கரசு செட்டியார்
    சத்தியமூர்த்தி இல்லம்
    செக்காலை ரோடு
    காரைக்குடி-623 001
    R. Dist

16. ராம. வெ.லெ. நாச்சியப்ப செட்டியார்
    சிங்கப்பூரார் வீடு,
    கல்லல்-623 305
    R. Dist

17. கா. பழ. மு.சுப. ராமசாமி செட்டியார்
குழிபிறை-622 402
புதுக்கோட்டை ஜில்லா

18. நா. அ. சிந. அ. வீரப்ப செட்டியார்
செல்லாயி அம்மன் கோவில்
தெற்குரத வீதி
கண்டனூர்-623 104
R. Dist

19. பி. கு. நா.பெரி. கும. பெரியகருப்பன் செட்டியார்
காலேஜ் ரோடு,
சுப்பிரமணியபுரம்
காரைக்குடி-623 003

20. வயி. ராம. நாரு. ராம. வயிரவன் செட்டியார்
ராமவிலாஸ்
மெயின்ரோடு,
கண்டனூர்-623 104
R. Dist

21. தீ. சொ. கி.மு. கிருஷ்ணண் செட்டியார்
இராமச்சந்திரபுரம்-622 505
புதுக்கோட்டை ஜில்லா

22. RM. L. RM. L, லெட்சுமணன் செட்டியார்
159, கீழ மாசி வீதி
மதுரை - 625 001

23. M. V. M முத்து செட்டியார்
15/15 டாக்டர் அழகேசன் ரோடு
கோவை - 641 001.

24. மெ. சி. சபாபதி செட்டியார்
கண்டரமாணிக்கம் 623 204
R. Dist

25. சொ. மாணிக்கம் செட்டியார்
கருங்குளம்-623 204

26. ரெ. சுப.சித. சிதம்பரஞ் செட்டியார்
"வாணி பிலிப்ஸ்"
64, பட்டர் ஒர்க்ஸ் ரோடு,
திருச்சி-620 002

27. கரு. கதி. கருப்பஞ் செட்டியார்
வாலாப்பூர் கரு.வீடு
நா. புதூர்
காரைக்குடி-620 002

28. பழ. சி. ராம. ராமநாதன் செட்டியார்
நச்சாந்து பட்டி 622 404
புதுக்கோட்டை ஜில்லா

29 லெ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
மளிகை, வெ. ஊரணிதெற்கு,
தேவகோட்டை-623 302
முகவை மாவட்டம்

30. அ. கும. சொக்கலிங்கம் செட்டியார்
ஆத்தங்குடி-623 101
முகவை மாவட்டம்

31. அரு. உல.வயி.வடுகநாதன் செட்டியார்
5/61 முத்துக்கருப்பன் செட்டியார் வீதி
புதுவளவு
பாகனேரி-623 558

32. எய. மு. சொக்கலிங்கம் செட்டியார்
நடு வீதி
புதுவயல் - 623 108
முகவை மாவட்டம்

33. மு. சே. சுப. சுப்பையா செட்டியார்
பொ. புதுப்பட்டி-622 408
புதுக்கோட்டை மாவட்டம்

34. வடு. குமரப்ப செட்டியார்
வலையபட்டி-622 411
புதுக்கோட்டை மாவட்டம்

35. ஆவி. சித. சா பழநியப்ப செட்டியார்
வலையபட்டி-622 411
புதுக்கோட்டை மாவட்டம்

36. வ. பழ. சா. பழநியப்ப செட்டியார்
மேலச்சிவபுரி-622 403
புதுக்கோட்டை மாவட்டம்

37. S.P குமரப்பன் F. C. A.
ஆடிட்டர்
Dr. C. P. ராமசாமி அய்யர் ரோடு,
அபிராமபுரம்
சென்னை-18

38. RM. Ramanathan F. C A.
No. 25 Murudis, Lodge,
Luz corner Mylopore
Madras-600 004

# திருச்சி வானொலி வர்ணனை

31-1-1982 காலை 8-10 மணிக்கு நடைபெற்ற வயிரவன் கோவில் கும்பாபிஷேக நிகழ்ச்சிகளின் வர்ணனையைப் பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரன் நேரடியாக நிகழ்த்தினார். அவ்வர்ணனை அன்று மாலை 6–45 மணிக்குத் திருச்சி வானொலியில் ஒலிபரப்பப் பெற்றது. ★

வானொலித் தொகுப்பு : சந்திரன்.

ராஜ கோபுரம், வடிவுடை அம்மை, வளரொளி நாதர், வயிரவசுவாமி, கணபதி மற்றும் ஏனைய விமானங்களுக்குத் தனித் தனியே புனித நீர் கொண்ட திருக்குடங்களைக் கொண்டு நன்னீராட்டு விழா மிகச் சிறப்பாகச் சரியாகக் காலை 8-10 க்கு நடைபெற்றது. இக்கண்கொள்ளாக் காட்சியை திரு அரு சோமசுந்தரன் வர்ணிக்கக் கேட்கலாம்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் ஜோதி என்று நம்முடைய புலவோர்கள் பாடுவார்கள். அப்படிப்பட்ட ஜோதியாக எழுந்தருளிய வயிரவப் பெருமான் வளரொளி நாதராக இங்கு காட்சி அளிக்கிறார். அந்த வளரொளி நாதருக்குப் பக்கத்திலே, சமேதராக இருக்கக்கூடிய முறையிலே நம்முடைய வடிவுடை அம்பாள் காட்சி அளிக்கிருள். இந்தக் கோவிலைச் சுற்றிச் சிறுகூடல்பட்டி என்ற தலமும், பிள்ளையார் பட்டி என்ற தலமும், குன்றக்குடி என்ற தலமும் இருப்பதை நாம் பார்க்கிருேம். இங்கிருந்து நாம் பார்க்கிறபொழுது அந்த ஊர்களெல்லாம் நமக்குத் தெரிகின்றன. இந்தக் கோயிலிலே என்ன விசேஷம் என்றால் ஏராளமான சிற்பங்கள் உள்ளும் புறமும் காட்சி அளிக்கின்றன.

இராமர் அநுமனை வணங்குகின்ற சிற்பம் இங்கே புகழ்பெற்றது. அது மட்டுமல்ல. கண்ணப்பருடைய சிற்பம் இங்கே மிக அற்புதமாக வடிக்கப் பெற்றிருக்கிறது. ஸ்ரீமீனுட்சி சுந்தரேஸ்வரருடைய திருமணக் கோலம் மிக அருமையாக இங்கே இருக்கிறது. மெய்யன்பர்களே! நம்முடைய கோயில் கும்பாபிஷேக நேரம் நெருங்கி இருக்கிறது. மங்கல வாத்தியங்கள் எல்லாம் முழங்கிக் கொண்டிருக்கின்றன. ராஜகோபுரத்திலே இருந்தும் மற்ற கோபுரங்களில் இருந்தும் சிவாச்சாரியார்கள் சிவப்பு நிறப் பட்டு வீசுகிருர்கள். பட்டொளி பறக்கக் கும்பாபிஷேகம் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறது. கோபுரக் கலசங்களிலே இப்பொழுது நீர் ஊற்றிக் கொண்டிருக்கிருர்கள். என்னைச் சுற்றி இருக்கக் கூடிய 13 கோபுரங்களிலும் நான் அந்தக் காட்சியைப் பார்க்கிறேன். நம்முடைய சிவாச்சாரியார்கள் இப்பொழுது கும்பாபிஷேகம் செய்து கொண்டிருக்கிருர்கள். மங்கலமான

★ திருச்சி வானொலியின் இசைவு பெற்று வெளியிடப் பெறுகிறது.

அந்தப் புனித நீராட்டு விழா கோபுரக் கலசங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. 13 கும்பங்களிலும் இப்பொழுது நீராட்டிக் கொண்டிருக்கிறார்கள். சிவாச்சாரியார்கள் எழுந்து நின்று பக்தியாக அந்த வயிரவப் பெருமானையும் வடிவுடை அம்பாள் சமேத வளரொளி நாதப்பெருமானையும் வணங்கிக் கும்பாபிஷேகம் செய்துகொண்டிருக்கிறார்கள். மக்கள் எல்லாம் 23 ஆண்டுகளாகக் காத்துக் கிடந்த அந்தக் கும்பாபிஷேகம் இப்பொழுது சீரும் சிறப்புமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

நம்முடைய சிவாச்சாரியார்கள் வேதம் முழங்குகின்ற காட்சியையும், மங்கலவாத்தியங்கள் முழங்கும் காட்சியையும் நாம் இப்பொழுது ஒருசேரப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். கும்பாபிஷேகம் மிக அருமையாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இப்பொழுது நம்முடைய சிவாச்சாரியார்கள் எல்லாம் அந்தக் கோபுரக் கலசங்களுக்கு மஞ்சள் பூசி — சந்தனம் பூசி — மலர்தூவி அது மட்டுமல்ல — நன்றாக தீபாராதனை காட்டுவதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். இதோ தீபஆராதனை நடைபெறுகிறது. இப்படியாகக் கும்பாபிஷேகம் சிறப்பாக நிறைவு பெறுகிறது.



பாடப் பெறுபவர் :-

"பாலகவி" வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார்.

பாடுபவர் :- சிவநெறிக் கவிஞர் இராகவன் முத்து காரைக்குடி-1

பாலகவி என்னுமொரு பகலவனைப் பாடஎன
மூலையிலே அடைபட்டு முக்காட்டில் ஒளிந்திருந்த
பாலகனை அழைத்தார்கள் — பாரியைப் போல் வண்மையினால்
பாலருந்தக் கேட்டார்க்குப் பாற்குடமே தருவார்கள்
பூசைமணி நானென்றால் போர்ப்பரணி அரைநொடியில்
ஆசைவரப் பாடிடுவேன்! அகிலத்தை வென்றிடுவேன்!
நீற்றுப்பை நானானால் நெடும்புகழின் பாலகவி
கீற்று நுதல் இடம்பிறக்கும் கிளர்புகழின் சித்தாந்தப்
பேற்றைமிக உள்ளடக்கும் பெருநூல்கள் சொல்லிடுவேன்!
ஆனால்——
சோற்றுப்பை ஆனவன் நான்! சுகத்தமிழைப் பாடிடவே
ஆற்றலிலேன்! ஆனாலும் ஆசையினால் முயலுகிறேன்!
செய்யபுகழ்த் திருவேட்பூர்ச் செட்டிமணி ரத்தினத்தை,
மாப்பிள்ளை நானிங்கே மனங்குளிரப் பாடுகிறேன்!
பூப்பறிக்கும் குடலைநான் பொறுப்பாகப் பாடுகிறேன்!
எப்படி ?

ஓவியத்தை எழுதுபவன் கோபுரத்தில் இறைவனது
துயர் துடைக்கும் எட்டெட்டுத் தூயபல ஆடலையும்
வியர்வூறப் படுத்தபடி வெகுகவனம் கொண்டொன்றி
வண்ணத்தில் தீட்டுதல் போல் வார்த்தைக்கும் அரிதாகும்!
பாலகவி எனப்பெற்றார்! பலருக்கு அவர்பேரே
தெரியாது! முன்னோரின் திருப்பேராம் ராமநாதன்
முறையாகச் சொல்லிடற்கு மூவுலகில் சிலருள்ளார்!
புழமைக்கும் புதுமைக்கும் பாலமென விளங்கிடுவார்!
கிழமைக்கு வடமொழியும் கேட்பவர்கள் உளங்குளிர
விழங்கிடற்த வண்டமிழும் வாயார மழைபோல
முழங்கிடுவார்! இரண்டுக்கும் முதலாலே பாலமிட்டார்!
ஆங்கிலத்துச் செய்திகளும் ஆர்மோன் இசையதுவும்
தாங்கி உயர் தமிழுடனே தாமிணைத்துப் பாலமிட்டார் !
ஆதலினால்
ஓங்கு புகழ்த் தேசிகரை உரைத்திடுவேன் இக்குவைத்து,
வீங்குதிருப் பாலக்கவி வெற்றிதிகழ் மாமணியம்!

முத்தமிழும் இவர்சொத்து! மூவுலகும் இவர்வாயில்
சத்தான உபதேசம் தான்கேட்டால் வாய்புதைக்கும்
கைத்தாளம் தான்போடும்! கால்வீழும் துதியுரைக்கும்!
சம்பந்தர் வீதியிலே சதிராடும் திருமுறையின்
மென்சந்தம்! அத்தெருவில் மேல்எழும்பும் சூரியனும்
இருள்ஓட்டும் மாளிகையின் எழிற்பேரும் அப்பேரே!
மருள்போக்கும் பால்நிறையும் மழலையினர் திருமணியில்
சுடர்வீசும் சிவக்கோலம்! தூயதிரு அக்கமணி
உடல்மீது! நானுன்காய் ஒளிவீசும் திருநீற்றுப்
படர்காப்பு! திருமுகமோ பால்வழியும்! வாய்திறந்தால்
கடல்பொங்கித் தமிழ்வழியும்! கரிக்காது! சிவப்பாகும்!

இவர்தான் பாலகவி :-

சம்பந்தர் தாள்பற்றித் தான்வாழும் தவத்தாலே
கொம்பந்தக் குற்றாலக் குறும்பலவின் கனிச்சுவையாய்
கண்திறக்கும் முன்னாலே வெண்பாவும் கொட்டிடுவார்!
மூன்றாண்டில் கவிவடித்த முதற்குரவர் திருத்தொண்டர்
சான்றோர்கள் போற்றிவிடச் சந்தியிலே சிறுவரெல்லாம்
கோலிவிளை யாடையிலே பாடிவிளை யாடியவர்!
பந்துவிளை யாடையிலே சிந்துவிளை யாடியவர்!
கழுத்தறுக்கும் பாட்டென்னும் கட்டளைக் கலித்துறையை
எழுத்தெண்ணிப் பார்க்காமல் இன்றைக்குப் பாடுதற்குப்
பாலகவி அல்லாமல் பாருலகில் ஆளில்லை!
நற்றிணைக்கும் உரைதந்தார்! நாவீறு கொண்டமுனி
வெற்றிஉயர் குருபரனார் விளையாடும் தமிழ்ப்பாடல்
அத்தனைக்கும் உரைதந்தார்! ஆர்செய்தார் இதுபோலே?
இசைப்பாடல் எனும்பேரில் இவர்செய்த கீர்த்தனையை
திசைஉயரும் தில்லையிலே கழகத்தார் * வெளியிட்டார்!
தனிப்பாடல் ஆயிரங்கள்! சம்பந்தர் மேல்செய்த
அணிப்பாடல் ஐந்நூறு! மணிக்கோவை பலதந்தார்!
சிந்துகவி நடையெடுத்துச் சேக்கிழார் தனக்கிசைத்தார்!
முந்துதமிழ் வர்க்கமாலை முருகனுக்குத் தந்திட்டார்!
பழனிக்கும் அந்தாதி பரங்கிரிக்கும் கோவையுடன்
வளமுயரும் மயில்மலைக்கும் மரபுயரும் உலாத்தந்தார்!
ஒன்பது கோவிலுக்குள் ஒன்றாகும் இலுப்பக்குடி
என்பதற்குத் தேசிகரே இனியதல வரலாற்றை
மன்பதைக்குத் தந்தார்கள்! மற்றொன்று சொல்கின்றேன்!
கஷ்டத்தில் மிகக்கஷ்டம் கடன்வாங்கிப் பட்டினிபோல்
அஷ்ட நாகபந்த அருஞ்வெண்பாச் செய்வார்கள்

---

* அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரின் தமிழிசைப் பாடல் 13ம் தொகுதியில் ''பாலகவி'' அவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் இடம் பெற்றுள்ளன

# தேவாரத்தின் அற்புதங்கள்

'பண்ணிசை மாமணி' ப. மகேஸ்வர் லால், B. E.,
மேற்பார்வை மின் பொறியாளர், இராமநாதபுரம் மாவட்டம்

சைவ சமய குரவர்கள் தேவாரம் பாடிப் பல அற்புதங்களைச் செய்திருக்கிறார்கள் என்பதைச் சைவ உலகம் நன்கறியும். இன்றைக்கும் தேவாரப் பதிகங்களை மனத் தூய்மையோடும் பக்தி சிரத்தையுடனும் பாடினால் அற்புதங்கள் நிகழ்கின்றன என்பதைச் சிலரே அறிவர். 'தொண்டர் தம் பெருமை சொல்லவும் அரிதே' என்று தமிழ் மூதாட்டி ஒளவையார் கூறியுள்ள படி தேவாரத்தின் பெருமை எழுதவும் அரிதே, இருப்பினும் இந்த இருபதாம் நூற்றாண்டில் நடந்த சில அற்புத நிகழ்ச்சிகளை மெய்யன்பர்களுக்கு அறிவிக்கலாம் எனும் அவாவினால் இதனை எழுதத் தெய்வ அருள் கூட்டியுள்ளது.

அடியேனுடைய குருநாதர் பெரிய புராண விரிவுரை எழுதிய கோவை சிவக் கவிமணி C.K. சிவசுப்பிரமணியமுதலியார் அவர்கள் ஒருமுறை கோயமுத்தூரில் பிரசங்கம் செய்யும்போது ''தேவாரம் உயிருள்ள பாட்டுக்கள். அதனைப் பாடினால் பலன் கிடைக்கும். உதாரணத்திற்கு

''அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே'

என்ற அப்பர் தேவாரத்தின் படி சிதம்பரத்தில் சாப்பாடு கிடைக்கும்'' என்று விளக்கியுள்ளார். இதைக் கேட்ட அன்பர் ஒருவர் இதைச் சோதித்துப் பார்க்கச் சிதம்பரம் புறப்பட்டுச் சென்றார். அங்கு காலை முதல் உச்சிக்காலம் வரை நடராஜப்பெருமான் கோவிலில் வழிபட்டார். அவர் காலையிலிருந்து உணவு சாப்பிடவில்லை. யாரிடமும் ஆகாரம் கேட்கவில்லை. மத்தியானம் ஆக ஆக அவருக்குப் பசியினால் மயக்கம் வந்தது. அவர் ஆயிரங்கால் மண்டபத்திற்கு வந்து படுத்து உறங்கி விட்டார். அசதியினால் வாயைத் திறந்து குறட்டை விட ஆரம்பித்து விட்டார். கோவிலில் தினமும் நிவேதனம் செய்த பிரசாதங்களைச் சிப்பந்திகளுக்குப் பங்கிட்டுக் கொடுப்பது வழக்கம். மடைப்பள்ளி ஐயருக்கும் பங்கு உண்டு. அன்றைக்கு சக்கரைப் பொங்கல் நிவேதனம் செய்யப் பட்டது. அதில் மடைப்பள்ளி ஐயர் அவர் பங்குடன் இன்னொரு பங்கு அதிகமாக எடுத்து வைத்துக் கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டு வந்து கொண்டிருந்தார். கோயில் மணியகாரர் உச்சிக்காலம் முடிந்து கோயில் மூடுவதற்கு முன் எல்லாம் சரிவர நடக்கின்றனவா என்பதைக் கண்காணிக்க கோயிலுக்குள் வந்து கொண்டிருந்தார். மணியகாரர் வெகு தூரத்திலேயே வருவதை மடைப்பள்ளி ஐயர் கண்டு விட்டார். தான் கொண்டு வரும் அதிகப் படியான சக்கரைப் பொங்கலை மணியகாரர் பார்த்து விட்டால் என்ன ஆவது என்ற பயத்தினால் அதிகப் படியான சக்கரைப் பொங்கலை ஓங்கி வீசி எறிந்தார். அது வாயைத் திறந்து குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்கும் அன்பர் வாய் மேல் பொத்தென்று பலமாக விழுந்து தொண்டைக்குழி வரைக்கும் போய்விட்டது. திடீரென்று இப்படி ஆனதும், அவர் திக்குமுக்காடி எழுந்து உட்கார்ந்து பின்னர் சக்கரைப்பொங்கலைச் சாப்பிட்டார். சிதம்பரத்திலிருந்து கோவைக்கு வந்து சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களிடம் நடந்த இந்தச் சம்பவத்தைக் கூறி 'சுவாமி சாதம் ஊட்டிவிட்டது' என்றார். அவர் அந்த அன்பரிடம் 'அப்பனே! தேவாரம் உயிருள்ள பாட்டுக்கள். எப்பொழுதும் பலிக்கும். இனிசோதிக்காதே!' என்று அறிவுரை கூறினர். இது அடி

யேனுடைய குருநாதர் சொல்லக் கேட்டறிந்தது.

அடியேனுடைய பிறந்த ஊர் கோயமுத்தூர். மதுரையில் 1963—66ல் பணிபுரிந்த சமயம் மதுரையில் மின்வாரிய அலுவலர் குடியிருப்பு நகரத்திற்கு வெளியே உருவாக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள். அடியேனும் மதுரை ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் கோவில் தரிசனம் செய்வதற்காகவும், மக்களின் அன்பினாலும், பண்பினாலும் அவர்களுடனே வாழ வேண்டும் என்ற எண்ணத்தினாலும் அந்தக் குடியிருப்பில் ஒரு வீடு கட்ட விண்ணப்பித்தேன். மின்வரிய வீடு கட்டும் கூட்டுறவு சங்கத்தின் மூலம் அந்தக் குடியிருப்பில் வீடு கட்டக் கடன் வாங்க முயற்சித்தும் கிடைக்கவில்லை. ஆதலால் திருவுளச்சீட்டுப் போட்டு அதன்படி ஒவ்வொருவருக்கும் வீடு கட்ட நிலம் ஒதுக்கி அவரவர்களுக்குக் கொடுத்து விட்டார்கள். அதற்குள் அடியேன் வேறு ஊருக்கு மாற்றலாகிச் சென்று விட்டேன். நண்பர்கள் சிலர் அப்போது பலர் அங்கு வீடு கட்டுவதாகவும், வீடு கட்டினால் வாடகைக்குகுடிவரும், அந்த வாடகையை வைத்துக் கொண்டு கடனில் ஒரு பங்கை அடைக்கலாம் என்று கூறினார்கள். அடியேனும் அரசாங்கக் கடனை வாங்கி வீடு கட்டி முடித்தேன். ஆனால் வாடகைக்கு யாரும் வரவில்லை. அடியேன் பணிபுரியும் ஊரில் வாடகை, மதுரை வீட்டிற்குக் கடன் இரண்டும் கட்ட முடியாமல் சிரமப் பட்டேன். அதனால் வீடு விற்க விளம்பரம் கொடுத்தேன் வீடு வாங்க யாரும் முன் வரவில்லை. சிறிது காலம் கழித்து வீடு வாடகைக்கு விடப்படும் என விளம்பரம் கொடுத்தேன். அப்பொழுதும் யாரும் வரவில்லை. அடியேனுடைய இல்லத்தரசி ''திருமறைக் காட்டில் அப்பர் பாடி கதவைத் திறந்த பாட்டைப் பாடுங்கள். நல்ல குடும்பம் வாடகைக்கு குடிவரும்'' என்றாள். அதன்படியே அடியேனும் தினமும்,

'பண்ணின் நேர் மொழி யாளுமை
பங்கரோ
மண்ணி னார் வலஞ் செய்ம்மறைக்
காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள்
செய்ம்மினே'

என்ற பதிகத்தைப் பாராயணம் செய்து வந்தேன். ஒரு மாதத்தில் அடியேனுக்கு மதுரையில் புதிதாக உருவான அலுவலகத்தில் பணிபுரியப் பணித்தார்கள். அப்பொழுதிலிருந்து அடியேனே மதுரையில் கட்டிய 'மீனாட்சி இல்லத்'தில் குடும்பத்துடன் வாழ்ந்து வருகிறேன். இது நான்கு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி. ஐந்து வருடங்களாய்ப் பூட்டியிருந்த கதவைத் திறந்த அத்தேவாரப் பதிகத்தை வாசலின் முன் எழுதி வைத்துள்ளேன். என்னே தேவாரத்தின் மகிமை !

அடியேனுடைய ஆத்ம நண்பர் காசிநாததுரை. அவர் இராமநாதபுரத்தில் இருக்கிறார். அமெரிக்காவிற்கு சுவாமி விவேகாநந்தரை அனுப்பி வைத்து உலகப் புகழ் பெற்ற இராமநாதபுரம் ராஜா பாஸ்கர சேதுபதியின் வம்சத்தைச் சேர்ந்தவர். சில மாதங்களுக்கு முன் அவரைச் சந்திக்கச் சென்ற சமயம் பேச்சு வாக்கில் தன் குமாரன் சுமார் 16 வயது உள்ளவன் 2 மாதமாகக் காணவில்லை என்று கூறி, கோட்டப் பொறியாளரிடம் அவர் செல்லுமிடங்களில் விசாரிக்கச் சொன்னார். அடியேன் சிறிது நேரம் யோசித்துக் கொணடிருந்தேன், பின் அவரிடம் ''ஐயா ! சுந்தரர் முதலை உண்ட பாலனை அழைத்த தேவாரம்

'உரைப்பார் உரையுகந் துள்கவல்
லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமும்
ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி
யூர்அவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்
சொல்லு காலனையே'

பாடுங்கள். 10, 12 தினங்களுக்குள் உங்கள் குமரன் கிடைத்து விடுவான்'' என்று கூறினேன். அவர் சைவ சித்தாந்தங்களையும், சைவத் திருமுறைகளையும் முறையாகப் பயின்று பெரும் புலவராகத் திகழ்

பவர். இதைக் கேட்டவுடன் 'இது எனக்குத் தோன்றவில்லையே! சரி!' என்றுசொல்லி உடனே சுந்தரர் தேவாரப் புத்தகத்தைக் கொணர்ந்து தன் துணைவி யாருடன் பாடிக் காட்டினார். அடியேன் மீண்டும், 'உங்கள் பையன் தேவாரம் பாடுவான் என்று சொல்கிறீர்கள். அந்தத் தேவாரம் தான் அவனை இன்னும் காப்பாற்றிக்கொண்டிருக்கிறது' என்றேன் இவ்வாறு கூறிய மறுநாள்காலை அடியேன் மதுரையில் இருக்கும் போது அவருடைய குமாரன் கிடைத்து விட்டான். அதுவும் அடியேன் முதலை உண்ட பாலனை அழைத்த தேவாரத்தைப் பாடச் சொன்ன 5 மணி நேரத்திற்குள் கிடைத்து விட்டான் என்ற செய்தியை அறிந்தேன். உடனே அடியேனை அவர் இல்லத்திற்கு அழைத்து அடியேன் அத்திருக்குமாரனுக்கு திருநீறு அணிவிக்குமாறு செய்தார். என்னே தேவாரத்தின் அற்புதம்!

சில ஆண்டுகளுக்கு முன் ''எட்டுக் கிரகங்கள் ஒன்றாகக் கூடுகின்றன; அப்போது உலகம் அழிந்து விடும்'' எனக் கூறினர். ஸ்ரீ காஞ்சிப்பெரியவர் 'கோளறு பதிகத்தைப் பாடும் படி உலகோர்க்கு அறிவித்தார். மெய்யன்பர்கள் பலர் கோளறு பதிகத்தைப்பாடி வந்தார்கள். மக்கள் கூறியபடி அழிவுகள் ஏற்படவில்லை என்பது எல்லோரும் அறிந்ததே. இன்றைக்கும் 'வேயுறு தோளிபங்கன்' எனும் கோளறு பதிகம் பாடி வந்தால் 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சு' என்றவாறு பெருந்தீங்குகள் நேராமல் மக்களைக் காத்து வருகிறது என்பது மெய்யன்பர்கள் பலர் அனுபவத்தில் காணும்உண்மை. திருஞானசம்பந்தர் திருவாலவாயில் கூன்பாண்டியனுடைய வெப்பு நோய் திருநீற்றினால் தீர்க்கத் திருவாய் மலர்ந்தருளிய திருநீற்றுப் பதிகத்தின் மகிமையை அறியாத சைவரும் உளரோ! இன்னும் எத்தனை யோ கூறலாம். விரிக்கிற் பெருகும். ஆக, தேவாரத்தை மெய்யுணர்வோடு ஓதி உய்வோமாக!

'சொற் கோவுந் தோணி புரத்
தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு
— முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறை
நூல்தானெங்கே
எந்தை பிரான் ஐந்தெழுத் தெங்கே!'
திருச்சிற்றம்பலம்



# வெற்றித் திருமகள் - கொற்றவை - பதிகம்

பண்டித ரெ. இராமமூர்த்தி, கொப்பனுபட்டி.

சகமீ தினிலே தமியேன் மகிழ்வான்
அகமாம் அணிகோ யிலிலன் புடனே
புகுவாய் ; அருள்வாய் பொருள் யாவையுமே ;
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

தகுமோ? தகுமோ? தமியேன் தளரத்
தகுமோ? தகுமோ? தயைசெய்(து) அருள்வாய்
பகுவாய், சுருள்கோ(டு) உடையாள், பலவான்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

செகும்மூ விலேவேல் உடையாய் ! அடியேன்
மிகுசீ ருடனே மிளிரப் பணியாய்
சகியா இடர்சற்சனர்உற் றிடச்செய்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

புகல்நீ எனவே புகும்இச் சிறியேன்
மிகவாழ் வுறவே விழையாமலேயே !
செகமே மருளத் திரிகுன் றனையாள்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

சகவாதனையால் தளரா(து) இனிமேல்
சுகமே மருவத் துணைசெய் தருள்வாய்
தொகும்மூ வுலகின் துணையே ! வலுவார்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

பகுவாய் அரிமேல் பணிவா ளுடனே.
தகவே வருபை ரவியே ! சரணம் ;
பகையாய் நலியும் படுபாவியை, வெம்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

ககரா ஜநிகே தனனைக் கருதும்
தகவார் அணுத் தழுவும் தலைவீ !
அகலேன் உனையான் அடியேற் கருள்வாய்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

நிகரா ருமிலாய் ! நெடுவாள் உடையாய் !
தொகுவால் உளைசேர் அரிமேல் துறுவோய் !
சுகவாழ் வருள்வாய் துணைவே றிலையே
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

பகையோ(டு) உறுவார் படுவார் ; உறவின்
மிகையோ(டு) உறுவார் மிகவாழ் வுறுவார் ;
ஜெகஜோதி மினே ! திரிசூ லதரீ !
மகிடா சுரனே வதைசெய் அமுதே !

மகவான் முதலோர் மலர் மாரிசொரிந்(து)
அகம்மே வுறுமன் புறவே அருள்வோய் !
மிகமேலவளே ! வினையேற் கருள்வாய்
மகிடா சுரனே வதைசெய் அமுதே !



# சந்தத் தமிழில் கந்தன் அமிழ்தம்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம்.ஏ.,எம்.லிட்.,பி.எச்.டி.,
பேராசிரியர்-தலைவர், தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-600 005.

சந்தமிகு தமிழிலே கந்தப் பெருமானது புகழைப் பாடிய அருளாளருள் சிறப்பிடம் பெறுபவர் அருணகிரிநாதர். தமிழ்நாட்டின் திருத்தலங்கள் தோறும் தம் திருவடி தேய நடந்து முருகவேள் திருப்புகழைப் பாடியவர் அவர். அருணகிரியாரைக் குறித்து, இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர் தமது 'மயிலம் ஸ்ரீமுருகன் பிள்ளைத்தமிழில்,

''கொண்டலெனச் சந்தத்தமிழ்
மாரிபெய் கொற்றவன்''

என்று பாடுவார்.

சந்தப்பா வகையில் அருணகிரிநாதருக்குக் குருநாதராக விளங்கியவர் ஞானசம்பந்தப் பிள்ளையார். சம்பந்தர் தம்மைச்

''சந்தமெல்லாம் அடிச்சாத்த வல்ல
மறைஞான சம்பந்தன்''
''சந்தமிகு ஞானமுணர் பந்தன்''
''சந்தமே பாடவல்ல தமிழ்ஞான
சம்பந்தன்''

என்றெல்லாம் கூறிக் கொள்வார். அவரையே 'சந்தத் தமிழின் தந்தை' எனலாம். அவரது பாக்களிலே தோய்ந்தவர் அருணகிரிநாதர். அவரை முருகப் பெருமானுகவே எண்ணிப் போற்றியவர். சம்பந்தர் அருளிய தேவாரத்தில் - குறிப்பாகப் பண்சாதாரி - திருவிராகத்தில் உள்ள (மூன்றும் திருமுறை - பதிகம் 67-81) சந்த வேறுபாடுகளையெல் லாம் நன்கு உணர்ந்து மகிழ்ந்து அவற்றைப் பின்பற்றியதோடு புதிய புதிய சந்த வேறு பாடுகளையும் ஆக்கித் தந்துள்ளார்.

ஞானசம்பந்தரையே தனது குருவாகக் கொண்டவர் ஆதலின்,

'' புகலியில் வித்தகர் போல
அமிர்தகவித் தொடை பாட
அடிமைதனக் கருள்வாயே''

என முருகனை வேண்டினர். இவ்வாறு 'அமிர்தகவித் தொடை பாட' என்று வேண்டியமை யினுலே இவரது பாடல்கள் 'திருப்புகழ் அமிர்தம்' என்று பெயர் பெற்றன எனலாம்.

ஞானசம்பந்தர் 16,000 பாடல்கள் பாடினர் என்பர் திருமுறை கண்ட புராண ஆசிரியர். அது போலவே, அருணகிரிநாதரும் 16,000 பாடல்கள் பாடினர் என்பர்.

கந்தன் புகழ் பாடும் சந்தத் திருப்புகழில் இதுவரை அச்சேறியவை 1307. இவற்றுள் அமைந்துள்ள சந்த வகை 1008 என்பது வியத்தகு சிறப்பாகும்.

''தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தத்தத் தனதானு''

என்னும் சந்தத்தில் அமைந்தது கீழ்வரும் திருப்புகழ்.

''சுத்தப் பத்திச் சித்ரச் சொர்க்கச்
சொர்க்கத் தத்தைக் கினியோனே''

மெல்லோசையே மிகுந்து,

''தந்தந் தனந்த தந்தந் தனந்த
தந்தந் தனந்த தனதானு

என்ற சந்தம் அமைந்த திருப்புகழ்

''ஐந்திந் த்ரியங்கள் வென்றுன் றுமன்ப
ரங்கம் பொருந்து மழகோனே''

என்பதாகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேக்கிழார் பெருமானும் சிவபரம் பொருளே அடியெடுத்துத் தரப் பாடியமைபோல, அருணகிரியாரும் செவ்வேள் எடுத்துரைத்த செஞ்சொல்லால் பாடியவர்.

''முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிரை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோது

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மற்றைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புரை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே''

என்பது அப்பாடல்.

இந்தப் பாடலே சந்தமிகு செந்தமிழாய்க் கேட்போர் சிந்தையிலும் செவியிலும் தேன் பாய்ச்சும் தன்மையதாய் விளங்குகிறது.

இசை ஞானியாராகிய அருணகிரிநாதர் முருகவேளின் தண்டையொலி, சதங்கையொலி, கிண்கிணியொலி, சிலம்பின் ஒலி இவற்றினின்றே சந்தத் தமிழின் இலக்கண நுணுக்கங்களையெல்லாம் நன்கறிந்தார்.

''இசைத்திடும் சந்தபேதம்
ஒலித்திடும் தண்டைசூழும் இணைப்பதம்''

''சதங்கை தருகீதம்''

''நாதகீத கிண்கிணி''

''இனியநாதச் சிலம்பு''

இத்தகைய திருப்புகழ்த் தொடர்கள் செவ்வேளின் 'சிலம்பும் சதங்கையும் தண்டையும்' எழுப்பும் ஓசைக்கேற்ற சந்த வேறுபாடுகளோடு அருணகிரிநாதர் முருகனது புகழை இசைத்தார் என்ற உண்மையைப் புலப்படுத்துவன.

தாள நூலின் நுட்பமெல்லாம் உணர்ந்தவர் அருணகிரிநாதர். இன்னிசை முரசம் இயம்பும் ஒலியிலும் பன்னிரு கையனின் திருப்பெயரே கேட்கிறது அவருக்கு

''குமர குருபர குமர குருபர
குமர குருபர எனதாளம்
குரைசெய் முரசம்,,

என்று பாடுகிறார்.

''வாளவரி கோளபுலி கீளதுரி
தாளின்மிசை நாளுமகிழ்வர்''

என்பது போன்ற ஆளுடைய பிள்ளையாரின் அருட்பாக்களில் சந்த இன்பம் மேலோங்கி நிற்கும். எனினும் அருணகிரியாரின் சந்தப் பாக்களில் ஒரு தனிச்சிறப்பு உண்டு. அது 'தொங்கல்' எனும் உறுப்பாகும். பாடல்களின் முடிவுகளில் ''பெருமாளே'', ''தம்பிரானே', என்று அமைவது இத்தொங்கல் என்றும் சிறப்பான உறுப்பாகும்.

இங்ஙனம் 'தொங்கலுடன் பாடுக' எனக் குறிப்பாலருளியவர் குமரவேளே என்று கருதுவர் தணிகைமணி வ. சு, செங்கல்வராய பிள்ளை. 'முத்தைத்தரு' என்னும் திருப்புகழில் முருகப் பெருமான் 'முத்தைத்தரு' முதல் 'எனஓது எனும் தொங்கல் வரை எடுத்துக் கொடுத்து, 'ஓது' என்பதை ஏவல்வினையாக - 'ஓதுவாயாக' என அருணகிரியார்க்குக் கட்டளையிட்டுத் ':தத்தத்தன தத்தத் தனதன'' என்னும் சந்தத்துக்குத் ''தனதான'' என்னும் ஒரு தொங்கலையும் பூட்டிக் காட்டினர் போலும். அங்ஙனம் அமைத்துத் தந்த தொங்கல் தங்கச்சங்கிலிக்கு ஒரு வயிரப்பதக்கம் போன்று பொலிவைத் தருகிறது,

அடியெடுத்துத் தரப் பெற்ற அருணகிரிப் பெருமான் அடங்கா மகிழ்வோடு, 'என ஓது' எனும் ஏவல்வினையையே பெயரெச்சமாகக் கொண்டு 'எனஓது' முக்கட் பரமற்கு எனப் பாடலைத் தொடர்ந்து முடித்தனர் போலும்.

அருணகிரியாரின் மற்றொரு தனிச்சிறப்பு எடுத்துக்கொண்ட தலத்தின் பெயருக்குப் பொருத்தமாகச் சந்தம் அமைத்துக் கொள்வதாகும். எடுத்துக்காட்டாக, 'விருத்தாசலம்' எனத் தலப்பெயர் வரும்பாடலை 'முடத்தாமரை' எனவும், 'மதுராந்தகத்து' என ஈற்றடி அமைய வேண்டியவிடத்து 'சயிலாங்கனைக்கு' எனவும் எடுத்துப் பாடியுள்ளமை காணலாம்.

சந்தம் எதுவாக இருப்பினும் கந்தவேள் திருப்பெயர்களைத் தடைபடா நடை நலத்துடன் தொடுத்தமைப்பது அவர்தம் சிறப்பு.

''குமர! குருபர! முருக! சரவண! குக! சண்
முக! கரி பிறகான
குழக! சிவசுத!''
'' வேந்த! குமார! குக! சேந்த! மயூர! வட
வேங்கட மாமலையி லுறைவோனே! ''
''சரவண! கந்த! முருக! கடம்ப!
தனிமயில் கொண்டுபார் சூழ்ந்தவனே!''

என்பன முருகன் திருப்பெயர்களை மிடுக்கு நடையில் அடுக்கிச் சொல்லும் சந்தப்பாடல்கள்.

வாழையடி வாழையென வந்த அருட்கவிஞர் மரபிலே தோன்றிய அருணகிரியார் வாக்கில் நால்வர்தம் கருத்தும் சொல்லும் பொருத்தமுற அமைந்திருப்பதைக் காணலாம்.

திருமுதுகுன்றத்துத் திருப்பதிகத்தில் ஞானசம்பந்தர் ஓர் அழகிய காட்சியைப் பாடுவார்.

''திறங்கொள்மணித் தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமிமார்கள்
முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே''

இதே முதுகுன்றத்துத் திருப்புகழிலே இதே கருத்தை அமைத்துப் பாடுவார் அருணகிரியார்.

''முழுகிய புனலில் இனமணி தரளம்
முறுகிடு பவளம் மிகவாரி
முறையொடு குறவர் முதுமகள் சொரியும்
முதுமலை ''

என்பது அவர் பாடல்.

''காமியஞ் செய்து காலங் கழியாதே''

என்ற அப்பர் அருளுரை

''காமியத் தழுந்தி இளையாதே''

எனவும்,

''நமனை அஞ்சோம்''

என்ற வீரவுரை

''மரணப்ரமாதம் நமக்கில்லையாம்''

எனவும்,

அந்தணனுள் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக''

என்ற நம்பியாரூரரின் நம்பிக்கைக்குரல்

''அந்தகனும் எனையடர்ந்து வருகையினில்
அஞ்சல் எனவலிய மயில்மேல்நீ

அந்தமறவியொடு கந்தமனி தன்நும
தன்பன் எனமொழிய வருவாயே''

எனவும்

''தோழனுமாய் யான்செய்யும்
துரிசுகளுக் குடனுகி''

என்னும் கருத்து

'' என்
பிழையுடன்பட்டுப் பத்தருள் வைக்கும்
பொறையையென் செப்பிச் செப்புவது''

எனவும்,

''வேண்டத் தக்கது அறிவோய் நீ;
வேண்ட முழுதும் தருவோய் நீ''

என்னும் மணிவாசகர் கருத்து

''இறைவா எதுதா அதுதா''

எனவும் அருணகிரியார் வாக்கில் இடம் பெறுதல் காணலாம்.

இறைவன் தமக்கு நல்லவாகிய தனுகரணங்களைத் தந்தமை அவனைத் தமிழாற் பாடுதற் பொருட்டே என்பதை,

''என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யு மாறே''

எனப் பாடுவர் திருமூலர்.

முருகப் பெருமான் தமக்குச் சந்தத் தமிழை அருளியது அவனது திருவடி மலர்களைப் போற்றுதற்காகவே என்பர் அருணகிரியார். மயிலேறி விளையாடும் பெருமான் அவருக்கு அரிய தமிழை அருளினுன். அவ்வாறு அருளியது ஒவ்வொரு நாளும் அச்செவ்வேள் மலரடி தொழுதற் பொருட்டே.

''அருணதள பாதபத்மம்
அதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த
மயில்வீரா!''

என்பது சந்தக் கவிக்கொண்டலின் வாக்கு.

''தணிகை மலைமேவு பெருமாளே!
நோய்கள் பிறவிகள்தோறும் எனைநலியாத
படியுன தாள்கள் அருள்வாயே''

எனும் திருப்புகழைப் பாட முருகன் அருளால் நோய் நீக்கமும்,

''இதயந் தனிலிருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்கலங்க அருள்வாயே''

எனும் பாடலைப் பாடக் கவலை நீக்கமும்,

''நாளென்செயும்''

எனவரும் கந்தரலங்காரப் பாடலைப் பாடத் துன்ப நீக்கமும்,

''வாழி! இனிப்பிற வாதுநீயருள் புரிவாயே''

என்ற பாடலைப் பாடப் பிறவி நீக்கமும் பெறலாம் என அறிஞர்கள் கூறுவர்.

சுவாமிமலையிலே அவர் அருளிய திருப்புகழிலே சைவ சித்தாந்தத்தின் செம்பொருளாகிய சுத்தாத்துவித நிலையினைக் கண்டு மகிழலாம்.

''நீவேறெ னுதிருக்க நான்வேறெ னுதிருக்க
நேராக வாழ்வதற்குன் அருள்கூர''

(திருப்புகழ். 220)



# நகரத்தார் குலப்பெருமை

SV. AN. அண்ணாமலை செட்டியார்
தேவகோட்டை

தமிழ் நாட்டில் உள்ள சமூகங்களுள் ஏறத்தாழ 4000 ஆண்டுகள் சரித்திரச் சான்றுகளுடன் கூடிய வரலாறு உள்ள சமூகங்கள் மிகச் சிலவேயாம். அவற்றுள் நகரத்தார் வரலாறு மிகச் சிறப்புடையதாகும். ஆதியில் நாக நாட்டில் சந்திரா புரியிலிருந்து காஞ்சீபுரம் வந்து நகரத்தார் தொழில் புரிந்தனர். அதன் பின் சோழ தேசத்திற்கு வந்து அங்குக் காவிரிப்பூம் பட்டினத்தில் குடியேறினர் சந்திரா புரியிலிருந்து காவிரிப்பூம் பட்டினம் வந்து சேர்ந்த வரை ஏறத்தாழ 2500 ஆண்டுகள் கழிந்தன.

காவிரிப்பூம் பட்டினத்தில் குடியேறிய காலத்திற்குப்பின் அவர்கள் மேற்கே கிரீஸ், ரோம் ஆகிய நாடுகளுடனும் கிழக்கே மலேயா, ஜாவா, சுமத்ரா, சீனம் ஆகிய நாடுகளுடனும் ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் செய்து வந்தனர். ரோம் பேரரசில் பாண்டியரின் தூதர் இருந்ததனுலும், யவனர் [கிரீஸ் நாட்டினர்] தமிழ் அரச குடும்பங்களில் காவலர்களாக இருந்ததனுலும் கிரீஸ், ரோம் நாட்டுடன் தமிழர் தொடர்பு இருந்தது தெளிவு, இரத்தினங்களும், பவளமும், ஏற்றுமதி யானதிலிருந்தும், நகரத்தார்களுடைய வாணிபம் இரத்தின வியாபாரமாக இருந்ததனுலும் நகரத்தார் ரோம் கிரீஸ் நாடுகளுடன் வாணிபத்தொடர்பு வைத்து இருந்தனர் என்பது தெளிவாகிறது.

மலாக்காவில் கி.பி. 1510ல் போர்த்துகீசிய அரசை நிறுவிய டி' அல்புகுர்க் என்ற போர்த்துகீசியர் தனது அரசாங்கத்தின் அலுவல்களுக்காக அந்தரங்கமான சொந்தக் குறிப்புகள் தயாரித்து வைத்திருந்தார். இந்தியாவில் பிரஞ்சு அரசின் கவர்னர் ஜெனரல் டூப்ளேயின் திவானுக இருந்த புதுச்சேரி திரு ஆனந்த ரங்கம்பிள்ளை இம்மாதிரி அந்தரங்கக் குறிப்புகள் வைத்திருந்ததை நாம் அறிவோம். அதே போன்று டி' அல்புகுர்க் என்னும் இப்போர்ச்சுகீசிய கவர்னர் ஜெனரல் வைத்திருந்த குறிப்புகளை பிரசித்தி பெற்ற ஆங்கில சரித்திரப் பேராசிரியர் ரிச்சர்ட் வின்ஸ்டெட் என்னும் அறிஞர் ஆராய்ந்து 'மலாயா சரித்திரம்' என்ற நூலை வெளியிட்டார். கி.பி. 1000ம் ஆண்டிலிருந்து ஏறக்குறைய 1000 ஆண்டு தமிழ்நாட்டின் சரித்திரத்தை ஆங்கிலேய முறைப்படி தேதி புள்ளி விபரங்களுடன் துல்லிதமாக அவர் வெளியிட்டார். பிரசித்தி பெற்ற சோழப்பேரரசர் ராஜராஜ சோழன் மலேயாவில் கடாரத்தை வெற்றி கொண்டதனல் சர் ரிச்சர்ட் வின்ஸ்டெட்டு கி.பி. 1000ம் ஆண்டிலிருந்து தமிழ் நாட்டின் சரித்திரத்தை ஆராய்ந்து வெளியிடவேண்டிட அவசியம் ஏற்பட்டது. அச் சரித்திரத்தில் நகரத்தார் முக்கிய இடம் பெற்றனர். மேலும் அதில் ஆங்கிலேயர் சரித்திரம் எழுதிய முறைப்படி 1000 ஆண்டுகளுக்கு முன் உள்ள நகரத்தார்

பற்றிய செய்திகள் துல்லிதமான தேதி விபரங்களுடன் நமக்கு கிடைத்துள்ளன.

அவர் எழுதிய குறிப்பின்படி 1000 ஆண்டுகளுக்கு முன் நகரத்தாரைப் பற்றித் தெரிய வரும் விபரங்களாவன:

1. நகரத்தார் தெற்கு, தென்கிழக்கு நாடுகளில் மிகப்பெரிய செல்வந்தர்களாக இருந்தனர்.

2. காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து கிழக்குஆசிய நாடுகளுடன் கப்பல்மூலமாக வாணிபத் தொடர்பு வைத்திருந்தனர்.

3. முதலில் மலாக்காவிலேயே குடியேறினர்.

4. வெள்ளை வேட்டியில் தார்பாச்சுடன் கட்டிக் கொண்டு துண்டு போட்டுக் கொண்டனர். மேலே சட்டை அணிவதில்லை. பெரும்பாலும் ஸ்தூல சரீரிகளாக இருந்தனர்.

5. மலாக்காவின் இந்து அரசனால் வெகு சிலரே ஓட்டு வீடுகளில் வசிக்க அனுமதிக்கப்பட்டனர். அவர்களுள் நகரத்தார் முக்கியமானவர்.

6. அவர்களுக்கு சொந்தக்கப்பல்கள் இருந்திருக்கக் கூடும். அவை மிகப்பெரியதாகவும் பெரும் அளவில் வாணிபச் சரக்குகளை சுமந்து செல்லக் கூடியதாகவும் ஒரே சமயத்தில் 600 பேரை ஏற்றிச் செல்லக் கூடியதாகவும் இருந்தன.

இத்தகைய சீரும் சிறப்புடன் வாழ்ந்த நகரத்தார் பிறகு பாண்டிய தேசம் வந்தார்கள். ஒன்பது கோவிலாகப் பிரிந்தார்கள் என்பது போன்ற அதன் பின் உள்ள சரித்திரம் நாம்அறிவோம். கி பி 1947க்கு பிறகு கொஞ்சம் தாழ்ந்திருந்த இந்த சமூகம் மறுபடியும் ஓங்கி வளரத் துவங்கியுள்ளது. ஆதியில் ரோம், கிரீக் நாடுகளுடன் வாணிபம் செய்த நகரத்தார்கள் இப்போது அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற பொருள்வள நாகரீகம் பெருகிய மேற்கு நாடுகளில் இஞ்சினியர்களாகவும், டாக்டர்களாகவும், அரசாங்க, பாங்கு நிர்வாகிகளாகவும், சிலர் வணிகர்களாகவும் இருந்து செழிப்புடன் வளர்ந்து வருகின்றனர். மற்றபடி உள்நாட்டில் தொழில் அதிபர்களாகவும், புரவலர்களாகவும், அறிஞர்களாகவும் மற்றும் உத்தியோகம் பார்ப்பவர்களாகவும் இருந்து வருகின்றனர்.

சமூக அமைப்பில் சில கேடுகளும் வளர்ந்து வருகின்றன. மாமியார் சாமான் ஸ்ரீதனம், மாப்பிள்ளை சாமான் என்பது போன்ற சீர்வரிசைகள் அளவிற்கு மீறி வளர்ந்து கொடுமைப் படுத்தும் வாய்ப்பு கூடிக்கொண்டே வருகிறது. இளைஞர்கள் பொறுப்புணர்ச்சியுடன் தொழில்துறை, படிப்பு, உத்தியோகம் முதலியவற்றில் ஈடுபாடு கொள்வதில்லை வயோதிகர் பராமரிப்பு குறைந்து வருகிறது. இக்கேடுகள் களையப்படவேண்டும். ஆடம்பரச்செலவுகள் குறைய வேண்டும். நகரத்தார்களின் ஊக்கத்தையும் வளரும் பான்மையையும் நோக்கும் போது கால கட்டத்தில் இக் கேடுகள் நீங்கும் என நம்புவோமாக. ஏறத்தாழ 4000 ஆண்டுகளுக்கு மேலான நகரத்தார்களின் சீரிய வாழ்வு இன்னும் சிறந்தோங்க எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறேன்.

எனது இனிய நண்பர் டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள் நகரக்கோயில்கள் ஒன்பதில் ஒன்றாகிய ஸ்ரீ வயிரவன் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா 31—1—82 அன்று நடப்பது பற்றி எனக்கு எழுதி இருந்தார்கள். இப்புனிதவிழா சிறப்புற நடைபெறவும் வயிரவன்கோவில் நகரத்தார்கள் எல்லா நலன்களுடன் வாழவும் இதன் தொடர்பாக வெளியிடப் பெறும் சிறப்புமலர் நல்ல கருத்துகள் அடங்கிய கருவூலமாகத் திகழவும் எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்தித்து வாழ்த்துகிறேன்.

★



# அ. நா. குடும்பத்தினர் அறப்பணி

— ராம. அ. இராமனுதன், எம்.ஏ.,
கண்டனூர்

**வயிரவன் கோயில்:-** கேரள சிங்க வள நாடான ஏழகப் பெருந்திருவான வீர பாண்டியபுரம் என்னும் சிறப்புடையது வயிரவன் கோயில். இங்கு வானளாவ உயர்ந்து நிற்கும் இராஜ கோபுரம் நம்மைக் கவரும். இவ்வூரின் இயற்பெயர் மறைந்து விட்டது. கோயிலில் திகழும் வயிரவமூர்த்தியின்பெயரால் இவ்வூருக்கே 'வயிரவன்பட்டி' என்ற பெயர் அமைந்து விட்டது. செட்டிநாட்டிலுள்ள அஷ்ட வயிரவர் தலங்களுள் இஃது ஒன்று. மாத்தூர், நேமம், சூரக்குடி எனப் பிற கோயிலார்களுக்கு ஊர்ப் பெயரால் வழங்கும் மரபு உண்டு. ஆனல், வயிரவன் கோயிலார்க்கு மட்டுமே கோயிலும் கடவுளும்இணைந்த பெயர்வழக்கு உள்ளது. இவ்வூர், அரசவைக் கவிஞர் கண்ணதாசன் பிறந்த சிறுகூடற் பட்டிக்கு அருகில், பிள்ளையார்பட்டிக்குச் சமீபத்தில், குன்றக்குடிக்கு ஐந்து கல் தொலைவில் திருப்பத்தூர்ச் சாலையில் திகழ் கிறது.

**நகரத்தார்கள்:-** வயிரவன் கோயில் நகரத்தார்கள் 1. சிறுகுளத்தூருடையார் 2. கழனிவாசலுடையார் 3. மருதேந்திர புரமுடையார் என மூவகையினர். சிறு குளத்தூருடையார் வகையில் 1 பெரிய வகுப்பு 2. தெய்வநாயகர் (தெய்யனூர்) வகுப்பு 3. பிள்ளையார் வகுப்பு என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. ஏனையவற்றில் பிரிவு இல்லை.

**அறப்பணிகள்:-** வயிரவன் கோயில் நகரத்தார்கள், நம் இந்திய நாடு மட்டு மன்றி மலேயா, பர்மா, சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளிலும் வணிகம் செய்தும், தொழில் துறைகளை மேற்கொண்டும், இறைவனுக்கு உறைவிடம் அமைத்து அறப்பணிகள் ஆற்றி வருகின்றனர்.

''நீர் நுமது என்று இவை
வேர் முதல் மாய்த்து, இறை
சேர்மின் ; உயிர்க்கு அதன்
நேர் நிறை இல்லே''

என்கின்ருர் திருவாய் மொழியில் நம்மாழ்வார். ஆலயங்கள் பல கட்டி ஆணவமின்றி அறப்பணி செய்து வரும் நகரத்தார்களின் தன்னலமற்ற செய்கை, இப்பாடலின் பொருளுணர்ந்தே ஆலயப் பணி மேற்கொண்டனர்என்பதை விளக்கும்

**அ.நா. குடும்பத்தினர்:-** கடவுள் வழி பாட்டிற்கும், கட்டுப்பாட்டிற்கும் புகழ் பெற்ற ஊர் கண்டனூர். சிறப்புக்கள் நிறைந்த கண்டனூரில் வாழ்ந்து வரும் வயிரவன் கோயில் நகரத்தார்கள், அன்ன சத்திரங்கள் ஏற்படுத்தியும், ஆலயங்கள் பல கட்டி திருப்பணிகள் செய்தும், கல்வித் தொண்டு ஆற்றியும் பல்லோர் புகழ வாழ் கின்றனர். அவர்களுள் வயிரவன் கோயில் உருவாக்குவதற்கு உறுதுணையாகஇருந்து ஏறத்தாழ நாற்பது ஆண்டு காலம் வயிரவன்பட்டியிலேயே இருந்து,வயிரவன் கோயிலைக் கட்டிமுடித்த பெருமை, தெய்வ நாயகர் வகுப்பு கண்டனூர் நா.வெ. வகை யைச் சார்ந்த அ. நா. குடும்பத்தினரான

திரு. நா.அ.ராம. இராமசாமி செட்டியார் அவர்களையே சாரும். ஆலயம் கட்டி, அன்னதானமும் அளித்து வரும் அ. நா. குடும்பத்தினரின் அறப்பணிகள் பலப்பல.

''மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே''

என மணிமேகலையில் உண்டி கொடுத்தலைச் சிறப்பிக்கின்றார் சீத்தலைச் சாத்தனார். அன்னதானக் கொடையே கொடைகள் பலவற்றுள்ளும் மிகச் சிறந்தது.

இறை வழிபாட்டிற்கு இன்னலின்றிச் செயல்படுத்துபவர் அந்தணரே. அந்தணர்க்கு அன்னதானம் வழங்குதலேசிறந்த அறம். ஆதலால், அ.நா. குடும்பத்தைச் சேர்ந்த நா.வெ. வெள்ளையன்செட்டியார். நா. அ. அய்யப்பசெட்டியார், அ. நா. அ. அண்ணாமலை செட்டியார் ஆகிய மூவரும் சேர்ந்து; பிரஜோத்பத்தி ஆண்டு (1872 ம் வருஷம்) தைத்திங்கள் 9ம்நாள் மயிலாடும் துறையான மாயூரத்தில், நகரின் நடுவே பட்டமங்கலத் தெருவில், அன்ன சத்திரம் ஒன்று கட்டி அறப்பணி துவக்கினர். அப் பணி இன்றும் செம்மையுடன் நடைபெற்று வருகின்றது

**அ.நா.அன்ன சத்திரம்:-** நகரத்தார் கள் என்றென்றும் நல்ல நிலையில் திகழ வேண்டும் என்ற நோக்கத்தில் நூற்று ஒன்பது ஆண்டுகட்கு முன்னர் துவக்கப் பட்ட மாயவரம் அ.'நா. அன்னசத்திரத் திற்கு, 9–12–1959ல ''மாயவரம் அ.நா. அன்னசத்திரம் வகையரு தருமங் கள்'' என டிரஸ்டு ஒன்று அமைக்கப் பெற்றது.

**டிரஸ்டிகள்:-** கண்டனூர் 1. நா வெ. ராம, 2. நா.அ., 3. அ.நா., ஆகிய மூன்று குடும்பங்களின் பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட ஆண்மக்கள் அனைவரும் இந்த டிரஸ்டின் அங்கத்தினர்கள் நா.வெ. ராம. குடும்பத்தினரில் ஒருவரும், நா. அ. குடும்பத்தினரில் மூவரும், அ. நா. குடும்பத்தினரில் ஒருவரும் ஆக ஐவர் கொண்ட நிர்வாகக் குழு இரண்டு ஆண்டு கட்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பெற்று செயல்படுகிறது. ஐவரில் இருவர்டிரஸ்டின் முழுப் பொறுப்பேற்று அறப்பணி ஆற்றுவர்.

**கருமங்கள் செய்யக் காரணம்:-**
இல்வாழ்வான் ஒருவன் வீணாகக் கழிக்கும் நாளை வழிப்படுத்துவதற்கு ஐம்பெரும் வேள்விகளைச் செய்ய வேண்டுமென்று, பகவத்கீதைக்கு விளக்கம் கூறும்பொழுது கூறுகின்றார் சுவாமி சித்பவானந்தா. அத்தகைய ஐம்பெரும் வேள்விகளாவன: 1. தேவயக்ஞம் — கடவுள் வழிபாடு, 2. ரிஷியக்ஞம் (பிரம்ம யக்ஞம்) —உலக நன்மைக்காக சான்றோர் இயற்றிய நூல்களை ஆராய்ந்து மற்றவர்களுக்கு எடுத்துரைப்பது, 3. பித்ருயக்ஞம் — முன்னோர்கள் எவ்வுலகில் எந்நிலைமையில் இருப்பினும் இன்புற்றிருக்க அவர்களை நித்தம் எண்ணுதல், 4. நரயக்ஞம் — மக்களின் பசிப்பிணியைப் போக்குதல், வாழ்க்கையைப் பண்படுத்துதல், கல்வியை பெருக்குதல். 5. பூதயக்ஞம் — ஆடு மாடு போன்ற உயிர் வகைகளை நன்கு பேணுதல்.

''உணவினின்று உயிர்கள் உண்டா கின்றன மழையினின்றுஉணவு ஏற்படு கிறது. யக்ஞத்திலிருந்து மழை வருகிறது. யக்ஞத்துக்குப் பிறப்பிடம் கர்மம், முறைப் படி கர்மம் (தொழில்) செய்தால் அதுவே யக்ஞமாகிறது'' என்று அறத்தின் இன்றி யமையாமையை உணரலாம்.

ஐவகை வேள்விகளைச் செய்வதால், வேள்விகள் செய்து வரும் குடும்பத் தினருக்குச் செல்வச் செழிப்பும், புகழும் தானே வந்தடையும் என்றுகருதிய அ.நா. குடும்பத்தினர் கீழ்க்கண்ட அன்னதானப் பணிகளை மகிழ்வுடன் நடத்துகின்றனர்.

**நடைபெற்று வரும் அறப்பணிகள்:-**

1. பிராமணர்களுக்கும், தேசாந்திரி பிராமணர்களுக்கும் தினசரி பகல், இரவு சாப்பாடு. அவர்களுக்கு அமாவாசை, துவாதசி தினங்களில் சிறப்பான சாப்பாடு.

2. துலா மாதம் கடமுழுக்குக்கும், முடவன் முழுக்குக்கும் வரும் நகரத்தார்கள் குடும்பங்களுக்கு விருந்துச் சாப்பாடு.

3. அன்ன சத்திரத்தில் இருந்து அருள் வழங்கும் சித்திவிநாயகருக்கும், ஸ்ரீ சுந்தரேசுவரருக்கும் தினசரி அபிஷேகம், நைவேத்யம், பூசை.

4. காவேரிஆற்றுக்குள், துலா மாதப் படித்துறைக்கு எதிரில் இருக்கும் ஸ்ரீ நந்திகேஸ்வர சுவாமிக்குத் தினசரி அபிஷேகம், நைவேத்யம், பூசை.

5. ஸ்ரீ மாயூரநாத சுவாமிக்கு தினசரி நைவேத்யம், அர்ச்சனை — நைவேத்யங்களை தேசாந்திரிகளுக்கு விநியோகம் செய்வது.

6. மாயூரத்தைச் சேர்ந்த திரு இந்தளூர் ஸ்ரீ பரிமள ரெங்கநாத சுவாமிக்குத் தினசரி நைவேத்யம், அர்ச்சனை

7. தில்லையம்பல ஸ்ரீ ஆனந்த நடராசருக்கு வெள்ளிக்கிழமை தோறும் அர்ச்சனை.

அறப்பணிஓங்குக:- எங்குச் சென்றாலும் அன்ன சத்திரமும், வேத பாடசாலையும் அமைத்துத் தருமம் செய்வது நகரத்தார் பண்பு. தேடிய செல்வத்தைப் பலர்க்கும் பல வகைகளில் வழங்க நகரத்தார் தயங்குவது இல்லை. அந்த வகையில் வயிரவன் கோயில் நகரத்தார்களும் பல வகைத் தருமங்கள் செய்து புகழ் பெறுகிறார்கள். அவர்களின் அறப்பணி சிறந்து ஓங்க வாழ்த்துவோமாக! ★

---



## வயிரவப் பதிமருவு சோதியே !

தித்தித்து மதுரம் பழுத்தொழுகு நின்மழலை
செவ்விதிற் செவிம டுத்துச்
செழும்பொழில் கோகிலப் புண்மேனி கருகிடத்
திவ்வியாழ் தலைகு னிதரப்
பத்திக் கதிர்க்கற்றை பெருகிவழி திருமுகம்
பார்த்து முழு மதியம் வெள்கப்
பங்கயப் பூங்குலம் கூம்பியும் வாடியம்
பன்னிலை படைத்து மாழ்க
எத்திக்கு முலவிமெய் யியன்மணங் கமழ்தலால்
இன்னறுஞ் கண்ப கப்போ
திறப்பது குறித்தென உயர்பாத வக்கெலம்பர்
இடைஞான்று கொண்டு புலரச்
சித்திக்கு வித்தான வடிவுடைய அன்னமே
செங்கீரை யாடி யருளே
திருமருவு வயிரவப் பதிமருவு சோதியே
செங்கீரை யாடி யருளே

—வயிரவன் கோயில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்

# செஞ்சொற் கவியின்பம்

நா. ரா. முருகவேள், M.A., M.O.L.
ஆசிரியர் : திருக்கோயில், சென்னை-34.

## முன்னுரை:

மக்களாகப் பிறந்தார் பெற்றுத் துய்த்தற்குரிய இன்பங்கள் பல. அவற்றுள், சிறந்த இலக்கியம் அல்லது கவிதையினைப் படித்து உணர்ந்து மகிழும் இன்பமும் ஒன்றாகும். உலகியல் வாழ்வில் நம்மனோர் எய்தும் இன்பங்களுள், நலன் மிக்கதாய்த் தீமைக் கலப்பின்றித் தூய்மையுற்றுச் சிறந்து திகழ்வது, அழகிய இனிய கவிதை ஒன்றினைப் படித்துச் சுவைத்து, நாம் அடையும் இன்பமே எனலாம். இம் மேலான இன்பத்தினைச் ''செஞ்சொற் கவியின்பம்'' என்று கம்பர் புகழ்ந்து பாடுகின்றார். ''அரசாட்சியாக அறைவேன், கவியின்பு அரசாட்சி இன்பின் உயர் வாம்'' என்பர் பேரறிஞர் வெள்ளகால் சுப்பிரமணியர்.

சிறந்த இனிய கவிதைகளைத் தேர்ந்துணர்வதும், அவற்றைத் திறம்தெரிந்து சுவைத்து மகிழ்ந்து இன்புறுவதும், நாம் நம் மனித வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொள்ளும் வழிகளுள் ஒன்றாகும். ஆசிரியர் திருவள்ளுவர் அறிவுறுத்தியது போல, 'பயில்தொறும் இன்பம் பயக்கும் பண்புடையார் தொடர்புபோல, நவில்தொறும் நயம் பயக்கும் இயல்புடையது' நல்ல கவிதைதான். 'அறிதோறு அறியாமை கண்டற்றால்' என்றதுபோல, நினைத்தொறும் புதியபுதிய உணர்வும், சுவையும் கருத்தும் தோற்றுவித்துக் கற்பாரைக் களிப்பூட்டுதல், கவிதையின் மாண்பாகும்

நலஞ்சிறந்த ஓர் இனிய கவிதையானது, வாழ்வியற்கவலைகளால் வருந்தி நிற்கும் மனங்களுக்கு, நோய்தணிக்கும் மருந்தாகப் பயன்படுகிறது. உலகியற் கொடுமைகளை உணர்ந்து சில்லிட்டுப் போன உள்ளங்களுக்குச் தென்பூட்டி உணர்வளிக்கும் காலைக் கதிரவனின் ஒளி மிகுந்த கதிர்களாக விளங்குகிறது; கொடிய பழிநெறிகளிலேயே பழகி, இழிதகவான நடத்தையே பயின்று கறைபடிந்து போன இதயங்களுக்கு, அழுக்கு அகற்றும் அழகிய தெளிநீர் ஓடையாகத் திகழ்கின்றது. அறிவும், ஆற்றலும் மிக்குப் பண்பட்ட தூய மனங்களுக்கு, அரும்பெறல் இன்ப விருந்தாகச் சிறந்த கவிதைகள் விளங்குகின்றன

## சேக்கிழார் செய்யுள்:

இத்தகைய நல்ல இனிய கவிதைகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் தெய்வ நலம் செறிந்த சேக்கிழார் சுவாமிகள் அருளிய செய்யுள் ஒன்றை மட்டும், ஈண்டு இயன்ற வரையில் கண்டு மகிழ்வோம்:

''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம்உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்''

எனவரும் பெரியபுராணத் திருப்பாடலைச் சிவநேயச் செல்வர்கள் அனைவரும் பெரும்பாலும் அறிந்திருப்பர். பெரிய புராணத்தின்கண் பேரொளி வீசிச்சுடர் விட்டுத் திகழும் சிறந்துயர்ந்த செய்யுள் மணிகள் பலவற்றுள் இஃது ஒன்றாகும். ஆதலின் இதன் சொற்பொருட் சுவை நலன்களை, ஈண்டு இயன்றவரையிற் காண்போம்.

## செய்யுளின் பொருள்:

ஆளுடைபிள்ளையார் ஆகியதிருஞான சம்பந்தர், மூன்றாண்டுச் சிறுகுழந்தையாக இருந்த பொழுது, நீராடிவரப் புறப்பட்ட தம் தந்தையாருடன் தாமும் சென்று, சீர்காழித் தலத்தில் பிரமதீர்த்தக் கரையில் திருத்தோணிச் சிகரம் பார்த்து, 'அம்மே அப்பா' என அழைத்துத் தம் மேலைச் சார்புணர்ந்தோ, சாரும் பிள்ளைமையினாலோ அழுத சமயத்தில், யாவருக்கும் தந்தை தாய் என விளங்கும் சிவபெருமானும் தேவியாரும் எழுந்தருளி, எண்ணரிய சிவஞானத்தை இன்னமுதம் குழைத்து ஊட்டியருளிய நிலையில், அவர் அகில தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும் தாவில் தனிச் சிவஞானசம்பந்தர் ஆயினார் என்னும் செய்திகளை விளக்குவது இச் சிறந்த பெரியபுராணச் செய்யுள்.

''சிவபெருமானின் திருவடிகளையே சிந்திக்கின்ற அருட் செல்வம் பெறுதற்குக் காரணம் ஆகிய நல்ல ஞானத்தையும்; பிறவிக்குக் காரணம் ஆகிய மலமாயா கன்மங்களை அறவே ஒழிக்கின்ற பணிநிற்றலால் எய்தும் உயர்ந்த ஞானத்தையும்; ஒப்பு இல்லாத முழு நிறைவான கலைஞானத்தையும்; தேவரும் முனிவரும்கூட உணர்தற்கு அரிய உண்மை ஞானத்தையும்; முதன்மையான தவப்பேற்றினையுடைய ஆளுடையபிள்ளையார், தமக்கு அம்மையப்பர் ஞானப்பால் ஊட்டியருளிய அந்நிலையிலேயே உணரப்பெற்றார்.''

என்பது, மேற்குறித்த பெரியபுராணச் செய்யுளின் திரண்ட பொருள் ஆகும். 'நவில்தொறும் நூல் நயம்போலும்' என ஆசிரியர் திருவள்ளுவர் குறிப்பிட்டதற்கு ஏற்ப, இச்செய்யுளை நுணுகி உணருந்தோறும், இனிய பல சிறந்த கருத்துக்கள் தோன்றுதல் காணலாம்.

இச்செய்யுள் நாற்சீர்களான் இயன்ற கலிவிருத்தம். 'நாடிய சத்திநிபாதம் நாலு பாதம்' என்றபடி, மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம்என நான்குவகைப்படும் சத்திநிபாதத்துள், ஆளுடையபிள்ளையார் மிக மேலான ஞானநிலையினை எய்துதற்கு உரியவராக, நாலாம் சத்திநிபாதம் முற்றிய நிலையில் சிறந்து திகழ்ந்தார் என்பதனைக் குறிப்பிக்க, ஆசிரியர் சேக்கிழார் பெருமான், இச்செய்யுளை நாற்சீர்களால் அமைத்தருளிய அருமைப்பாடு அறிந்து மகிழ்தற்குரியது.

## திருப்பெருகு சிவஞானம்:-

வீடுபேற்றின்பம் எய்துதற்குரிய தவ நலம் மிக்குடையவராய்ப் பிறந்த மெய்யடியார்கட்கு, அப்பிறப்பில் 'தெய்வம் என்பதோர் சித்தம்' உண்டாதலும், அத்தெய்வமும் ஏனையோரல்லர் சிவபெருமானே எனத் தெளிதலும் ஆகிய ஞானம் ஒரு தலையாக நிகழும். ஆளுடையபிள்ளையாருக்கு அத்தகைய ஞானம் நிகழ்ந்ததனால் விளைந்த சிந்தனையைச் '*சிவனடியே சிந்திக்கும்*' எனவும், அச்சிந்தனையால் தொட்டனைத்தூறும் மனற்கேணி போல மேன்மேலும் சிறந்த பல நலங்கள் வளர்ந்து பெருகுதலின் '*திருப்பெருகு*' எனவும்; நான்என்னும் முனைப்புச் சற்றும் இன்றிச் சிவனருளே துணையாகக் கொண்டு ஒன்றி நின்று சிந்தித்தலின், அவ்வுணர்வினைச் '*சிவஞானம்*' எனவும் ஆசிரியர் சேக்கிழார் குறிப்பிட்டருளினர். 'சிவனடியே' என்பதில் ஏகாரம் பிரிநிலை நம்மனோர் போல, அஞ்ஞானம் விளைவிக்கும் பிற பொருள்களைச் சிந்திக்காமல், ஞானம் விளைவிக்கும் சிவபிரான் திருவடியினையே ஆளுடைய பிள்ளையார் சிந்திக்கப்பெற்றார் என்பது கருத்து. நற்பொருள்களைச் சிந்திக்கும் வாய்ப்பும் வசதியும் பெறுதலே, ஒரு சிறந்த நற்பேறு ஆதலில், சிந்தித்தலையே'*திரு*' என்றார்.

இறைவன் சிந்திப்பரியவன். சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிபவன். சிவஞானசித்தியர் ''சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ் ஒளிபோல மருவி, அரன் உள்த்தே வர வர வந்திடுவன்'' எனக்

கூறுவதற்கு ஏற்ப, தன்னை இனிது சிந்தித் திருப்போர் உணர்வின்கண் சிவபரம் பொருள் படிப்படியே வந்து அமர்ந்து நிலைபெற்று விளங்கித் திகழ்தலின், அச் சிந்தனையுணர்வு, 'சிவஞானம்' எனப் பட்டது. பிற்கூறப்பெறும் ஞானங்களும் சிவஞானமேயாதலின், ஈண்டுச்சிவஞானம் என்றதனை நல்ல ஞானம் என்னும் பொருளுடையதாகக் கொள்ளுதலும் அமையும். 'சிவம்' நன்மை எனப்பொருள் படும்.

## பாங்கினில் ஓங்கிய ஞானம்:-

மேற்குறித்த சிவனடியே சிந்திக்கும் சிந்தனைக்குப் பின்னேநிகழ்வதாதலாலும் பவத்தினை ஒழித்தற்கு இன்றியமையாத தாகலானும், இறை பணியில் நிற்றலை யுணர்த்தும் ஞானத்தை **'பவமதனைஅற மாற்றும் ஞானம்'** எனவும், அஃது யாகம் முதலிய கன்மப் பயன்கள் போல, அனுபவ மாத்திரத்தால் அழிந்தொழியும் இன்பங் கள் போலாமல், அழியாத வீடுபேற்றின் பத்தை தவறாது அளிக்க வல்ல தன்மை யது ஆதலின், **'பாங்கில் ஓங்கிய ஞானம்'** எனவும் சிறப்பிக்கப் பெற்றது.

தானம் யாகம் முதலிய கன்மப் பயன் கள் விரைவில் அழிந்தொழியும் தன்மை யன என்பதும் சரியை கிரியை யோகம் முதலிய இறை பணி நிற்றலினாலேயே அழியாத வீடுபேற்றின்பம் அடையலாம் என்பதும், ''தானம் யாகம் தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள் சாந்தி விரத கன்ம யோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சுவர்க்கம் பெற்றும் இமைப் பளவின் மீள்வர்; ஈசன் யோகக்கிரியா சரியையினில் நின்றோர் ஊனமிலா முத்திபதம் பெறுவர்'' எனவரும் சிவஞானசித்தியார் செய்யுளால் உணரப்படும். பவம்-பிறவி. அஃது ஈண்டுப் பிறவிக்குக் காரணமான ஆணவம் மாயை கன்மம் என்னும் மலங்களை உணர்த்தியது. அறமாற்றல், வேரறுத்தல், 'மதனுடை நோன்றாள்' என்புழி 'மதன்' என்பது அறியாமையைக் குறிக்கும் ஆதலின், 'பவ மதனை' என்ப தற்குப் 'பிறவிக்குக் காரணமான அறியா மையை' எனவும் பொருள் கூறலாம். (பவம் + அதனை ; பவம் + மதனை). பாங்கு-முறைமை, உரிமை. பணிசெய்தல் சிந்தனைக்குப் பின் நிகழும் முறைமை யதாதலின், பணிசெய்தலைப் **பாங்கு** என்றார். சிந்தித்தலால் நிகழும் தொடர் பினும், பணிசெய்தலால் பெறும் தொடர்பு உரிமை மிக்கதாதல் பற்றி, அதனைப் **பாங்கு** என்றார் எனினும் அமையும்.

'பாங்கு' என்பது உரிமையும் பணி செய்தலும் குறித்தலை ''ஆங்கவர்க்கே பாங்காவோம், அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய் பணிசெய்வோம்'' எனவரும் திருவெம்பாவைத் திருப்பாட லால் தெளியலாம். ஞானமானது **ஓங்கிய ஞானம்** ஆவதற்குப் பணி ஏதுவாயிற்று. பிறவிப் பிணியை அறவே மாற்றுதலில் சிந்தனையைக் காட்டிலும், பணிசெய்தல் ஓங்கிச் சிறந்தது எனவும் கொள்ளலாம். பணி செய்தலினால் பவம் அகலும் என்னும் உண்மை, இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே எனவரும் சிவஞானபோதச் சூத்திரம் கொண்டு தெளியப்படும். தலங்கள்தோறும் சென்று இறைவனைத் தரிசித்துத் திருப் பதிகம் பாடுதல், ஆளுடைய பிள்ளையார் செய்த அரும்பணியாகும். திருப்பதிகம் பாடுதல் ஆகிய திருத்தொண்டின்தெளிவே ஈண்டு **'பாங்கினில் ஓங்கிய ஞானம்'** என ஆசிரியர் சேக்கிழார்சுவாமிகளால் அழகுற விதந்து சிறப்பித்துக் குறிப்பிடப்பெற்றது.

## உவமையிலாக் கலைஞானம்:-

எண்ணிறந்தனவாக உள்ள வேதாக மங்களையும், எனைய பல கலைகளையும் ஓதியுணர்தல் தானே, எத்தகையோர்க்கும் அரிதாக இருப்ப, ஓதாமலே எல்லாக் கலை களையும் ஒருங்கே முற்றிலும் உணர்ந்த துடன்,

''பன்மறையோர் செய்தொழிலும்
பரம சிவா கமவிதியும்,
நன்மறையின் விதிமுழுதும்
ஒழிவின்றி நவின்றனையே''

என நம்பியாண்டார் நம்பிகள் பாடுதற்

கேற்ப, வேதாகமங்களின் வியன்பெறும் பிழிவான கருத்தின் சாரங்களையெல்லாம் ஒருங்கே நிரந்தினிது தொகுத்துத் தம் முடைய திருப்பதிகங்களில் எல்லாம் அமைத்துப்பாடும் அரும்பெறல் ஆற்றலும் ஆளுடையபிள்ளையார்க்கு வாய்த்தமை யின், 'உவமையிலாக் கலைஞானம்' என வியந்தோதினார் ஆசிரியர்.

'உவமையிலா' என்ற அடைமொழித் தொடர், கலைஞானத்தை மட்டுமே விசேடித்து நில்லாமல் அதனை ஓதாதே உணர்ந்து கைவந்த ஆளுடைய பிள்ளை யாரின் ஈடும் எடுப்புமற்ற இயல்பினையும் இனிது உணர்த்தி நின்றது ஏனைய உலகியற் கலைஞானங்களுக்கெல்லாம் மேம்பட்டு உயர்ந்த தத்துவ ஞானத்தினை 'உவமையிலாக் கலைஞானம்' என உயர்த்துரைத்தார் எனினும் பொருந்தும்.

ஆளுடையபிள்ளையார் 'பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பக்தி பண்ணும் தொண்டர் ஆகிய சாமுசித்தர் ஆவர். ஆதலின் அவர் முன்புசெய் தவத்தின் ஈட்டம் மிக்குடையவராகப் பிறங்கி ஒளிர்ந்தனர். எனவே முற்பிறப்பு களிலேயே அவர் கலைஞானங்களெல்லாம் கைவரப் பெற்றிருந்தார். செவ்விமுதிர்ந்த தாமரையின் நாள் அரும்புகளை ஞாயிறா னது அலர்த்துங்கால், முன்னால் அலர்த் தப்பட்டு இரவிற் குவிந்திருந்த மலர்களும் அவற்றின் இடையில் தாமே விரிந்து மலரும். அதுபோல 'பிரளயாகலருக்கு முன்னுணர்த்தும் தான் குருவாய் முன்' எனச் சிவஞானபோதம் கூறுவதுபோல, நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலியன அமைந்த தனது இயற்கை வடி வினையே குருவடிவமாகக் காட்டி, முன்னே நின்று சிவபெருமான் அருள்புரிந்தபொழுது, ஆளுடையபிள்ளை யாரது அறிவின்கண் ஏனைய ஞானங் களோடு, கலைஞானமும் இடையே போந்து இயல்பாக மலர்ந்தது.

இக்குறிப்பை நம்மனோர் உய்த் துணர்ந்து கொள்ளுமாறு வைப்புமுறை யால் விளக்குதற் பொருட்டே, கலை ஞானம் தொடக்க நிலைக்கு உரியதாகவும் அதனை முதலிற் கூறாமல்இடையில் கூறியருளினர் ஆசிரியர்.

இனி, இந்த ஞானங்களையெல்லாம் ஆளுடைய பிள்ளையார் ஏனையோரைப் போலச் சாதன வகையால் ஒன்றின்பின் ஒன்றாகப் படிமுறையே யன்றி, ஒருங் கெய்தினர் என்னும் பெரு வியப்பிற்குரிய செய்தியின் பெற்றி உணர்த்துதற்கே, ஆசிரியர் இங்ஙனம் ஞானத் திறங்களை நிலைமாற்றிக் கூறியருளினர் எனினும் அமையும்.

## உணர்வரிய மெய்ஞ்ஞானம்:-

ஆளுடைய பிள்ளையார் பெற்றுப் பிறங்கிய மெய்ஞ்ஞானம், தேவர் முனிவர் என்பவர்களாலும் இற்றென எண்ணி யுணர்தற்கும் அரிய சிறப்புடையதாகலின், அதனை 'உணர்வரிய மெய்ஞானம்' என விதந்து ஓதினார். ''அகில தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருள் ஆகும் தானில் தனிச் சிவஞானம்'' என இம் மெய்ஞ்ஞானத்தினை, ஆசிரியர் சிறந் தெடுத்துக் குறிப்பிட்டிருத்தலும் ஈண்டுக் கருதியுணரற்பாலது. அனுபூதி ஞானத்திற் சுட்டுணர்வு கெட்டொழிதலின், அதுபற்றி 'உணர்வரிய' என்னும் அடைமொழி புணர்த்து ஓதியருளினார் எனலுமாம்.

இனி மெய் என்பது சிவசத்து ஆகிய இறைவனைக் குறிப்பதாகக் கொண்டு, 'உணர்வரிய' என்பதனை இறைவனுக்கு அடைமொழியாக்கலும் ஒன்று. 'உணர் வரிய மெய்' என்பது 'பசு ஞான பாச ஞானங்களால் உணரப்படாத கடவுள்' எனப் பொருள்படும். 'ஊனக்கண் பாசம் உணராப்பதி' என்னும் சிவஞான போதமும், 'பாசஞானத்தாலும் பசுஞான தாலும் பார்ப்பரிய பரம்பரன்' என்னும் சிவஞான சித்தியாரும், 'பாசமாஞானத் தாலும் படர்பசு ஞானத்தாலும் ஈசனை யுணர ஒண்ணாது' என்னும் சிவப்பிரகாச மும் இப்பொருளை வலியுறுத்தும்.

'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்' என்னும்திருச்சிற்றம்பலக்கோவையார்(8) செய்யுளில், 'ஒரு கால் தன்னை உணர்ந்

தார்க்குப் பின் உணர்தற்குக் கருவியாகிய சித்த விருத்தியும் ஒடுங்குதலின் மீட்டு உணர்தற்கு அரியவன்' எனவும்; தவத்தாலும் தியானத்தாலும் எல்லாப் பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியவன்' எனவும் பேராசிரியர் செய்திருக்கும் விளக்கமும், ஈண்டு நாம் அறிந்து இன்புறுவதற்குரியது.

இங்ஙனம் உயிர்களெல்லாம் எண்ணிறந்த பல பிறவிகளாற் படிமுறையே ஏத்துதற்குரிய இவ்வகை ஞானங்களையெல்லாம், இடையீடின்றி ஆளுடைய பிள்ளையார் ஒருங்கே பெற்றனராதலின் **'அந்நிலையில்'** எனவும்: இவற்றைப் பெறுதற்குரிய நிலையில் எண்ணில்லாத பல பெருந்தவங்கள் செய்திருந்தமையின் **'தவமுதல்வர்'** எனவும், ஆசிரியர் சேக்கிழார்பெருமாள் அருளிச் செய்தனர்.

## முடிவுரை:-

''எல்லையற்ற பல பொருள் நுட்பக் குறிப்புக்களை யுணர்த்திக் கொண்டு செல்லவல்ல தன்மையதாதலே, சிறந்த கவிதை எனத் தெளியப்படுதற்குரிய சீரிய சான்றாகும். சிறந்த நல்ல கவிதைச் செய்யுள் எதுவாயினும், அதனைச் சுற்றி அளவிடற்கரியதொரு பொருட்குறிப்புச் சூழ்நிலை மிதந்து கொண்டேயிருக்கும். கவிஞன் கருதியதும் கூறியதும் ஒரு கருத்தேயாயினும், அக்கருத்தே மிக விரிந்து பரந்த, அவன் கருதாத வேறு பல இயைபுடைய நற்கருத்துகளையும்தன்கண் பொலியத் தோற்றுவித்துக் கொண்டு திகழும்'' எனப் பேராசிரியர் ஒருவர் (A.G. Bradley) கூறுவர். அதற்கு நாம் மேலே கண்ட சிறந்த பெரியபுராணச் செய்யுள் ஓர் இனிய எடுத்துக்காட்டாகும்.

'ஒரு சிறந்த உயர்ந்த கவிதையினை, நாம் எத்தனை முறைதான் திரும்பத் திரும்பப் படித்தாலும்பாடினாலும், அதன் சுவை ஒரு சிறிதும் குன்றாமல் ஓங்கித் திகழும்' என அறிஞர் ஒருவர் (Robert Frost) இயம்புவர் அவ்விலக்கணத்திற்கும் தெய்வ நலம்செறிந்த சேக்கிழார் சுவாமிகளின் மேலைச் செய்யுள் நல்ல எடுத்துக் காட்டு என்பதில் ஐயமில்லை. எனவே இத்தகைய தெய்வநலம் சான்ற சிறந்த செய்யுட்களை ஓதி, நாம் அனைவரும் இன்புற்று நலம் பெறுவோமாக.



# NAGARATHARS' TEMPLES AND THEIR USES

— Dr. SP. THINNAPPAN

*Dept. of Indian Studies, University of Malaya, Kualalumpur*

The temples which are associated with Nagarathars in Chettinad are of two kinds namely, the nine temples and the local temples. The nine temples are of I layathakudi. Mathur. Vairavanpatti-Nemam, I luppakkudi, Suraikudi, Velan gudi, Pillayarpatti, and Iraniyur which are all in Thiruppathur Taluk, Rama nathapuram district. All these temples-are Siva temples. The local temples are those situated in 78 villages which are the permanent residential places of the Nagarathars. Most of these temples are Siva temples. Apart from these temples there are also temples built by the Nagarathars in the places of their business activities in India and abroad Most of there temples are of Lord Thandayuthapani.

**Uses :**

1. Places of Worship

The Primary use of the Nagarathar temples is that they are their places of worship. The life of Nagarathar is always temples centered The Nagarathars use to go to local temples daily for worship They do not start any activity, social or economical, without worshiping the God.

2. Nine Temples and Gothras - Marriages and Adoptions

The Chief Characteristic feature of the Nagarathar solidarity as a community is the association with nine temples. The Nagarathars have assigned themselves to one or other of the nine temple circles which are divided into Sub-circles and this attachment to a particular sub-temple-circle is equated with a gothram for the purpose of marriage alliance and adoption. The marriage should take place only between different temple-circles while the adoption is from the same temple-circle.

3. Nine Temples and Marriages:

Nagarathars used to begin their marriage invitations by mentioning the names of the presiding God and Goddess of the temple which they belong to. (e g) Due to the graces of Vadivudaiambal and Valarolinathar (The names of the Goddess and God of Vairavanpatti) the marriage is fixed on .

Nagarathars used to mention their temples and divisions in their marriage documents called 'Easaigudi manam'.

Each temple is keeping a record of the marriages, taking place in every year, among the Nagarathars of that temple The marriages of Nagarathars are considered as valid only if the registration in made in the concerned temples two or three days prior to the marriage. As a token of recognition, the respective temples send garlands to the houses of the bride and the bridegroom on the previous day of the marriage.

4. Maintenance of the records of Pullies:

Each of the nine temples is keeping a record of the number of families or pullies of Nagarathars of that temple. Each pulli has to pay some amount every year as tax for the maintanance of the temple. If there is any balance to be paid, it should be collected from the pulli during the time of registration of the marriage. The entries in these records are made under the heads of the villages.

Each of the local temples is keeping a record of pullies of that village for the purpose of collecting tax for the maintenance of the temple. Here also, each pulli has to pay some amount to that temple and as tax. If there is any balance to be paid, it should be collected at the time of death of a person belonging to a pulli. Entries are made in these records under the heads of the divisions of the nine temples.

5. Temple Council- which act as court of Justice:*

Matters such as the arrangement of marriage-contracts, monetary disputes, family discussions and the like are referred to temple councils for settlement. Each of the temple is managed by the **Karyakarars** who are nominated by the local elders. These **Karyakarars** act as Panchayatdars and deside the cases referred to them. Besides the **Karyakarars** as manager each temple has an assistant called **Vairavi** and servant called **Thandalkaran** whose prime duty is to collect tax. The aggrevated party lodges his complaint to the manager, who sends word to the leading men of the temple divisions concerned. The complainant and defendent are summoned to attend a council meeting and the evidence is recorded by the temple manager. If the accused failes to put in an appearance, the **Vairavi** is sent to his house, to take some **adavu** (security) in the shape of some article belonging to him. This is regarded as a great insult to his family. Final decisions are never recorded in writing, but delivered by word of mouth. The councils enforce their decrees 1) by refusing to give the garlands of flower at the marriage time 2) by exercising the power of excommunication.

The influence of the elders in preventing litigation is very strong. They conciliate the disputants as far as possible and after reducing the differences between them to a minimum, they often get their signatures to an award, in which a blank is left to decide the still existing point of difference the disputants agreeing, after putting in their signatures to the mediators filling in the blank, and deciding the dispute as they chose.

Once there were, among the Nagarathars two forms of Panchayats called **Madathuvasal mariyal** (matam Panchayat) and **Kovil vasal mariyal** (temple panchayat). Both these terms denote the protest in front of matam, a common place and temple respectively. The objection should be raised only between the persons of the same temple-circle (Nine temples). The protest was usually raised by the plaintiff against the defendant having witness of another person in front of the temple As soon as the obection was raised, the plaintiff should go to his temple and write about the objection he had raised Then the temple authorities should send this information to the defendant. The

* Thurston. E *Castes and Tribes of Southern India* Vol. V (Delhi : Cosmo Publication, 1975) pp. 262—64

defendant should go to the temple before the closure of the temple on that day. The temple authorities would appoint prominent elderly persons belonging to that temple division as Panchayatdhars or judges to hear the cases of both the parties and make decision. Till this decision was taken the defendant would be prevented from residing and taking food in the common choultry of the Nagarathars of that temple.

6. Temples and Trade

a) Whenever a business was started a Nagarathar used ro write the credits in the new accounts first in the name of the God and Goddess of the temples, his own and of his village.

b) Whenever a business was started a Nagarathar would get apart a certain amount as fund or share in the name of the Almighty. There would be a seperate account for this fund and a separate business also would be started out of this fund and in order to multiply it. It is not exaggeration to say that a Nagarathar evinces as much interest in the business conducted in the name of god as in his own business.

c) Of the profits of the commercial transaction, a fixed percentage is usually set aside for charity. This is called a **magamai**. The income obtained from the trade is generally spent on temples In places like Ceylon Burma and singapore they built new temples generally dedicated to Subramanya Swami. In India itself they have established festivals in existing temples and have undertaken the repairs of the temples. Immense sums have been spent by them recently in the renovation and restoration of ancient temples. The oldest record belonging to the 16th century gives detailed account of a devoted Nagarathar called Kumarappan, a salt tradar, his allotment of a certain percentage of income, in the name of Velaythaswami of Palani, his salt business for God and for himself etc.*

d) The chettiars adopted a current rate of interest and fixed it every Tamil month only at the meetings held in the temples of the important centres like Madras, Rangoon, Singapore, Panang and Colombo. Their terms of business were usually decided only in these meetings held in every month.

e) Temples in abroad are the places in which usually all the Nagarathars meet in the evening daily for exchanging news and information coming through the letters and persons from their native places in India.

f) At times of Calamities natural or otherwise, the Nagarathars use these temples as places of protection and safety. For example, during the second World War, the Nagarathars in Burma and Malaysia took shelter in their temples and at times of floods and riots, those in Malaysia resided in the temples for a short period

g) A grand reception and honour will be accorded to persons of eminence coming from India, only in temples. Such persons are also requested to deliver a series of religious or literary lectures and they will be paid some decent amount in the local currency.

h) The trusts of the temples abroad give financial assistance to the Nagarathars by way of scholarship for higher studies, of meeting the marriage

---

* Manickam. V.SP "The Chettiar Community. Its Contribution to Religion" in Somalay (ed.) *Shri Kasi Nagara Chatram Centenary Souvenier* (Madras Kasi Nattukkottai Nagara Chatram Managing Society, 1963) p. 311

expenses of the poor Nagarathar girls and of aiding the publication of the Translations of the Tamil literary works in the local languages.

i) The temples in abroad encourage the local Nagarathar to conduct functions such as marriages and Shastiabta Purthi celebrations in abroad itself by providing halls and presenting gifts such as new clothes, and golden **ta:li** and rings.

7. Temples and Allied Institution :

Nagarathars have devoted large sums to the establishment of comfortable choultries (rest-houses) all over India, feeding houses, Vedic and recently also sastraic **Patasalas** (schools). They have established schools for the education of the **Kurukkal** or the priestly class **Nanthavanams** (flower gardens) and **Pasumadam** (cow-houses) are maintained by the Nagarathars in the vicinity of the temples at great expense and with good care. **Patasalas** for Vedas and **Thevarams** (Tamil hymns) are constructed as a part of temple administration in order to chant and sing sanskrit and Tamil hymns during daily worship. **Gurupujai Madams,** houses for the worship of the sixty three siva saints were also built by the Nagarathars in important holy places.

8. Provide Employment Opportunity :

Temples and the above mentioned allied institutions provide employment opportunities for many persons. For all the employees, there are free quarters constructed by the Nagarathars around the temple. In every temple there are Nathaswaram Players and drum beaters, Priest, cook, Assistant, watchman and the persons for singing devotional songs etc.

9. Preservation of Dravidian Culture :

The Nagarathars have undoubtedly preserved the purity of the Dravidian culture. The tall gopurams, the excellent works of sculpture, the huge halls of hundred-columns and thousand columns, the golden vimanams and many other characteristically Dravidian symbols of culture would have gone the way of many a north Indian shrine that fell a prey to foreign vandals, if the Nagarathars had not kept constant vigil over their cultural treasures and hastened to set right any damage either through vandalism, disfiguring* repulsine painting and the natural process of weathering. The Nagarathars not only renovated the temples but also arranged for specific endowments for the regular pujas, rituals, festivals and ceremonies connected with the temples. But for their devoted attentions to the twin aspects of renovation and performance of worship in South Indian temples, Tamil Nadu could not have preserved the rich heritage of our ancestors.† Temples constructed by the Nagarathars are useful in not only preserving the Dravidian culture but also in spreading it to the South-East Asian Countries.

10. Local Temple :

a. Social Functions :

The Local temples will be given very much importance at the time of

---

* Reddiar, N. Subbu "The Community that has conserved the Dravidian Culture" in Somalay (ed) *Shri Kasi Nagara Chatram* Centenary Souvenier (Madras: kasi Nattukkottai Nagara Chatram Managing Society, 1963) P, 316

† Uthandaraman, A. 'Natiukkottai Nagarathar's contribution to Hindu Dharma' in Somalay (ed). *Shri Kasi Nagara Chatram Centenary Souvenier* (Madras: Kasi Nattukkottai Nagara Chatram Managing Society, 1963) p. 334

any function in Nagarathar community. The bride or bridegroom of the another village will be invited only from these local temples to their houses in which the marriage will take place. These functions are called **Pennalayppu** and **maappilayalayppu** respectively. The bridegroom should go to temple and worship the god before the important funct on of the marriage i e. tieing of ta:li. Some times Sastiaptapurthi functions will be celebrated in the local or nine temples.

b. The meeting of Nagarathars of a village will be held in the temple to decide about the modifications in the existing rules and regulations regarding social functions and ceremonies according to the needs of time If any one does not obey the modified rules, he will be usually excommunicated.

c. Festivals, Patronage of Fine arts :

The festivals in the local temples provide opportunities for the local people to enjoy the various kinds of entertainments like dance, drama, music, religious lectures and folk arts such as **karagam, poykkal** horse and **ka:vadiya:ttam.** In this way Nagarathars temples patronise the fine arts.

d. Providing drinking water :

In front of each temple in chettinad there will be a tank called **urani** which will provide drinking water for the whole village.

e. Meeting Place :

The persons who are in the village use to meet each other in the local temple during the time of morning or evening pujas and exchange news and their views.

f. Reception :

Reception will be given first only in the local temples those dignitories who visit the villages. ★



# செட்டிமார் விளையாட்டு

— சிந்தனைக் கவிஞர் பெரி. சிவனடியான், எம். ஏ.,



மூவேந்தர் பணிமுடித்து முத்தி யடைந்த பின்னர்
கோவேந்தர் விட்டபணி கொண்டவர்கள் நகரத்தார்
வெண்ணீறும் குங்குமமும் மேனிக்(கு) ஒளியூட்ட
தண்ணீர் மலைவரைக்கும் சாதித்த நற்பணியாம்
சோழ குலமன்னன் தோன்றினல் இப்பொழுது
தாழப் பணிவான் தனவணிகர் பாதத்தில்
பாண்டியரும் பல்லவரும் பக்திப் பெருக்காலே
தீண்டி நகரத்தார் திருத்தோளைத் தழுவிடுவார்
ஓயா உளிச்சத்தம் உலகிற் களித்தவரே
தாயாகி நின்ற தனவணிகச் செம்மல்களே!
கோயிலிலா ஊரில் குடியிருத்தல் குற்றமெனும்
பாவிற்குச் சான்றே பட்டினத்துச் செட்டிகுலம்
ஆலயமும் ஊருணியும் அமைத்த பிறகேதான்
சாலை அமைத்துத் தம்வீட்டைக் கட்டிடுவார்
கோவிற் பிரிவடைத்துக் குடிவளர்த்த நகரத்தார்
ஆவியெனில் அக்குலத்தார்க்(கு) ஆலயந்தான் வேறில்லை.
திரைகடலைத் தாண்டி சேர்த்த பொருளையெலாம்
வரையாது கோயில் வளர்ச்சிக்குத் தந்தவர்கள்
திருப்பணிகள் செய்தல் செட்டிமார் விளையாட்டு
கருவில் வளர்மகவும் கைகுவிக்கும் தாய்வயிற்றில்
ஆச்சிமார் செய்த அறப்பணிகள் கொஞ்சமில்லை
மூச்சுள்ள நேரம்வரை மொய்த்திடுவார் கோயில்களில்
சைவசமயத்தைத் தனித்திருந்து காத்தவர்கள்
வைணவத்தின் நல்ல வளர்ச்சிக் குதவியவர்
தென்புலத்தில் மட்டுமில்லை சென்று வடபுலத்தில்
பன்னூறு கோயில்மடம் படைத்தவர்கள் நகரத்தார்
காசி பிரயாகை கயையோ(டு)அயோத்தி முதல்
நாஸிக் பஞ்சவடி நகரத்தார் பணியுண்டு
வடபுலத்தில் என்ன? மனவுறுதி கொண்டவர்கள்
கடல்தாண்டிக் கூடக் கண்டார்கள் ஆலயங்கள்
இலங்கையில் பர்மாவில் எழிலார் மலேசியாவில்
கலங்கரையின் தீபம்போல் கந்தனுக்குத் திருக்கோயில்
கட்டி முடித்துக் கடவுள் அருள்பெற்ற
செட்டிகுலம் வாழ்க! செழித்து.

குறிப்பு : காரைக்குடி உயர்திரு. அ. சொ. அண்ணாமலை செட்டியார் அவர்களின் மணிவிழாக் கவியரங்கில் பாடியதில் ஒரு பகுதி.



# திருமகள் மாலை

(வெண்பா அந்தாதிப் பதிகம்)

கவிஞர் இராகவன் முத்து, B Sc., Dip. Geog., CAIIB.

## காப்பு

செல்வத் திருமகள்மேல் செய்யும் தமிழ்மாலை
கல்லில் எழுதிவளர் காவியம்போல்—தொல்லுலகில்
என்றும் வளர்ந்துவர ஈசன் தலைமகனே!
ஒன்றிடுவாய் என்றன் உளத்து.

## ஆதி இலக்குமி

உன்னைத் தொழுதேன்! உயிர்க்குப் புகலுதவும்
பொன்னே! முதல்திருவே! பூவளரும்—அன்னே!
எனதுள்ளம் என்றும் இனிப்பே அடையக்
கனிவுனது கண்மலராற் காட்டு.

## சந்தான இலக்குமி

காட்டும் திருக்கரத்தால், கந்தன் எனஅழகு
கூட்டும் மழலையால், குடும்பத்தால்—நாட்டில்
நிறைவளிக்கும் தாயே! நிகரில்லாத் தேனே!
துறையெதிலும் இன்பம் துலக்கு.

## கய இலக்குமி

துலங்குபொற் கும்பத் துதிக்கையால் ஆனை
நலங்கெழுநீர் ஆட்ட நயந்த—இலங்கிழையே!
கையேந்தி உன்பாற் கசிந்து தொழுகின்றோம்!
செய்யவளே! சீரெமக்குச் செய்.

## தன இலக்குமி

செய்ய திருமேனி செம்பொன் அணிசெறியக்
கைஇருக்கும் தம்பலத்துக் காரிகையே!-வையகத்தில்
என்றும் பொன் மாரியினால் இன்பம் தழைத்துயர
என்றென்றும் எம்பால் இரு.

## தானிய இலக்குமி

இருக்கும் இடமெங்கும் இன்கனியும் பூவும்
பெருக்கி மகிழ்வுதவும் பெண்ணே! —பருக் கரும்பை
ஏந்தும் திருமகளே! எங்கள் கழனியெல்லாம்
சேர்ந்து வளங்கொழிக்கச் செய்.

## விசய இலக்குமி

செய்யும் செயலெல்லாம் சீரோங்க வெற்றியினைப்
பெய்தளித்துக் காக்கும் பெருமாட்டி! — கையில்
வலத்தாழி சங்(கு)இடத்தாய்! வாழ்வில் நிறைவே
நிலைத்திருக்க என்றும் நினை.

## மகா இலக்குமி

நினைத்துத் தொழுதெழுந்தோம்! நேயத் திருமால்
மனைக்கு விளக்கே! மலரால் — உனக்கடிமை
செய்ஆனை போலுயர்ந்து சீர்கொண் டிலங்கவே
தையால்நீ யீவாய் தரம்.

## வீர இலக்குமி

தரமுயர்ந்த வீரம் தருக்கர்களை வாட்டக்
கரம்மருவு போர்க்கருவி காட்டி — வரமளித்து
வாகை புனைந்திலங்கும் வல்லிநீ எம்மனையிற்
சேர்க என்பணிந்தோம் சேர்ந்து.

## தொகை

சேர்ந்து பொருள்வளரச் செய்வாய் திருமகளே!
ஏந்துபுகழ் நானென்கும் எய்தியாம் — வேந்தரென
மன்னுலகில் வாழ மலர்மகளே மாயனுடன்
உன்னருளை எங்கட் குதவு.

# முருகப்பெருமான்
# படைவீட்டு வெண்பாமாலை

## திருப்பரங்குன்றம்

உரங்கொண்டும் வீறுயர்ந்தும் வாழ்வில் ஒளியால்
தரங்கொண்டு வாழத் தமிழாற் — பரங்குன்றம்
பாடுகிறோம்! முத்தய்யா! பார்த்து வளமெல்லாம்
கூடிடவே செய்வாய் குளிர்ந்து.

## திருச்செந்தூர்

அலைபாயும் நெஞ்சில் அமைதித் தேன்பெய்(து)
அலைவாயில் ஆளும் அரசே! — கலைவாழும்
நாவரசாய் நான்விளங்க நாளும் பணிந்திடுவேன்!
மாவரங்கள் ஈவாய் மகிழ்ந்து.

## பழநி

தென்றல் குளிர்ந்தினிக்கத் தேன்பெய் பழநிமிசை
நின்றருளும் கந்தன் நிறைகழலாற் — குன்றன்ன
செல்வங்கள் வாக்கு சிறந்தசுக வாழ்வெல்லாம்
நல்வகையே காண்போம் நயந்து.

## சுவாமிமலை

தந்தைக்கு வேதம் தமிழால் உரைத்தவனே!
சிந்தைக் கினியாய்! சிவன்மகனே! — உந்தன்
குலமெல்லாம் வாழக் குடிகொள் திருவால்
வலமெல்லாம் நாளும் வழங்க.

## திருத்தணிகை

வளத்தணிகை வாழ்வே! வயலூரின் தேவே!
இளைத்தயர்ந்தேன் வாழ்வில் இனிப்பே — விளைத்திடுவாய்!
வள்ளியுடன் வந்தால் வசமாகும் இவ்வுலகம்!
துள்ளிமயில் ஏறித் தொடர்.

## பழமுதிர்சோலை

பாலிற் குளிப்பாய்! பழமுதிரும் வெற்பாம்
சோலைப் பெருவாழ்வே! சொந்தமாய்க் — காலூன்றி
யானுயரக் கைகொடுப்பாய்! யானை மணவாளா!
தேனெனவே யீவாய் திரு.

